# இமயத்தின் சிரிப்பு

(பதினைந்து சிறு கதைகள் அடங்கியது)



ஆசிரியர்

"மஹதி"

விலை ரூபாய் இரண்டு

வெளியிட்டோர்

சாந்தி மன்றம்

நூல் வெளியீட்டகம்

கீழச் சந்தைப்பேட்டை :: மதுரை.

## பொருள் அடக்கம்




| | | | | |
|---|---|---|---|---|
| 1. | இமயத்தின் சிரிப்பு | ... | பக்கம் | 1 |
| 2. | ஆயிஷா ஸுல்த்தானு | ... | ,, | 20 |
| 3. | மேல் பதவி | ... | ,, | 30 |
| 4. | பொழுது புலர்ந்தது | ... | ,, | 42 |
| 5. | ஜரீனு | ... | ,, | 53 |
| 6. | விபரீத விளைவு | ... | ,, | 70 |
| 7. | மன நிறைவு | ... | ,, | 81 |
| 8. | சிங்கப்பூர் மாப்பிள்ளை | ... | ,, | 98 |
| 9. | இரண்டாம் தாரம் | ... | ,, | 111 |
| 10. | அவன் செயல் | .... | ,, | 126 |
| 11. | லாலா ரங் | ... | ,, | 135 |
| 12. | ராபியா | ... | ,, | 150 |
| 13. | முரடன் | ... | ,, | 165 |
| 14. | வீரத்தின் விலை | ... | ,, | 170 |
| 15. | நல்ல முடிவு | ... | ,, | 181 |




786

# முன்னுரை.

மனிதன் தன்னையே காண ஆசைப்படுகிறான். தன் உருவைக் கண்ணாடியில் கண்டு மகிழ்கிறான். தன் குரலைப் பதிவு செய்து கேட்டுப் பரவசம் அடைகிறான். தன் வாழ்க்கையைச் சித்தரிக்கும் கதைகளை விரும்பி வாசிக்கிறான். இக்காரணம் பற்றியே கதைகள், பண்டித, பாமர ரஞ்சிதமாகிவிட்டன.

முழு உருவையும் காட்டும் பெரிய நிலைக் கண்ணாடி, நாவல். முகத்தை மட்டும் பிரதிபலிக்கும் கைக் கண்ணாடி, சிறுகதை. வாழ்வின் ஓர் அம்சத்தை, ஆசிரியர் விரும்பும் ஒரு கோணத்திலிருந்து படம் பிடித்துக் காட்டுவதே சிறு கதையின் நோக்கமாகும். கைதேர்ந்த ஆசிரியர், கடுகைத் துளைத்துக் கடலைப் புகுத்தி விடலாம்.

இதுவரை சிறுகதைக்கு யாரும் இறுதியான இலக்கணம் வகுக்கவில்லை; வகுக்கவும் இயலாது. அவ்வாறு வகுத்தால், வளரும் கலைக்கு வேலி கட்டுவது போலாகும். ஒரு கதையைச் சுட்டி 'இதுதான் சிறந்த கதை' என்று கூறலாம். அவ்வளவுதான்.

தமிழில் முஸ்லிம்களின் வாழ்க்கையையும், உணர்ச்சிகளையும் படம் பிடித்துக் காட்டும் கதைகள் அதிகமாக வரவில்லை. ஆகவே நான் இதில் அதிகக் கவனம் செலுத்தியிருக்கிறேன்.

என் கதைகளில் பிரசாரம் இருப்பதாகக் கூறலாம். மக்களின் வாழ்க்கை, வளமாகவும், சிக்கல்கள் இல்லாமலும் இருந்தால், கலை, கலைக்காகவே இருந்து விட்டுப் போகலாம். கலை மக்களிடையே பிரசாரம் செய்ய வேண்டிய அவசியம் நேரும்போது, செய்வதில் தவறு ஒன்றும் இல்லை என்பதே என் கட்சி.

1930 ஆம் ஆண்டில், என்னுடைய முதல் கதை 'ஆனந்த போதினி' பத்திரிகையில் பிரசுரமாயிற்று. அன்று முதல் இன்றுவரை, பல்வேறு பத்திரிகைகளில், பல்வேறு புனை பெயர்களில் என் கதைகள் வெளியாகியிருக்கின்றன. நூல் உருவில் என் கதைகள் வெளிவருவது இதுவே முதல் தடவையாகும்.

வாசகர்களே சிறந்த விமர்சகர்கள். அவர்கள் இந்நூலை எவ்வளவுக் கெவ்வளவு ஆதரிக்கிறார்களோ, அவ்வளவுக் கவ்வளவு மென்மேலும் நூல்கள் வெளிவரும்.

இந்நூல் வெளிவர அருள் புரிந்த வல்லோனை வாழ்த்துகிறேன்.

மதுரை
1—7—'57.

ஆக்கியோன்
"மஹதி"

# இமயத்தின் சிரிப்பு

காலை பத்து மணி.

புதிய டில்லியில், வட்ட வடிவமாக அமைந்துள்ள அழகிய வியாபார ஸ்தலமான காஞட் சர்க்கிளில், தம்முடைய பெரிய ஜவுளிக்கடையின் கல்லாவில் உட்கார்ந்த வண்ணம் வீதியைப் பார்த்துக்கொண்டிருந்தார் குலாம் அலி.

வயது அறுபது-வழுக்கைத்தலை—தலையின் பின்புறம் நறைத்த ரோமங்கள்—கட்டான தேகம்—கம்பீரமான முகம்—சிவப்பு நிறம்.

விரைந்து செல்லும் விலையுயர்ந்த கார்களையும், பிளாட்பாரத்தில் அவசர அவசரமாகச் செல்லும் பாதசாரிகளையும், கார்களிலிருந்து நளினமாக இறங்கி கைகளில் அழகுப் பைகளுடன் கடைகளுக்கு வரும் நவ நாகரீக நங்கைகளையும், அவர்களிடம் கையேந்திப் பிச்சை கேட்கும் அலங்கோலமான மனித ஜீவன்களையும் அவர் கவனிக்கவில்லை. பார்வை வெளியே இருந்ததே ஒழிய அவர் எதையும் பார்க்கவில்லை. தம்மை மறந்து சென்றகால இருளிலே, ஞாபகசக்தி எனும் மின்விளக்கைக்கொண்டு எதையோ தேடிக்கொண்டிருந்தார்-சிந்தனையில் ஆழ்ந்திருந்தார்.

கடைக்காரப் பையன்—' சாய் ஸாப் !' என்று கூறிக்கொண்டே, அவர் முன், மேஜைமீது ஆவிபோகும் தேநீர்க் கோப்பையை வைத்தான்,

குலாம் அலியின் சிந்தனை கலைந்தது. கோப்பையைக் கையில் எடுத்துக் கொஞ்சம் கொஞ்சமாக தேநீரைச் சுவைத்துக் குடிக்கத் தொடங்கினார்.

'படபட'வென்று மோட்டார் சைகிளில், அவருடைய ஒரே அருமைக் குமாரனான ஹஸனலி வந்து இறங்கினான். வயது இருபது இருக்கும். நல்ல அழகன்—அச்சில் வார்த்து எடுத்த அங்க அவயவங்கள்— தங்க நிறம். நீல நிற லினன் சூட்டும், நீல நிற மூக்குக் கண்ணாடியும் அணிந்திருந்தான்.

தம்முடைய மகனை பெருமிதத்தோடு பார்த்தார் குலாம் அலி. சிறுவயதிலேயே நுண்ணறிவும், வியாபார சாமர்த்தியமும் கொண்டவனாய் அவன் விளங்கினான்.

'வா! மகனே! இப்படி உட்கார்!' என்று தமது அருகே இருந்த சோபாவைக் காண்பித்தார் குலாம் அலி.

அப்படி அவர், மகனை அருகில் உட்காரும்படிக் கூறும்போது எல்லாம் நிறைய உபதேசங்கள் செய்வார். அவன் செய்த தவறுகளை எடுத்துக் காண்பிப்பார். ஆகையால் ஹஸனலியின் முகம் வாடிற்று. அவன் எதையும் கேட்கத் தன் மனத்தைத் திடப்படுத்திக்கொண்டான். 'நேற்று இரவு, கடைசி சினிமா ஆட்டத்துக்கு ஏன் போனாய்?' என்று தானே கேட்கப்போகிறார் என்று நினைத்துக்கொண்டான். தந்தையின் முகத்தைக் கண் கொட்டாமல் பார்த்தவண்ணம் சோபாவில் உட்கார்ந்து கைக்குட்டையால் முகத்தைத் துடைத்துக்கொண்டான்.

ஹஸனலி மீது கனிவான பார்வையை வீசினார் குலாம் அலி. கடைசி வாய் தேநீரை உறிஞ்சி, கோப்பையைக் காலிசெய்து மேஜைமீது வைத்தார்.

தன்னுடைய நெஞ்சின் ஆழத்தையே தந்தையின் பார்வை துளாவுவதாகக் கருதினான் ஹஸனலி. அவன் உடம்பு சிலிர்த்தது.

'உம்! ஒன்றும் இல்லை மகனே! இந்தத்தடவை சால்வைகளும், கம்பளிகளும் கொள்முதல் செய்வதற் காக உன்னை காஷ்மீருக்கு அனுப்ப உத்தேசிக்கிறேன். குளிர்காலம் நெருங்கி வருகிறது. நம்மிடம் இருப்பு இல்லை என்பதை நீ அறிவாய்.' -என்று கூறி கம்பளிகள் இருக்கும் பக்கம் பார்வையைச் செலுத்தினார் குலாம்அலி.

ஹஸனலியும் பார்த்தான். கம்பளிகளும், சால்வை களும் குறைவாயிருந்தன.

பூலோக சொர்க்கமாகிய காஷ்மீருக்குப் போக வேண் டும் என்று ஹஸனலியின் இதய ஆழத்திலே நெடுங்கால மாகவே ஆசை குமிழியிட்டுக்கொண்டிருந்தது. வீண் செலவு செய்துகொண்டு போகாமல், வியாபார நிமித்தம் போக நேருவதைப்பற்றிக் குதூகலம் அடைந்தான். நிமிர்ந்து உட்கார்ந்தான்.

'ரொம்ப சரி அப்பா! போய் வருகிறேன்!' என்றான் உற்சாகத்துடன்.

மீண்டும் அவனை ஏற இறங்கப் பார்த்தார் குலாம்அலி.

'என்ன அப்பா பார்க்கிறீர்கள்? நான் மலிவாகக் கொள்முதல் செய்வேனா இல்லையா என்று சந்தேகிக் கிறீர்களா? ஒரு தடவை அனுப்பிப் பாருங்கள்!' என்றான் உவகையுடன்.

'உன் வியாபாரத் திறமையில் எனக்கு நம்பிக்கை உண்டு ஹஸன்......ஆனல்.......'

'ஆனல், என்ன அப்பா?'

'உம்!—ஒன்றுமில்லை. நீ இளங்காளை. கொள்முதல் சீக்கிரம் செய்துகொண்டு ஊர் திரும்பி விடுவாயோ அல்லது காஷ்மீரின் இயற்கை அழகில் லயித்து நெடுநாள் வீண்செலவு செய்துகொண்டு இருந்துவிடுவாயோ என்று தான் யோசிக்கிறேன்.'

'இல்லை அப்பா,! இல்லை! ஒருபோதும் அனவசியமாகத் தங்கமாட்டேன்!'

'சரி! போய் வா! நாளை பதான்கோட் எக்ஸ்பிரஸில் புறப்பட்டு விடு. இஸ்லாமாபாத், குல்மர்க், பஹல்காம் ஆகிய ஊர்களில் தயாரிப்போரிடமிருந்து நேரில் கொள் முதல் செய். தரகர்களை நம்பாதே. அவர்கள் விலை அதிகம் வாங்கி விடுவார்கள். பட்காம் மட்டும் போகாதே. அந்த ஊரில் மோசக்காரர்கள் அதிகம். உன்னை ஏமாற்றி விடுவார்கள். தெரிகிறதா'— என்ருர் குலாம் அலி.

'சரி! அப்படியே செய்கிறேன் அப்பா!' என்ருன் ஹஸன்.

∴ ∴ ∴

மறுநாள் ஹஸனலி காஷ்மீருக்குப் புறப்பட்டு விட்டான். பதான்கோட் எக்ஸ்பிரஸில் பதான்கோட் வரை சென்ருன். அங்கிருந்து விமானம் ஏறி ஸ்ரீநகர் புறப்பட்டான்.

ஸ்ரீ நகரில் போய் விமானம் இறங்கு முன், வழியில் அசைந்தாடும் பொற் கதிர்களும், அடர்ந்த சீடு, செனூர் மரத் தோப்புகளும், தேவதாரு காடுகளும் அவன் உள்ளத்தைக் கொள்ளைகொண்டன.

ஸ்ரீநகரை விமானம் அணுகியதும் ஒருபுறம் மாபெரும் ஜீலம் நதியும், மறுபுறம் அழகிய கடல் போன்ற தால் தடாகமும் அவன் நெஞ்சை அள்ளின.

விமான நிலையத்தில் இறங்கி, ஆறு மைல் தூரத்தில் உள்ள தால் தடாகத்துக்குக் காரில் சென்றான். சாலையின் இரு மருங்கும் வரிசையாக அணிவகுத்து நின்ற கம்பீர மான போம்பிளார் மரங்கள், அவனை வரவேற்க நின்ற போர் வீரர்களைப்போல் காணப்பட்டன. திரும்பிய திசை எங்கும் பழத் தோட்டங்களும், நந்தவனங்களும் காட்சி யளித்தன. தால் தடாகத்தை வந்து அடைந்ததும் 'ஷிகாரா' எனும் சிறு படகில் ஏறிச் சென்று தடாகத்தின் நெஞ்சிலே மிதக்கும் அழகிய மாளிகை போன்ற பெரிய படகு ஒன்றில் தங்கினான்.

படகா அது? ராஜபவனம்! அழகிய முன் கட்டம்—கலையழகு மிளிர தயாரிக்கப்பட்ட சோபாக்கள்—தரை யெங்கும் மென்மையான கம்பள விரிப்பு—அக் கம்பளங் களிலும், சாளரங்களின் திரைகளிலும் வித விதமான சித்திர விசித்திரங்கள்—சாப்பாட்டு மேஜைகள்-கண்ணாடி கள்—கட்டில்கள்—பீரோக்கள் - மெத்தைகள்-படுக்கும் அறை-ஸ்நான அறை-மெத்தைக்குப் போக மரப்படிகள்-பின்புறம் தனித்து மிதக்கும் சமையல் படகு—இரண்டை யும் இணைக்கும் மரப்பாலம்—யாவும் காஷ்மீர் மக்களின்

கலையுணர்ச்சிக்கு எடுத்துக்காட்டுகளாக விளங்கின. ஒவ்வொரு பொருளும், ஒவ்வொரு காட்சியும் 'காஷ்மீரமே சொர்க்கம்!' என்று கீதம் இசைத்தது.

இவை அனைத்தையும் கண்டு ஹஸனலி பரவசம் அடைந்தான்.

∴ ∴ ∴

எப்போதும் காலை எட்டுமணி வரை தூங்கும் அவன், கருக்கலிலேயே எழுந்து விட்டான். இன்னும் சூரியன் உதயமாகவில்லை.

ஒளி விட்டுப் பிரகாசித்து, ஒளி குன்றிப்போன முஸ்லிம் சமூகத்தைப்போல் காட்சியளித்தது மேற்கே தேய்பிறை.

இரவில் ஆண்டவன் வானத்திலே ஏற்றிய விளக்குகளாகிய நட்சத்திரங்களை, இயற்கைச் சேவகன் அணைத்துக்கொண்டிருந்தான்.

படகின் மேல்மாடியிலிருந்து காஷ்மீரின் நெஞ்சையள்ளும் காட்சியை ரசித்துக்கொண்டிருந்தான் ஹஸன்.

'பச்சைப் பசேல்' என கண்குளிர விளங்கும் புல்வெளிகள், இமயத்தின் மடியிலே வளர்ந்ததற்காகப் பெருமையோடு தலைநிமிர்ந்து ஆடும் உயர்ந்த—செழிப்பான மரங்கள், வாழ்க்கைக் கீதத்தை இசைத்துக்கொண்டு ஓடும் நீரோடைகள்,ஞானியின் இதயத்தைப்போல் விளங்கும் சாந்தமான ஏரி, அந்த ஏரியின் நெஞ்சுமீது விளையாடும் ஓடங்கள், இவை யனைத்தும் அவனுக்கு ஒரு புது

உலகத்தின் தோற்றத்தை அளித்தன. தூரத்திலே வெள்ளைத் தலைப்பாகை அணிந்து, தவஞ் செய்யும் ரிஷிகளைப் போன்று காட்சியளித்த பனிமுடிய சிகரங்கள். அவனுக்குக் கிளு கிளுப்பை மூட்டின.

சின்னஞ்சிறு படகுகளில் உட்கார்ந்து கொண்டு துடுப்புகளால் நீரைக் கிழித்து, ஒவ்வொரு மிதக்கும் மாளிகைக்கும் வந்து, காய்கறிகள், இன்சுவைக் கனிகள், வண்ண மலர்கள் விற்பனை செய்தார்கள் காஷ்மீர் மக்கள். ஏரியில் சிறுவர், சிறுமியர் கொஞ்சமும் பயமின்றி நீராம்பலை ஒதுக்கித் தள்ளிக்கொண்டு படகைச் செலுத்திச் சென்றனர். அவர்களுடைய எளிய ஆடை, நேர்மையுள்ளம், இனிய புன்னகை, களங்கமற்ற அழகு இவற்றில் ஹஸனலி மயங்கினான்.

∴ ∴ ∴

அவன் ஊர் ஊராகச் சென்றான். கம்பளிகளும், சால்வைகளும் கொள்முதல் செய்தான். சில இடங்களுக்குக் குதிரைகளிலும் செல்ல வேண்டியதாயிற்று,

பஹல்காம் ஊரில் வந்து தங்கினான்.

ஒருநாள் மாலை, ஹோட்டலின் மேல்மாடியில் நின்றிருந்தான்,

'குளு குளு' வென்று வீசிய தென்றல், ஒரு தனி இன்பத்தை அளித்தது. அவன் மெய்ம்மறந்து நின்றிருந்தான். 'ஙொய்' என்று முகத்தின் எதிரே ஒரு வண்டு பறந்து வந்து அவனுடைய கடமையை ஞாபகப் படுத்திற்று.

தந்தை சொன்னவை முற்றிலும் உண்மை. இந்த இயற்கை அழகில் லயித்தவர்கள், மீண்டும் வீடு திரும்ப இசையமாட்டார்கள். காரியத்தில் கண்ணுயிருக்க வேண்டும். இல்லையேல் மறுமுறை தந்தை இங்கு அனுப்ப மாட்டார் என்று அவன் கருதினன்.

கொள்முதலில் தீவிரமாக ஈடுபட்டான். காரியத்திலேயே கண்ணுயிருந்தான். ஊர் ஊராகச் சென்றபின் அவன் ஓர் அதிசய உண்மையைக் கண்டான். காஷ்மீர் மக்களின் இரத்தக் கண்ணீர் வடிக்கத்தக்க வறுமைதான் அது.

அத்தகைய அழகிய பூலோக சொர்க்கத்திலே வாழும் மக்கள் பட்டினியும், பசியுமாய் அழுக்கடைந்த பீத்தல்களை அணிந்துகொண்டு எத்தகைய ஊழியத்தையும் இழிவாகக் கருதாமல் செய்து வயிறு வளர்த்து வருகிருர்கள். 'பச்சைப் பசேல்' என்று விளங்கும் நெடிய வயல்கள், பழமுதிர் சோலைகள், மாடமாளிகைகள், ஆகிய யாவும் வெளியாருக்குச் சொந்தமானவை. சொந்த நாட்டில் காஷ்மீர் மக்கள் வெளியார்களின் ஊழியர்கள். அழகிய சால்வைகளையும், கம்பளிகளையும் உலகுக்கு அளிப்போர் குளிர்மிக்க இரவுகளில் கோணிகளைப் போர்த்துக்கொண்டு காலம் கடத்துவதை உலகம் எப்படி அறியும்?

ஹஸன் வி வாங்கி அனுப்பிய சரக்குகளைப்பற்றி தந்தை புகழ்ந்து கடிதங்கள் எழுதினர். ஆனல் ஒவ்வொரு கடிதத்திலும் பட்காம் கிராமத்துக்கு மட்டும் போகவேண்டாம் என்று வற்புறுத்தி எழுதியிருந்தார்.

எதைச் செய்யவேண்டாம் என்று வற்புறுத்துகிருரோ அதைச் செய்து பார்க்கவேண்டும் என்று ஆசை கொள்வதுதான் மனித இயல்பு.

பட்காம் மட்டும் போகவேண்டாம் என்று தந்தை வற்புறுத்துவதன் காரணம் ஹஸனுக்குப் புரியவில்லை. அங்குமட்டும் மோசக்காரர்கள் வாழக் காரணம் என்ன? அவன் கண்ட காஷ்மீரிகள் அனைவரும் கல்வியற்றவர்களாகவும், வெகுளிகளாகவும் காணப்பட்டார்கள். ஆகையால் ஹஸன், பட்காம் கிராமத்தின் மோசக்காரர்களையும் பார்த்துவிட ஆசைப்பட்டான். அடுத்தநாளே பட்காம் சென்றான்.

வழக்கம்போல் காரியங்களைக் கவனித்துவிட்டு மாலையில் உலாவச் சென்றான். அன்று அவன் சந்தித்த காஷ்மீரிகள் அனைவரும் நல்லவர்களாகவே காணப்பட்டார்கள். மோசக்காரர் எவரையும் சந்திக்கவில்லை.

அவன் பட்காம் கிராமத்தின் வெளிப்புறத்தில் போய்க்கொண்டிருந்தான். சாலையோரம் ஓர் இளநங்கை, ஆட்டுமந்தை ஒன்றை மேய்த்துக்கொண்டிருந்தாள். வயது பதினாறு இருக்கும். பருவம் அவளுடைய அங்க அவயவங்களில் அதிசய சோபையை உண்டாக்கியிருந்தது. அவள் அணிந்திருந்த கந்தைகளைக் களைந்தெறிந்துவிட்டு, நன்கு குளிப்பாட்டி, நவநாகரீக ஆடைகளை அணிவித்துவிட்டால், ஆஹா! அவள் உலகிலேயே சிறந்த அழகியாக விளங்குவாள்.

ஹஸன் அவளைப் பார்த்தான். அவள் ஹஸனைப் பார்த்தாள்.

பார்வைகள் பட்டுத் தெறித்தன. ஹஸனின் பார்வை கூச்சமடைந்து இயற்கைக் காட்சியைக் காணுவதைப் போல் பாவனை செய்தது. அவன் போகவும் முடியாமல், நிற்கவும் முடியாமல் தவித்தான்.

அவளோ கொஞ்சமும் கூச்சமில்லாமல் அவனருகே வந்தாள். 'என்ன பார்க்கிறீர்கள் பாபுஜி?' என்று கேட்டாள்.

அவளுடைய கேள்வியின் தொனி, அவளுடைய கள்ளங் கபடமற்ற நெஞ்சத்தைத் தெளிவுபடுத்திற்று. அவளுக்கும், அவள் மேய்த்துக்கொண்டிருந்த ஆடுகளுக்கும் யாதொரு வேற்றுமையும் காணப்படவில்லை.

ஹஸன் கலவரமடைந்தான். ஆயினும் சமாளித்துக் கொண்டு 'அதோ! அதோ! அந்த அழகிய மலைச் சிகரத்தின் காட்சியைப் பார்க்கிறேன்' என்று தயங்கித் தயங்கிக் கூறினன்.

அவள் 'களுக்' கென்று சிரித்து, 'அந்த மாதிரிக் காட்சிகள் எங்கும் இருக்கின்றனவே! இங்கு மட்டும் என்ன விசேஷம்?' என்று வினவினாள் குருகுருத்த பார்வையுடன்.

ஹஸன் பதில் கூற முடியாமல் திகைத்துப் போனன். பிறகு நிதானமடைந்து, 'இருந்தாலும் உங்கள் ஊர் காட்சி மிகவும் ரம்மியமாயிருக்கிறது. இயற்கை அழகு இங்கே சிரிக்கிறது' என்ருன்.

'என்ன? என்ன? அழகு சிரிக்கிறதா? ஹி...ஹி ....ஹி-ஆம் பாபுஜி! தன் மடியில் வாழும் மக்களின் பரிதாபகரமான நிலையைக்கண்டு அழகு சிரிக்காமல் என்ன செய்யமுடியும்?.... இங்கே என்ன இருக்கிறது பாபுஜி? காடும்! மலையும்! வறுமையும்! உங்கள் ஊரில்தான் பெரிய பெரிய கட்டிடங்களும், நல்ல நல்ல சாப்பாடும்,

நல்ல நல்ல துணிமணிகளும் இருக்கின்றன. நாங்கள் அவற்றைக் காண ஆசைப்படுகிறோம். நீங்கள் இதைக் காண வருகிறீர்கள்' என்றாள் அவள்.

'ஆம்! அவை எல்லாம் அங்கு இருக்கின்றன. ஆனால் இந்த இயற்கை அழகு–இந்த மனிதப் பண்பு–இந்த எளிய வாழ்க்கை அங்கு இல்லை' என்றான் ஹஸன்.

'ஆமாம்! உங்கள் ஊர்க்காரர்கள் அனைவரும் மோசக்காரர்கள்—ரொம்ப கெட்டவர்கள், இல்லையா?' என்று கேட்டாள் அவள்.

*ஹஸன் திகைத்துப்போனான், 'நானல்லவா அந்தக்* கேள்வியை உன்னிடம் கேட்க விரும்பினேன். உங்கள் ஊர்க்காரர்கள்தாம் ரொம்ப கெட்டவர்கள் என்று என் தந்தை சொன்னாரே! எங்கள் ஊர்க்காரர்கள் கெட்டவர்கள் என்று உன்னிடம் யார் சொன்னது?'

'என் அம்மாதான் சொன்னாள். எங்கள் ஊர்க்காரர் யாரைக் கேட்டாலும் இதையேதான் சொல்லுவார்கள். எங்கள் ஊர்க்காரர்களைப் போல் நல்லவர்கள் இந்த உலகிலேயே இல்லை. தெரியுமா?' என்றாள் அவள் பெருமிதத்துடன்–தலையை உயர்த்தி.

'அப்படியா! அப்படியானால் யார் கூறுவது உண்மை என்று தெரியவில்லையே! இருக்கட்டும்! இவை உன் ஆடுகளா? ஒன்று என்ன விலை?'

'இவை என் ஆடுகள் இல்லை. விலையும் எனக்குத் தெரியாது. நான் கூலிக்கு மேய்க்கிறேன்.'

'உனக்கு எவ்வளவு கூலி?'

'மாதம் ஐந்து ரூபாய் கொடுப்பார்கள். தினம் ஆடு களைக் குளிப்பாட்டிக் கொண்டுபோய் விட்டால் ஆறு ரூபாய் கொடுப்பார்கள். அவ்வளவுதான்!'

'ஆறு ரூபாய்களா? இதைக் கொண்டு எப்படிப் பிழைக்க முடியும்?'

'என்ன செய்வது? வேறு வேலையும் கிடையாது; அதிகக் கூலியும் கிடைக்காது. என் அம்மா கம்பளி நெய்வாள். தினம் பத்தணு கூலி கிடைக்கும். அதில் தான் காலங் கடத்த வேண்டும்.'

'உன் அப்பா என்ன செய்கிருர்?'

'என் அப்பா இல்லை. மவுத் ஆகி விட்டார்.'

'வேறு பந்துக்கள் இல்லையா?'

'இருக்கிருர்கள், ஆனால் அவர்கள் எங்களைக் காட்டிலும் ஏழைகள்.'

'நீ தினசரி இங்கேதான் ஆடுகளை மேய்ப்பதா?'

'ஆமாம்!'

'உன் பெயர் என்ன?'

'குல்னி'

'அடே! நல்ல பெயராயிருக்கிறதே! குல்னி என்ருல் மொக்கு என்று அர்த்தமல்லவா?'

'ஆம்! பெயர் நன்ருகத்தான் இருக்கிறது; நானும் நன்ருகத்தான் இருக்கிறேன். என் தலைவிதிதான் நன்ருக இல்லை.'

ஹஸனலிக்கு அவள்மீது பச்சாத்தாபம் ஏற்பட்டது. அவள் நிலைமைக்காக அழவேண்டும் போல் தோன்றிற்று. 'சரி! நான் வருகிறேன்' என்று, அவளிடம் விடை பெற்றுக்கொண்டு திரும்பினான். கண்கள் அவள் பக்கமே திரும்பின; கால்கள் நடக்க விரும்பவில்லை.

இவர்களின் உரையாடல்களைப் பின்னாலிருந்து கேட்டுக்கொண்டிருந்த ஒரு சிறுவன், ஹஸனைப் பின்தொடர்ந்தான். அவன் பல துண்டுகள் போட்டுத் தைத்த சட்டையை அணிந்துகொண்டு, தலையில் ஒரு பீத்தல் முண்டாசைக் கட்டியிருந்தான்.

அவன் பின் தொடருவதை ஹஸனலி கவனிக்கவில்லை. தான் தங்கியிருந்த ஹோட்டலுக்கு வந்து ஆடைகளை மாற்றிக்கொண்டு வெளியே வந்தான்.

அச் சிறுவன் வராந்தாவில் இருந்த தூண் ஒன்றைக் கட்டி அணைத்துக்கொண்டு, ஹஸனலியைக் கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தான்.

'யாரடா நீ? என்ன செய்கிறாய் இங்கே?' என்று கேட்டான் ஹஸன்.'

'ஹி........ஹி.......ஹி....ஒன்றுமில்லை பாபுஜி! சும்மா நிற்கிறேன்' என்றான் அச்சிறுவன்.

ஹஸனுக்கு அவன்மீது இரக்கம் உண்டாயிற்று. ஓர் அணா எடுத்து அவனிடம் கொடுத்து, அவனைக் குஷிப்படுத்தி, அவ்வூரைப்பற்றிய விவரத்தை விசாரிக்க ஆவல் கொண்டான்.

ஹஸனவி, 'டேய்! இங்கே வா!' என்ருன். அச் சிறுவன் குதூகலமடைந்தவனுய் நெருங்கினுன்.

ஹஸன் நாற்காலியில் உட்கார்ந்துகொண்டு, அச் சிறுவனே அருகில் இருந்த பெஞ்சில் உட்காரும்படிக் கூறினுன்.

'இல்லே பாபுஜி! நான் கீழேயே உட்காருகிறேன்' என்று அவன் தரையில் உட்கார்ந்து கொண்டான்.

'நீ என்ன செய்கிருய்?' என்று கேட்டான் ஹஸன்,

'சும்மாதான் ஊர் சுற்றுகிறேன்'

'படிக்கப் போவதில்லேயா?'

'படிக்கவா? பள்ளிக்கூடமே இல்லேயே எங்கள் ஊரில்'

'இந்த ஊரில் உள்ள பையன்கள் எல்லாரும் என்ன செய்கின்றனர்?'

'ஆடு மேய்ப்பார்கள். உங்களேப் போன்றவர்கள் வந்தால் அவர்களுக்கு ஊழியம் செய்து பிழைப்பார்கள். நானும் தங்களிடம் வேலேக்கு இருக்கட்டுமா? உங்களுக்கு வேண்டிய வேலே எல்லாம் செய்து கொடுப்பேன் பாபுஜி.'

'என்ன கூலி கொடுத்தால் வேலே செய்வாய்?'

'நீங்கள் சாப்பிட்டு மிஞ்சியதைக் கொடுத்தால் வேலே செய்கிறேன்.'

'சரி! அப்படியே இரு! இதோ அச்சாரம் நாலணு!' என்று நாலணுவை எடுத்து அச் சிறுவனிடம் கொடுத்தான் ஹஸன்.

சிறுவனுக்குக் குஷி தாங்க முடியவில்லை. 'பாபுஜி! பாபுஜி! அப்போது உங்களுடன் பேசிக்கொண்டிருந்தாளே! குல்னி! அவளுக்கும் காசு கொடுத்தால் உங்களுக்காக வந்து வேலை செய்வாள். அவளையும் நான் அழைத்து வரட்டுமா? அவள் அம்மாவை எனக்குத் தெரியும். அவளிடம் சொன்னுல் அனுப்பிவிடுவாள். நீங்கள் இருக்கும் வரை வைத்திருந்து அனுப்பலாம். இரவுகளிலும் இங்கேயே வைத்திருக்கலாம்.

*இவ்வுரையைக் கேட்டதும் பிரமித்துப் போனுன் ஹஸனலி.*

சிறுவன் தொடர்ந்தான் :—

*'ஒன்றும் யோசிக்க வேண்டாம் பாபுஜி! எங்கள் எல்லா ஊர்களிலும் இந்த வழக்கம் உண்டு. தாய் தந்தையரே தங்கள் பெண்களைப் பணக்காரர்களிடம்* கொண்டு வந்து விட்டுப் போவார்கள். நாங்கள் ரொம்ப ஏழைகள். அதனுல்தான்........!'

*ஹஸன் தயங்கினுன். பிறகு துணிவுகொண்டு 'சரி! முதலில் நீசொன்னபடி அவ்ளுடைய தாயாரை அழைத்து வா! சம்மதத்தைத் தெரிந்துகொண்டு குல்னியைத் தருவிக்கலாம்!' என்றுன்.*

'இதோ! வந்துவிட்டேன்!' என்று அச் சிறுவன் ஓட்டோடியும் சென்று, ஒரு நடுத்தர வயதுடைய மாதை அழைத்து வந்தான்.

சோகமே உருவான அம்மாது, வறுமையால் எவ்வளவு வாடிப் போயிருப்பினும், இளமையில் நிகரில்லா அழகியாயிருந்திருப்பாள் என்று யாரும் ஊகித்துக் கொள்ளலாம்.

அவள் வந்து, மரியாதையாக ஹஸன் முன், தரையில் உட்கார்ந்தாள். ஹஸனின் இளமை ததும்பும் அழகிய முகத்தைக் கொஞ்ச நேரம் பார்த்தவண்ணம் மௌனமாயிருந்தாள். ஹஸனின் நெஞ்சைத் துருவி ஆராய்ந்து கொண்டிருந்தது அவள் பார்வை. சிறிது நேரத்தில் கண்களில் நீர் தளும்பிற்று. முகத்தை வேறு பக்கமாகத் திருப்பித் துடைத்துக் கொண்டாள்.

ஹஸனின் மனம் இதைக் கண்டு வேதனைப்பட்டது. அவளுடன் என்ன பேசுவது என்று தெரியாமல் மௌனமாயிருந்தான்.

அம் மாதே பேச்சைத் தொடங்கினாள்.

'பாபுஜி! குல்னி என் ஒரே அருமை மகள். இதுவரை யாருடைய கையும் படாத மொட்டு. தங்களிடம் முதன் முறையாக ஒப்பிக்கிறேன். தாங்கள் பார்த்துக் கொடுப்பதைக் கொடுங்கள். நான் என்ன கேட்கப்போகின்றேன்? தங்களுக்குத் தெரியாதது என்ன இருக்கப் போகிறது?'

அவளுடைய ஒவ்வொரு சொல்லும் இதய ஆழத்திலிருந்து சோகத்தோடு வெளி வந்தது.

ஹஸனின் நெஞ்சம் கலங்கி விட்டது. தான் கொண்ட கெட்ட நோக்கத்தை விடுத்து குல்னியை உண்மை

யாகவே கலியாணம் செய்துகொண்டு ஊருக்குக் கூட்டிக் கொண்டு போய்விட வேண்டும் என்று எண்ணங் கொண் டான். இளைஞன் ஆகையால் லட்சிய வீரம் கிளர்ந்து எழுந்தது.

'அம்மா! நான் குல்னியை உண்மையாகவே மணந்து, ஊருக்குக் கூட்டிக் கோண்டுபோக அனுமதிப் பீர்களா? அவள் மிகவும் நல்லவள். அவள் இருக்க வேண்டிய இடம் இதுவல்ல. நான் அவளை உண்மை யாகவே காதலிக்கிறேன்.' என்றான் ஹஸன் உணர்ச்சியோடு.

அம் மாது புன்னகை புரிந்தாள்.

'இப்படித்தான் உங்கள் ஊரிலிருந்து வருகிறவர்கள் முதலில் கூறுகிறார்கள். பிறகு ஏமாற்றி விடுகிறார்கள். இதே வார்த்தைகளைத்தான் பதினேழு வருஷங்களுக்கு முன் உங்களைப் போலவே இருந்த ஒருவர் என்னிடம் கூறினார். இங்கிருக்கும் வரை என்னுடன் வாழ்ந்தார். சீக்கிரம் வந்து கூட்டிக்கொண்டு போவதாகச் சொல்லி ஊருக்குப் போனவர்தான்! இன்றுவரை திரும்பவில்லை. தவறான விலாசத்தைக் கூடத் தெரிவித்துச் சென்றார். அந்த விலாசத்துக்கு எழுதிய தபால்கள் திரும்பி வந்து விட்டன. அவருக்குப் பிறந்தவள்தான் குல்னி' என்று அம் மாது கூறி அழுதுவிட்டாள்.

'மகா பாதகர்கள்! வஞ்சகர்கள்! சிரிக்க வைக்க வேண்டிய அழகை, அழச் செய்யும் கயவர்கள்! அந்த விலாசதாரன் என் கையில் அகப்பட்டால் துண்டு துண் டாக வெட்டிக் குவித்து விடுவேன்!' என்று கர்ஜித்தான் ஹஸன் கோபத்தோடு.

அம் மாது தன் கழுத்தில் தொங்கிய 'லாக்கெட்' ஒன்றைக் கழற்றி அவனிடம் கொடுத்து 'இதோ! அவருடைய படம் கூட இருக்கிறது!' என்று சொன்னாள்.

ஹஸன் ஆவலுடன் அந்த லாக்கெட்டை வாங்கிப் பிரித்தான். அவன் மண்டையில் சம்மட்டியால் ஓங்கி யாரோ அடித்தது போல் இருந்தது. கற்சிலை போல் சமைந்துவிட்டான்.

அந்த லாக்கெட்டில் ஒருபுறம் தன் தந்தையின் படமும், மறுபுறம் 'குலாம் அலி' என்ற பெயரும் பொறிக்கப்பட்டிருந்தன. அப்படியானால் 'குல்னி' தங்கையாயிற்றே! அந்தோ! என்ன காரியம் செய்ய இருந்தேன்?.

அவன் கைகால்கள் வெடவெடத்தன. உச்சந்தலையிலிருந்து உள்ளங்கால் வரை வியர்த்துக் கொட்டிற்று. நெஞ்சம் பதறிற்று. அதேசமயம் 'ஹஸனலி என்பவர் யார்?' என்று கேட்டுக் கொண்டே தந்திச் சேவகன் உள்ளே வந்தான்.

'நான்தான்!' என்று ஹஸனலி கூறவே, கையெழுத்தைப் பெற்றுக் கொண்டு தந்தியைக் கொடுத்தான் சேவகன்.

ஹஸனலி அவசர அவசரமாகப் பிரித்துப்படித்தான்.

'தங்கள் தந்தை குலாம்அலி மாரடைப்பால் திடீர் மரணமடைந்தார். உடனே புறப்படவும்' என்று அத் தந்தியில் கண்டிருந்தது.

அவன் கண்களில் நீர் தளும்பிற்று. தன் வசமிருந்த ரூபாய்களில் செலவுக்கு வேண்டியது போக மீதியை

எதிரே உட்கார்ந்திருந்த தன் சிற்றன்னை வசம் கொடுத்து விட்டு, உடனே ஊர் கிளம்பிவிட்டான். பட்காம் போக வேண்டாம் என்று தன் தந்தை தடுத்த காரணம் அப் போதுதான் அவனுக்கு விளங்கிற்று.

அவனும் இதுவரை திரும்பவில்லை; தான் யார் என்பதையும் தெரிவித்துப் போகவில்லை.

அவன் காஷ்மீரை விட்டுப் புறப்படும்போது இமயம் அவனைக் கண்டு சிரிப்பதைப் போல தோன்றிற்று.

'ஹா! ஹா! ஹா! காஷ்மீர் அழகாகவே இருக் கிறது! காஷ்மீரிகளும் அழகாகவே இருக்கிறார்கள்! ஆனால் அவர்கள் வாழ்க்கை அழகாயில்லை என்பதை எத்தனை பேர் அறிவார்கள்?' என்று கேட்டு இமயம் சிரித்தது.



# ஆயிஷா ஸுல்த்தானு

பொழுது சாய்ந்ததும், சக்ரவர்த்தி ஷாஜஹானின் இளைய குமாரி ரோஷனாராவின் அரண்மனை ஒளிபெற்று விளங்கிற்று. அன்று நவ்ரோஸ் விழா. மொகலாய அரச குடும்பத்தினர் அனைவரும் விருந்துக்காக வந்து குழுமி யிருந்தனர். அந்தப்புரம் ஒரே கோலாகலமாயிருந்தது.

தோட்டத்தில் இளம்பெண்கள் கூடி மத்தாப்புகளைக் கொளுத்திக் கொண்டிருந்தார்கள், அந்த அழகியருள், நட்சத்திரங்களினூடே தோன்றும் பூரண நிலவைப் போன்று, ஷாஜஹானின் இரண்டாவது குமாரர் ஷுஜா வின் குமாரி ஆயிஷா ஸுல்த்தானுவும் காணப்பட்டாள். அவளுடைய அழகிய முகம், மத்தாப்புகளின் பல வர்ண ஒளிபட்டு மேலும் எழில்பெற்று விளங்கிற்று.

அந்தக் கண்கொள்ளாக் காட்சியை அருகிலேயே செடி மறைவிலிருந்து, அவுரங்கஜேபின் மூத்த குமார னை முஹம்மத் பார்த்து ரசித்துக் கொண்டிருந்தான்.

திடீரென பெண்களிடையே பரபரப்பு ஏற்பட்டது. ஸுல்த்தானு அலறினாள். அவளுடைய ஆடையில் அகஸ்மாத்தாய் மத்தாப்பு விழுந்து தீப்பிடித்துக் கொண்டது.

ஆபத்தை உணர்ந்ததும், செடி மறைவிலிருந்த முஹம்மத் பாய்ந்து வந்தான். இதர பெண்கள் விலகிக் கொண்டனர். முஹம்மத் ஸுல்த்தானுவின் ஆடைகளைக்

கைகளால் கசக்கித் தீயை அணைத்தான். நல்லவேளையாக அவள் உயிர் தப்பினாள்; ஆனால் முஹம்மதின் கைகளில் தீக்காயங்கள் பட்டன.

சிறிது நேரத்தில் அவர்களுடைய அத்தை ரோஷனாரா வந்து இருவரையும் உள்ளே அழைத்துச் சென்றாள்.

அன்றிரவு வெகுநேரம் கழித்தே அனைவரும் படுக்கைக்குச் சென்றனர். முஹம்மத் கையில் கட்டுகளுடன் படுக்கையில் புரண்டுகொண்டு கிடந்தான். அவனுக்குத் தூக்கம் வரவில்லை. திரை விலகியது. ஸுல்த்தானா உள்ளே நுழைந்தாள். அவள் வருவதைக் கண்டதும் முஹம்மத் எழுந்து உட்கார்ந்தான்.

படுக்கையருகே வந்ததும் ஸுல்த்தானா வெட்கத்தால் தலைகுனிந்த வண்ணம், "தற்போது வலி எப்படி இருக்கிறது?" என்று கேட்டாள். முஹம்மத் மிகவும் உற்சாகத்தோடு "வலியா? அது அப்போதே மறைந்து விட்டதே! இத்தகைய அநுதாபமுள்ள வைத்தியர் அருகில் இருக்கும்போது, வலி போகாமல் இருக்க, அதற்கென்ன அவ்வளவு துணிச்சல்?" என்றான் முகத்தில் புன்சிரிப்புத் தவழ.

"போதும்! நிம்மதியாகத் தூங்குங்கள். காலையில் கட்டை அவிழ்த்து வேறு மருந்து போடுகிறேன்".

"நான் எப்படி நிம்மதியாகத் தூங்க முடியும்?"

"ஏன்?"

"கைக்காயத்துக்கு மருந்து போட்டாய்; ஆனல் நெஞ்சுக் காயத்துக்கோ........?"

இதைக் கேட்டதும் ஸுல்த்தாஞவின் கன்னங்கள் 'குப்' பென்று சிவந்தன. "நீங்கள் குறும்புக்காரர்" என்று கூறிவிட்டு 'விறு, விறு' என்று அவ்விடத்தை விட்டுப் போய்விட்டாள்.

முஹம்மத் அவள் நடந்துபோகும் அழகை ரசித்துக் கொண்டே படுக்கையில் சாய்ந்தான்.

சில தினங்களுக்குப் பின் முஹம்மதும், ஆயிஷா ஸுல்த்தாஞவும் தோட்டத்திலுள்ள செடிகளின் மறைவில் உரையாடிக்கொண்டிருந்தார்கள். எப்போதும் தூர நின்றே பேசும் ஸுல்த்தாஞ, அன்று முஹம்மதின் பரந்த மார்பில் முகத்தைப் புதைத்து 'விம்மி, விம்மி' அழுது கொண்டிருந்தாள்.

'என் உயிருக்குயிரே! வீரப் பெண்கள் அழுவது வீரத்துக்கே இழுக்காகும். எங்களை எந்தச் சக்தியும் பிரிக்க முடியாது. என் உயிருக்கே ஆபத்து வரினும் என் காதலை இழக்க விரும்பமாட்டேன். காதலும் கடமையும் மோதும் போது, நிச்சயமாய்க் காதலைத் தான் ஆதரிப்பேன். உன்னை ஒருபோதும் கைவிடமாட்டேன். இது சத்தியம்?' என்று அவளுடைய கையில் அடித்துக் கொடுத்தான் முஹம்மத். இவ்வுரையைக் கேட்டதும் ஆயிஷா ஸுல்த்தாஞ புளகாங்கிதமடைந்தாள். 'இதே நம்பிக்கையைத்தான் தங்களிடம் வைத்திருக்கிறேன்' என்ருள் ஆயிஷா. முஹம்மத் அவள் கண்ணீரைத் துடைத்து விட்டான்.

'அன்பே! நீ கொஞ்ச நாள் உன் தந்தையிடம் வங்காளத்திற்குப் போயிருக்கத்தான் வேண்டும். இங்கு குழப்பம் தலைகாட்டும் போல் தோன்றுகிறது. உன் தந்தையைவிட்டுப் பிரிந்திருப்பது தற்போது நல்லதல்ல. கொஞ்ச காலமே நாம் இருவரும் பிரிந்திருப்போம். வெகு சீக்கிரமே நான் உன்னை வந்து சந்திப்பேன்' என்று முஹம்மத் கூறினான்.

அடுத்த நாளே வங்காளத்தின் கவர்னராயிருந்த தன் தந்தை ஷுஜாவிடம் ஆயிஷா ஸுல்த்தானா போய்ச் சேர்ந்தாள்.

ஷாஜஹானின் புத்திரர்களிடையே போர் மூண்டது. அவுரங்கஜேப் ஆட்சியைக் கைப்பற்றினார். வங்காளத்தி லிருந்த ஷுஜாவும், அவுரங்கஜேபுக்கு விரோதமாகக் கிளம்பவே, அவரை அடக்கப் பெரும்படை ஒன்றை அவுரங்கஜேப் அனுப்பினார். அப்படைக்குத் தலைமை வகித்துச் செல்லும்படி தம் குமாரன் முஹம்மதுக்கு ஆணை பிறப்பித்தார்.

முஹம்மதின் தலைமையில் வங்காளத்தை நோக்கிப் படை புறப்பட்டது. இதைக் கேள்விப்பட்ட ஷுஜா தமது சின்னஞ் சிறு சேனையுடன் முஹம்மதை எதிர்க்க ஆயத்தமானார். இள நங்கை ஆயிஷா ஸுல்த்தானா தந்தையுடன் ஒத்துழைக்கத் தன்னைத் தயார்ப்படுத்திக் கொண்டாள்.

இரவு பன்னிரண்டு மணியிருக்கும். பூரணச்சந்திரன் பிரகாசித்துக் கொண்டிருந்தான். ஆற்றோரத்தில் ஷுஜாவின் படை பாசறையில் தங்கியிருந்தது. தந்தை

யுடனிருந்த ஸுல்த்தானுவுக்குத் தூக்கம் வரவில்லை. அவள் நெஞ்சு எண்ணுத எண்ணமெல்லாம் எண்ணி எண்ணி வேதனைப் பட்டுக்கொண்டிருந்தது. "காதலும் கடமையும் மோதும்போது, நிச்சயமாய்க் காதலையே ஆதரிப்பேன்" என்று சத்தியம் செய்து கொடுத்தானே அந்த முஹம்மத்! சத்தியம் செய்வது ஆண்களுக்கு பிரியாணி சாப்பிடுவது போல இருக்குமோ? ஆண்கள் வாக்குச் சுத்தம் இல்லாதவர்கள்-வேஷதாரிகள் என்று சபித்துக்கொண்டிருந்தது, அவளுடைய இளநெஞ்சம்.

படுக்கையிலிருந்து எழுந்தாள். உடைவாளை எடுத்துச் சொருகிக்கொண்டு கூடாரத்தை விட்டு வெளியே வந்தாள். அவள் தோழி ரஹமத் அவளைப் பின் தொடர்ந்தாள் ஆற்றோரம் இருவரும் மணலில் உட்கார்ந்தனர்.

"என்ன சிந்திக்கிறீர்கள் இளவரசி? பெரும் படையுடன் தந்தையை எதிர்க்கவரும் காதலரோடு எப்படிப் போரிடுவது என்ரு?" என்று கேட்டாள் ரஹமத்.

"அவருக்குத் தம் கடமையே பெரிதானல் என் கடமையே எனக்கும் பெரிது. தம் வாக்குறுதியை மீறி என்னை எதிர்க்கவரும் அவர், தற்போது என் எதிரியே. என் தந்தையை எதிர்த்தால் என்ன? என்னை எதிர்த்தால் என்ன? நான் போரிட்டே தீருவேன்." என்ருள் ஸுல்த்தானு.

"அவர் என்ன செய்வார்? தந்தையின் ஆணையை வேறு வழியின்றி நிறைவேற்ற வேண்டியவராகத்தானே இருக்கிருர். எய்தவனிருக்க அம்பை நொந்து என்ன பயன்?' என்ருள் ரஹமத்.

இச்சமயத்தில் ஆற்றின் நடுவே ஏதோ சலசலப்புக் கேட்டது. இருவரும் கூர்ந்து கவனித்தார்கள். யாரோ அவர்கள் இருப்பிடத்தை நோக்கி நீந்தி வருவதைப் போல் பட்டது.

"யாராவது எதிரியின் உளவாளியாயிருக்கலாம் ரஹமத்! நீ பின்னல் நில்!" என்று ஸுல்த்தானு தன் உடைவாளை உருவிக்கொண்டு எழுந்தாள்.

"பேகம் சாஹிபா! தாங்கள் தனியே ஒரு ஆணை எதிர்ப்பது நல்லதல்ல. நாங்கள் ஓடிப்போய் படை வீரருக்கு எச்சரிக்கை செய்து விடுவோம்" என்ருள் ரஹமத்.

இதற்குள் நீந்தி வருபவன் வெகு சமீபத்தில் வந்து விடவே, ரஹமத் ஓடிவிட்டாள். ஸுல்த்தானு நெஞ்சைத் திடப்படுத்திக்கொண்டு அவ்விடமே நின்ருள்.

பூரணச் சந்திரனை மேகம் மறைத்தது. ஒருவர் முகம் ஒருவருக்குப் புலப்படவில்லை. நீந்தி வந்தவன் கரையேற முயன்ருன். அவனுக்குக் கொஞ்சமும் சந்தர்ப்பம் கொடுக்காமல் அவன் மீது பாய்ந்தாள் ஸுல்த்தானு. அவனும் விரைந்து வாளை உருவி வீசினன். ஆற்றில் எழுந்த அலை அவ் வீரனைக் கொஞ்சம் குலுக்கிற்று. அந்தத் தடுமாற்றத்தில் இருக்கும்போது ஸுல்த்தானு ஓங்கி வாளை வீசினள். அது அவ்வீரனின் கையில் பட்டது. அவனுடைய வாள் தூரப்போய் விழுந்தது. அவ்வாளை அவன் மீண்டும் எடுத்துக் கொள்ளா வண்ணம் ஸுல்த்தானு ஓடிப்போய் அதைக் காலால் மிதிக்கப் போனுள். அச் சமயம் அவ்வீரன் ஸுல்த்தானுவின் கரத்தைப் பிடித்துக்

கொண்டான். அவள் திமிறினுள்; அவள் கையிலிருந்து வாள் பிடுங்கப்பட்டது. அவ்வீரனின் கையிலிருந்த தன் கையை விடுவித்துக் கொள்ள அவளால் முடியவில்லை. "நீ யார்?" என்று மிரட்டினுள் ஸுல்த்தாஞ. "ஸுல்த் தாஞ சாஹிபாவா?" என்ருன் அவ்வீரன்.

"யார்? முஹம்மதா?" என்ருள் ஸுல்த்தாஞ.

"ஆம்! உன் அருமைக் காதலன்தான்!" என்ருன் முஹம்மத்.

"தூர நில்! கிட்ட வராதே! உன் வாளை நான் எடுத்துக்கொள்கிறேன். என் வாளை நீ வைத்துக் கொள். வீரனைப்போல சண்டை செய்! காதலைக் காட்டி என்னைச் சிறைப் பிடித்துவிட முடியாது!" என்ருள் ஸுல்த்தாஞ.

"அப்படியாஞல் இதோ! கழுத்து தயார்" என்ருன் முஹம்மத்.

"நான் செத்த பாம்பை அடிக்க விரும்பவில்லை. அது என் வீரத்துக்கே இழுக்காகும். எடு வாளை! நடக்கட்டும் போர்!" என்று கர்ஜித்தாள் ஸுல்த்தாஞ.

"யார், யாருடன் போர் செய்வது? நமது ஈருயிரும் ஓருயிராயிற்றே!"

"வீண் வார்த்தைகளால் பசப்ப வேண்டாம். என் காதலைக் கருவியாகக் கொண்டு, என் தந்தையைக் கைப் பற்றிவிட முடியாது. இந்தச் சடலம் வீழ்ந்தபின் தான் ஒருஅடியேனும் இவ்விடத்தை விட்டு மேல் வைக்க முடியும். உம்! எடு வாளை!........" ஸுல்த்தாஞ சீறினுள்.

"வாளைப் பிடிக்கவே முடியாவண்ணம் என் கையை வெட்டி விட்டாய். நான் எப்படி வாளை எடுத்துப் போரிட முடியும்? அன்று தீக்காயங்களுக்கு அனுதாபத்தோடு மருந்து பூசிக் கட்டுப்போட்ட அதே கரம், இன்று என் கையையே வெட்டிவிடத் தீர்மானித்து விட்டது ஏனோ? அன்று என் மார்புமீது முகத்தைப் புதைத்து விம்மி விம்மி அழுதது யாவும் பொய்தானோ?" என்றான் முஹம்மத் குமுறிக்கொண்டு.

"காதலும், கடமையும் மோதும்போது, நிச்சயமாய்க் காதலைத்தான் ஆதரிப்பேன் என்று செய்து கொடுத்த சத்தியம் பொய்யாகும் போது, இதென்ன பிரமாதம்?"— ஸுல்த்தானா மீண்டும் சீறினாள்.

"அன்பே! என்னை மன்னித்துவிடு! என் சத்தியத்தைக் காப்பாற்றவே படையுடன் புறப்பட்டு வந்தேன். நான் படையுடன் புறப்படத் தயங்கி யிருந்தால், என் தந்தை என்னைச் சிறைப்பிடித்தோ, கொன்றோ இருப்பார். நான் வந்ததினால்தான் உன்னைச் சந்திக்க நேர்ந்தது. வேறு யாரேனும் வந்தால் நிச்சயம் உன்னையும், உன் தந்தையையும் கொன்றே தீர்ப்பார்கள். அவ்வித நிலைமையிலிருந்து உன்னைக் காப்பாற்றவே நான் இந்த பயங்கர உத்தரவுக்குப் பணிந்தேன். நான் படையிலிருந்து யாருக்கும் தெரியாவண்ணம் தப்பி ஓடிவந்து விட்டேன். இனி உங்களுடனேயே இருப்பேன். ஆண்டவன் சாட்சியாக நான் உதவியாளனாக வந்திருக்கிறேனே யொழிய, எதிரியாகவோ, எதிரியின் உளவாளியாகவோ வரவில்லை. என்னை நம்பு ஸுல்த்தானா!" என்று கெஞ்சத் தொடங்கினான் முஹம்மத்.

அவனுடைய வார்த்தைகளில் உண்மை தொனித்தது. ஸுல்த்தாஞுவின் மனம் நெகிழ்ந்தது. இதற்குள் முஹம்மத் வெட்டுப்பட்ட தன் கையை மறுகையால் பிடித்துக்கொண்டு உட்கார்ந்து விட்டான்.

மேகத்திலிருந்து சந்திரன் வெளிவந்தான். முஹம்மதின் கரத்திலிருந்து இரத்தம் கசிவதை ஸுல்த்தாஞு கண்டாள். அவள் மனம் உருகிப் போய்விட்டது. இதற்குள் ரஹமத் ஒரு பெரும் படையைத் திரட்டிக்கொண்டு வந்துவிட்டாள். அவர்கள் முஹம்மதைக் கைது செய்து பாசறைக்கு அழைத்துச் சென்றனர். ஸுல்த்தாஞு அவனை விட்டு விடும்படிக் கதறிக் கொண்டே அவர்களைப் பின் தொடர்ந்தாள்.

உண்மையை அறிந்த ஷுஜா, முஹம்மதை விடுவித்ததுமன்றி, தன்மகள் ஸுல்த்தாஞுவை அவனுக்கு அடுத்த நாளே வெகு எளிய முறையில் நிக்காஹ் செய்து கொடுத்தார். ஸுல்த்தாஞு முஹம்மதின் காயம்பட்ட கைக்குத் தொடர்ந்து சிகிச்சை செய்து வந்தாள்.

படைக்குத் தலைமை வகித்துச் சென்ற மூத்த குமாரன் முஹம்மத், ஷுஜாவுடன் சேர்ந்துவிட்டதாக அறிந்ததும் அவுரங்கஜேப் அவ்விருவரையும் கைது செய்து வரும்படி வேறு ஒரு படையை அனுப்பி வைத்தார். அப் பெரும் படையை எதிர்த்து நிற்கச் சக்தியற்றவர்களாகிய ஷுஜாவும், முஹம்மதும் அருகில் இருந்த அரக்கான் மன்னனுக்குக் கடிதம் எழுதினார்கள். அந்த மன்னன், அவர்கள் தன்னிடம் வந்துவிட்டால் அடைக்கலம் தருவதாக மறுமொழி அனுப்பினான். ஷுஜாவும், ஸுல்த்தாஞுவும், முஹம்மதும் அரக்கான் சென்றனர்.

அரக்கான் எல்லைக்குள் நுழைந்ததும், அந்த மன்னன் தங்களைக் கைது செய்யப் படையுடன் வருவதை அறிந்து திடுக்கிட்டு மோசம்போனதை உணர்ந்தனர். ஸுல்த்தானு வைக் கூடாரத்தில் விட்டுவிட்டு ஷுஜாவும், முஹம்மதும் அப்படையை எதிர்க்கத் தயாராயினர். இருவரும் வீரா வேசத்தோடு சண்டை செய்தனர். யுத்தம் நடந்துகொண் டிருக்கும் போது, ஓர் இளைஞன் குதிரைமீது ஓடிவந்தான். அருகில் வந்ததும் வாளை உருவி அரக்கான் மன்னனை எதிர்க்கத் தொடங்கினன். அரக்கான் மன்னனின் வாள் வீச்சு முஹம்மதின்மீது விழ இருந்த சமயத்தில் அவ் விளைஞன் ஊடே வரவே, அவனுடைய தலை துண்டிக்கப் பட்டுக் கீழே உருண்டது. உருண்டபோதே தலையிலிருந்த அழகிய தலைப்பாகை கலைந்து, நீண்ட கருங்கூந்தல் தரை யில் புரண்டது.

"ஆ! ஸுல்த்தானு!........நீயா? ஆண்வேடம் பூண்டு எங்களைக் காப்பாற்றவா வந்தாய்?" என்ருன் முஹம்மத்.

முஹம்மதும், ஷுஜாவும் கைதிகள் ஆயினர்.

இருவரும் ஔரங்கஜேபிடம் ஒப்பிக்கப்பட்டனர். முஹம்மத் ஆயுள் முழுதும் சிறையில் அடைக்கப்பட் டான். ஷுஜா வழியில் மாயமாய் மறைந்தார். என்ன ஆனர் என்று இதுவரை தெரியாது.

முஹம்மத் காதலுக்காகப் பட்டத்தை இழந்தான். ஆயிஷா ஸுல்த்தானு காதலுக்காக உயிரை இழந்தாள்.

---

# மேல் பதவி

காலை எட்டு மணி.

பிளாட்பாரம் கைரேகை ஜோசியர் பஞ்சாட்சரம், மொட்டை மரத்தடியில் நிஷ்டையில் இருந்தார். அவருடைய வட்டமான தாடியும், நெற்றியில் இட்டிருந்த பலமான விபூதிப் பூச்சும், போவோர் வருவோரின் கவனத்தைக் கவர்ந்தன.

அவர், அழகிய வலையைப் பின்னி இரைக்காகக் காத்திருக்கும் சிலந்தியைப் போல் தம்முடைய வேட்டைக்காகக் காத்திருந்தார்.

புதுமாப்பிள்ளை, கொத்தன் கந்தசாமி, தன் புதிய வாழ்க்கைத் துணைவி முத்தம்மாள் பின் தொடர வந்து கொண்டிருந்தான். முத்தம்மாளின் பார்வை ஜோசியர் மீது பட்டது.

'உங்களைத்தானே!' என்று கனிவுடன் கூப்பிட்டாள். முத்தம்மாள் தன் கணவனை.

கந்தசாமி திரும்பிப் பார்த்தான்.

"உங்கள் கையைக் காட்டி அவர் என்ன சொல்கிறார் என்று கேட்போமா?" என்றாள் முத்தம்மாள் ஆசையோடு.

"உம்! அவர் என்ன சொல்லப் போகிறார்!" என்று கூறி கந்தசாமி இரண்டடி முன் வைத்தான். முத்தம்

மாளைக் கலியாணம் செய்துகொண்ட பாக்கியம் எப்படி இருக்கிறது என்றுதான் பார்ப்போமே என்ற சபலம் ஏற்பட்டது. அத்தகைய சபலம் தான் மூடக் கொள்கை களுக்கு மூலகாரணம். அவன் ஜோசியர் விரித்து வைத் திருந்த வலேக்கு இரையாஞன்.

ஜோசியர் முன்சென்று, 'கைரேகை பார்க்க எவ்வளவு?' என்று கேட்டான்.

ஜோசியர் கண்களைத் திறந்து அவனை எற இறங்கப் பார்த்தார்.

கைக்கு வந்த முதல் வேட்டை, வாய்க்கு எட்டாமல் போய்விடக் கூடாதே என்ற கவலே அவருக்குத் தோன்றிற்று.

'ஒன்றும் அதிகம் இல்லை தம்பி! பகவான் பெய ரைச் சொல்லி இப்படி உட்கார்! காசு இன்று வரும், நாளை போகும்; காசா பெரிது? இந்தக் காலத்திலே கண்டவர்கள் எல்லாம் ஜோசியர்கள் ஆகிவிட்டார்கள். நான் பஞ்சத்துக்காக ஜோசியன் ஆனவனல்ல. நீ எதைச் சந்தோஷமாகக் கொடுக்கிருயோ அதை வாங்கிக் கொள் வேன்.' என்ருர் பஞ்சாட்சரம்.

அத்தகைய வழவழா வியாபாரம் கந்தசாமிக்குப் பிடிக்காது. வெட்டு ஒன்று, துண்டு இரண்டு என்னும் கொள்கை உடையவன். கூலியை நிர்ணயம் செய்து கொண்டுதான் வேலையைத் தொடங்குவான்.

'அதெல்லாம் வேண்டாம்! எவ்வளவு என்று முதலில் சொல்லி விடுங்கள்!' என்ருன் தீர்மானமாக.

'நீ முதலில் உட்கார் தம்பி! எங்கள் முப்பாட்டனார் கனவில் எம்பெருமான் தோன்றி, சரஸ்வதி காளிதாசருக்குக் கவிதை அளித்ததைப் போல் அருளியது இந்த ஜோசிய ஞானம். இரண்டொரு ஜோசிய நூல்களைப் படித்துவிட்டு ஜோசியம் சொல்லுகிறவர்கள் இந்தக் காலத்தில் பெருகிவிட்டனர். அப்படிப்பட்டவன் அல்ல நான். எம்பெருமான் இரண்டணாவுக்கு மேல் வாங்கக் கூடாது என்று ஆக்ஞாபித்திருக்கிறார். கடந்த காலம், வருங்காலம் யாவும் உள்ளதை உள்ளபடி சொல்லுவதற்கு எவ்வளவோ விலைவாசி ஏறியும் நான் இரண்டணாவுக்கு மேல் வாங்குவதில்லை' என்றார் ஜோசியர்.

'கடந்தகாலம் தெரிந்தது தானே! வருங்காலத்தைப் பற்றி மட்டும் சொல்லுங்கள். பாதி சார்ஜு ஓர் அணா வாங்கிக் கொள்ளுங்கள்! என்று பேரம் பேசினான் கந்தன்.

ஜோசியர், அவனைப்போல எத்தனையோ பேரை எடை போட்டு வைத்திருப்பவர். பாமரர்களின் மனோதத்துவத்தைக் கரைத்துக் குடித்த அனுபவ ஞானி. அந்த ஞானம் இல்லாவிட்டால்தான், அந்தத் தொழிலில் வெற்றி பெற முடியாதே!

அருகில் ஆவலுடன் நிற்கும் முத்தம்மாளை நோக்கினார். "ஓர் அணாத்தான் எனக்கு! மற்றொரு அணா எம்பெருமானின் பூஜைக்குத் தம்பி! அந்த அணாவைக் கொடுக்க மறுக்காதே! அதைத்தான் முதலில் கொடுத்து எம்பெருமானின் அருளைப் பெற வேண்டும்" என்றார் பக்தி பூர்வம் தொனிக்க ஜோசியர்.

'போனால் போகிறது! கொடுத்து விடுங்கள்! எவ்வளவோ செலவழித்துவிட்டோம்!' என்றாள் முத்தம்மாள். தம் அம்பு, குறி தவறாததைக் கண்டு பஞ்சாட்சரம் உள்ளூற மகிழ்ந்தார்.

கந்தசாமி உட்கார்ந்து இரண்டணுக்களை எடுத்துக் கொடுத்தான். ஜோசியர் ஒரு கும்பிடு போட்டு, எம்பெருமானைத் தியானித்துவிட்டு வாங்கிக் கொண்டார். ஏனெனில் அதுதான் அவருக்குப் போணிக் காசு.

ஜோசியத்தைக் கேட்டபின் புதிய தம்பதிகள் நடந்து கொண்டிருந்தார்கள். கந்தசாமியைக் காட்டிலும் முத்தம்மாள் சந்தோஷம் பொங்க நடந்துகொண்டிருந்தாள்.

'அடேயப்பா!' என்ன சந்தோஷத்தைக் கண்டு விட்டாய்?' என்றான் கந்தன்.

'இன்னும் என்ன வேண்டும்? என் தாலி கெட்டியானது என்று சொன்னாரே! அதுவே எனக்குப் போதும்!' என்றாள் முத்தம்மாள் பெருமிதத்தோடு.

'ஆம்! ஆம்! நல்ல வடக்கயிறு போட்டுக் கட்டியிருக்கிறதல்லவா?' என்றான் சிரித்துக்கொண்டே கந்தசாமி.

'அது மட்டுமா? தங்களுக்கு மேல் பதவி கிடைக்கும் என்றும் தெரிவித்தாரே!' என்றாள் முத்தம்மாள்.

'மேல் பதவியா? கொத்து வேலைக்கு மேல்பதவி என்றால் பூமியில் வேலை செய்வதை விட்டு ஆகாயத்தில் போய் வேலை செய்வேன் போலிருக்கிறது!' என்று சொல்லிச் சிரித்தான் கந்தசாமி.

'ஒன்றும் உளராதீர்கள்!' என்று செல்லமாகக் கடிந்து கொண்டாள் முத்தம்மாள்.

மேற்கண்ட சம்பவம் நிகழ்ந்து பல் ஆண்டுகள் கடந்து விட்டன.

பணமுடைக் காலத்தில் யார் கட்டடங்களைக் கட்டு கிறார்கள்? கந்தசாமிக்கு வேலையில்லாத் திண்டாட்டம் ஏற்பட்டது. நகை நட்டுகளை எல்லாம் விற்பனை செய்து வயிறு வளர்த்தாகி விட்டது. கடன் வாங்குவோரிடம் எல்லாம் வாங்கியாகி விட்டது. அவனுடைய வாழ்க்கை ஒரே இருள் மயமாயிருந்தது. வருங்காலம் சுத்த சூனிய மாகத் தோற்றமளித்தது.

கந்தசாமியும், முத்தம்மாளும் வீட்டுக்குள் விரக்தி யோடு உட்கார்த்திருந்தனர்.

'உ ங் க ளை த் தா னே!' என்று தொடங்கினாள் முத்தம்மாள்-ஏதோ வழி கண்டு பிடித்தவளைப் போல.

கந்தன் ஆவலுடன் அவளை நோக்கினான்.

'தொங்கபத்ராவோ! என்னவோ! என்று சொல்லு கிறார்களே! அங்கே அணைக்கட்டு வேலை நடக்கிறதாம். வேலை கிடைக்கிறதாம். அங்கே போனால் என்ன?' என்றாள் அவள்.

'அது எங்கே இருக்கிறது என்று உனக்குத் தெரியுமா? ரொம்பத் தொலை! அதுவும் அ ணை க் க ட் டு வேலை! விழுந்து செத்தால் கேட்பார் கிடையாது.'

'அப்படியெல்லாம் அபசகுனமாகப் பேசாதீர்கள்! அடுத்தத் தெருவில் இருந்த முனியாண்டி அங்கேதான் போய் வேலை செய்கிறான். வீட்டுக்கு மாதா மாதம் பணம் அனுப்புகிறான். நாம் இங்கேயிருந்து என்ன செய்யப் போகிறோம்? என் தாலி கெட்டியானதால் உங்களுக்கு ஒரு ஆபத்தும் ஏற்படாது, என்று உபதேசம் செய்தாள் முத்தம்மாள்.

'சரி பார்ப்போம்!' என்ருன் கந்தன்.

'பார்க்கிறதென்ன? இங்கே இருந்து பட்டினி கிடப்பதைவிட இன்றைக்கே புறப்பட்டுப் போவதுதான் நல்லது' என்று அழுத்தமாகக் கூறினுள் முத்தம்மாள்.

இருக்கும் தட்டுமுட்டுச் சாமான்களை விற்றுவிட்டுக் கொடுக்க வேண்டிய கடனைத் தீர்த்து விட்டு, எல்லோரிடமும் பயணம் சொல்லிக்கொண்டு, எஞ்சிய பணத்தில் டிக்கட்டுகள் வாங்கிச் சென்னைவரை வந்து சேர்ந்தார்கள் இருவரும்.

சென்னையைப் பார்க்கவேண்டிய ஆவலோடு இரண்டு நாள் சுற்றியலைந்து இருந்த பணத்தைச் செலவழித்தார்கள். கைப்பணம் தீர்ந்தது. பட்டண ஆவலும் தீர்ந்தது.

சென்னை சென்டிரலில்—இரவில் டிக்கட் இன்றியே ரயிலேறினுர்கள். அது அவர்களுக்குப் புது அநுபவம். நெஞ்சு 'திக் திக்' என்று அடித்துக் கொண்டது. ரயில்வே அதிகாரிகளைக் காணுந்தோறும் அவர்கள் முகம் சுருங்கி விடும். ஆனல் நல்ல வேளை! அவர்களிடம் யாரும் டிக்கட் பரிசோதனை செய்ய வரவில்லை.

அவர்களுடைய துரதிர்ஷ்டம்! அவர்கள் ஏறியிருந்த வண்டி அரக்கோணம் வரை மட்டும் போகும் பாஸஞ்சர். ஆகையால் அரக்கோணத்தில் இறங்கினுர்கள். ஸ்டேஷனிலேயே காத்துக் கிடந்தார்கள். பிறகு பம்பாய் செல்லும் மெயில் வந்தது. இருவரும் ஏற முயன்ருர்கள். கூட்டம் அதிகமாயிருந்ததால் ஏற முடியவில்லை.

உள்ளே இருந்தவர்கள் கதவைத் திறக்கவே மறுத்தார்கள். இருவரும் ஒரே வண்டியில் ஏற முடியாமல் மிகவும் பிரயாசையோடு வெவ்வேறு வண்டியில் ஏறிக் கொண்டார்கள்.

கந்தசாமி பெஞ்சுக்கடியில் படுத்துக்கொள்ள முயன்ருன். வண்டியில் இருந்தவர்கள் 'திருட்டுப் பயலே! ராத்திரியில் சாமான்களை அடித்துக் கொண்டு போகவா பார்க்கிருய்?' என்று அதட்டிப் படுக்க விடவில்லை.

வண்டி புறப்பட்டது. 'தடக் தடக்' 'தடக் தடக்' என்று வேகமாகச் செல்லத் தொடங்கிற்று. கந்தன் ஒரு மூலையில் அடங்கி ஒடுங்கி நின்று கொண்டிருந்தான். தன் வாழ்வு தடம் புரண்டு எங்கோ செல்வதாக அவனுக்குப் பட்டது.

வெகுநேரம் அவன் அப்படியே நின்றுகொண்டு இருந்தான். வண்டியில் இருந்தவர்கள் தூங்கி விழத் தொடங்கினர்கள். அப்போது அவன் பெஞ்சுக் கடியில் நுழைந்து படுத்துக் கொண்டான். பட்டணம் முழுதும் இரண்டு தினங்களாய்ச் சுற்றியலைந்த அலுப்பால் அயர்ந்து தூங்கிவிட்டான்.

அவன் கண் விழித்துப் பார்த்தபோது, வண்டி ஒரு ஸ்டேஷனில் நின்றுகொண்டிருந்தது. பொழுது புலர்ந்து கொண்டு இருந்தது.

'இது எந்த ஸ்டேஷன்?' என்று வெளியே தலையை நீட்டி, பெஞ்சுக்குமேல் காபி அருந்திக் கொண்டிருந்தவரைக் கேட்டான்.

'இது குத்தி ஸ்டேஷன்' என்று பதில் கிடைத்தது. முத்தம்மாளின் ஞாபகம் அவனுக்கு வந்தது. அவள் பத்திரமாக இருக்கிருளா என்று பார்க்க ஆவல் கொண் டான். உடனே வெளியே வந்து, வண்டியை விட்டுக் கிழே இறங்கித் தன் மனைவி ஏறிய வண்டியில் ஆவலோடு போய் நுழைந்தான். அந்தோ! அவள் அங்கு காணப் படவில்லை! வண்டியில் இருந்தவர்களைப் பரபரப்போடு விசாரித்தான். அவள் நடுநிசியில் ஏதோ ஒரு ஸ்டேஷ னில் டிக்கட் பரிசோதகரால் இறக்கப்பட்டு விட்டதாகக் கேள்விப்பட்டான். அவனுடைய நெஞ்சில் பேரிடி விழுந்ததைப் போல் இருந்தது. பேய் பிடித்தவனைப்போல் ஒவ்வொரு வண்டியாக நுழைந்து நுழைந்து பார்த்தான். அவள் எவ்வண்டியிலும் காணப்படவில்லை. அவனுக்கு என்ன செய்வதென்றே தோன்றவில்லை. பிளாட்பாரத்தில் உட்கார்ந்து தலையைக் கைகளால் தாங்கிக் கொண்டான். அவன் தலை சுழன்றது. பூமி பிளந்து, அதல பாதாளத் தில் போய்க் கொண்டு இருப்பதைப் போன்ற உணர்ச்சி ஏற்பட்டது.

ரயில்வண்டி புறப்பட்டது. அவன் பிளாட்பாரத்தி லேயே ஆடாமல் அசையாமல் உட்கார்ந்திருந்தான். ரயில்வண்டி போவதைப் போல அவனுக்குப் படவில்லை. உயிரே தன்னை விட்டுப் பிரிந்து போவதைப் போல நினைத்தான்.

ஜனங்களின் ஆரவாரம் அடங்கிற்று. அவன் விழிகளி லிருந்து நீர்த்துளிகள் வழிந்து கன்னங்களில் உருண் டோடிக் கொண்டு இருந்தன.

'டேய்! யாரங்கே!' என்ற அதட்டல் கேட்டு எழுந்தான். ரயில்வே அதிகாரியால் ஸ்டேஷனுக்கு வெளியே அனுப்பப் பட்டான்.

'அந்தோ! அவள் எங்கு இறக்கப்பட்டு, என்ன செய்கிருளோ! நடுராத்திரியில் எவ்வளவு பயப்பட்டாளோ! என்னென்ன எண்ணங்களெல்லாம் எண்ணி ஏங்கிளுளோ! இதுவரை என்னை விட்டுப் பிரியாதவளாயிற்றே!' என்று அவன் நினைக்குந்தோறும் விழிகளிலிருந்து கண்ணீர் வழிந்தோடிற்று.

ஸ்டேஷனில் ஒரு மூலையில் போய் உட்கார்ந்து கொண்டான். அவனுக்கு ஒன்றும் ஓடவில்லை. அப்படியே கையை மடக்கித் தலைக்குவைத்துப் படுத்துக்கொண்டான். மீண்டும் ஜனங்களின் ஆரவாரமும், ஜட்கா வண்டிக்காரர்களின் கூச்சலும் கேட்டுக் கண்விழித்தான். சென்னைக்குச் செல்லும் வண்டி வந்து நின்று கொண்டிருந்தது. வண்டியில் ஏறி மனைவியைத் தேடப் போகலாமா என்று நினைத்தான். ஆனால் எந்த ஸ்டேஷனில் இறக்கப்பட்டாள் என்ற விவரம் தெரியாததால் சிந்தை கலங்கினன். சொந்த ஊர் சென்றுவிடலாம் என்ருலோ மனைவியைச் சோரம் போகவிட்டு வந்தவன் என்று ஏசுவார்கள் என்ற எண்ணம் உண்டாயிற்று.

ஒன்றும் தோன்ருதவனாய் மீண்டும் படுத்துவிட்டான். பசி வயிற்றைக் கிள்ளிற்று. வேதனை நெஞ்சை அரித்தது. அயர்ந்து தூங்கிவிட யத்தனித்தான். தூக்கம் வரவில்லை. சோர்வடைந்து பகல் முழுதும் அங்கேயே இருந்தான்.

மறுநாள் மீண்டும் இரவில் ரயிலேறிப் புறப்பட்டான். எப்படியோ துங்கபத்ரா அணைக்கட்டு வேலை நடக்கும் இடத்திற்கு வந்து சேர்ந்தான். அங்கு அவனுக்கு வேலை இல்லையென்று கூறி விட்டார்கள். சில தினங்கள் பிச்சை

எடுத்து உண்டான். பிச்சையும் சரியாகக் கிடைக்க வில்லை; பட்டினி கிடந்தான்.

மீண்டும் ரயிலேறினன். இப்போது எங்கு போவது என்று அவனுக்கே தெரியாது. லட்சியமின்றி ரயில்வே அதிகாரிகள் இறக்கிவிடும் இடங்களில் இறங்கி இறங்கி மீண்டும் மீண்டும் ஏறி, கடைசியில் பம்பாய் நகரம் வந்து சேர்ந்தான்.

பெரிய பெரிய கட்டிடங்கள் பிசாசுகளைப் போல் அவனுக்குக் காட்சியளித்தன. வேகமாகச் செல்லும் டிராம்களும், பஸ்களும், கார்களும் அவனைப் பயமுறுத் தின. தன்னை ஒரு சிற்றெறும்பைப் போல் உணர்ந்தான். வயிறு வளர்க்க வழி ஒன்றும் அவனுக்குத் தோன்ற வில்லை. பிச்சை எடுப்பதையே தொழிலாகக் கொண்டான். பரந்த வானமே கூறை, விரிந்த பூமியே படுக்கை, கையே தலையணை ஆயின.

ஒருநாள், பிளாட்பாரத்தில் உட்கார்ந்த வண்ணம் போவோர் வருவோரை வெறித்துப் பார்த்துக் கொண்டி ருந்தான். ஸ்டேஷனில் கூலிவேலை செய்ய முயன்றும் ஏற்கனவே இருக்கும் கூலிக்காரர்களால் அடித்துத் துரத்தப் பட்டான். முந்திய நாள் ஒரு வட இந்தியப் பிச்சைக்காரனுக்கும், அவனுக்கும் பிச்சைக் காசுக்காக பெரிய சண்டை நடந்து, அவன் பலமான காயம் அடைந் திருந்தான். எழுந்து நடமாடவும் சக்தியற்று உட்கார்ந் திருந்தான். எதிர் பிளாட்பாரத்தில் ஒரு பிச்சைக்காரி போவதைக் கண்டான். கண்களைக் கசக்கி உற்று நோக்கி ஞன். சந்தேகமில்லாமல் தன் மனைவி முத்தம்மாள்தான் என்பதைக் கண்டான். அவன் உள்ளத்தில் தோன்றிய

வெறியில் 'முத்தம்மா!' என்று இரைந்து, எதிர் பிளாட் பாரத்திற்கு எழுந்து ஓடினான். ஆத்திரத்தில் வேகமாய்ப் பறந்து வந்து கொண்டிருந்த மோட்டார்காரை அவன் கவனிக்கவில்லை.

நடுரோட்டில், கார் அவன்மீது மோதி, பலகஜ தூரம் அவன் உடலை இழுத்துச் சென்று 'கிரீச்' எனும் பேரிரைச் சலோடு நின்றது.

முத்தம்மாள் ஓடினாள். அனைவரும் ஓடினார்கள். ஆனால் நடந்தது நடந்துவிட்டது. அவன் ரத்த வெள் ளத்தில் மாண்டு கிடந்தான். போலீசார் வந்தனர். கந்தனின் பிணம், முத்தம்மாள் கதறிக்கொண்டே பின் தொடர ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போகப்பட்டது. முத்தம்மாளை ஆஸ்பத்திரிக்குள் அனுமதிக்க மறுத்து விட்டார்கள். அவள் வெளியிலேயே கண்ணீரும் கம்பலை யுமாய் உட்கார்ந்திருந்தாள்.

நாட்கள் பல கடந்தன. அவள் இன்னும் அங்கேயே உட்கார்ந்து இருந்தாள். 'கந்தசாமி இறந்துவிட்டான்; அவனை எரித்துவிட்டார்கள்; நீ போகலாம்' என்று பல தடவை அவளிடம் கூறப்பட்டது.

'இல்லை! இல்லை! அவர் இறக்கவில்லை. என் தாலி கெட்டியானது. நர்சுகள் அவரைக் கலியாணம் செய்து கொண்டு வெளியே அனுப்ப மறுக்கிறார்கள்' என்று கூறிக்கொண்டு ஆஸ்பத்திரியின் படிகளிலேயே உட்கார்ந் திருந்தாள். அவளை விரட்டப் பல தடவை முயன்றும் முடியவில்லை. அவள் கழுத்தில் தாலி இன்னும் இருக் கிறது. அதைத் தொட யாருக்குத் தைரியம்?

தன்னை விரட்டுவோரை வெறிகொண்டு தாக்குகிருள். "உன் கணவன் இறந்துவிட்டான்" என்று யாராவது அவளிடம் கூறினுல் 'கலகல' வென்று நகைக்கிருள். அவளுக்குப் பைத்தியம் பிடித்து விட்டது.

ஒருநாள் அந்தவழியே சந்நியாசி ஒருவர் வந்தார். கைரேகை ஜோசியர் பஞ்சாட்சரம்தான் அவர். அவருக்கும் வேலையில்லாத் திண்டாட்டம் போலும்! சந்நியாசியாகி விட்டார்.

முத்தம்மாள் அவரை அடையாளம் கண்டு கொண்டாள். காவி ஆடை, அவரை மறைக்க முடியவில்லை.

'ஏண்டா! நீ தானே ஜோசியம் சொன்னவன்?' என்று கத்தினுள்-அவர் சட்டையைப் பிடித்து இழுத்து.

சந்நியாசி மிரண்டார்; ஆயினும் சமாளித்துக் கொண்டார்.

'என் ஜோசியம் பொய்க்கவில்லையே! உன் தாலி கெட்டியானதுதான்! இல்லையானுல் கணவன் இறந்த பின்னும் கழுத்தில் தொங்குமா? அவனும் நான் சொன்னபடி மேல்பதவி அடைந்துவிட்டான்!' என்று வானத்தை நோக்கிக் காட்டிவிட்டு, முத்தம்மாளிடமிருந்து தன்னை விடுவித்துக்கொண்டு விரைந்தார்.

பம்பாய்ப் பிளாட்பாரங்களில் முத்தம்மாள் பைத்தியக்காரியாக அலேகிருள்.

# பொழுது புலர்ந்தது

மகத நாட்டு மாமன்னர் அசோகருக்கு அன்று இரவு தூக்கமே வரவில்லை. படுக்கையில் புரண்டுகொண்டே கிடந்தார்.

முந்திய நாள், கலிங்க வீரரும், மகத வீரரும் கங்கைக் கரையிலே வீராவேசத்துடன் போரிட்டனர். பல்லாயிரவர் மாண்டு விழுந்தனர். உதிரம் ஆறுக ஓடிற்று—கங்கையுடன் போட்டி போட்டுக்கொண்டு.

அசோகர் படுக்கையிலிருந்து திடீரென்று எழுந்து உட்கார்ந்தார்.

வீரன் ஒருவன் வந்து வணங்கி நின்றான்.

"என்ன செய்தி?" என்றார் அசோகர்.

"மகராஜ்! உளவாளி வந்திருக்கிறான்."

"வரச் சொல்!"

வீரன் வெளியே சென்றான். உளவாளி உள்ளே வந்து வணங்கி நின்றான்.

"என்ன செய்தி?" என்றார் அசோகர்.

"சந்தோஷச் செய்தி மகராஜ்!"

"சொல்லலாம்."

"வெற்றி நமதே! கலிங்கன் தோற்றான். அவன் நாட்டில் மனையெங்கும் அழுகுரல் கேட்டேன். இனி அவன் போரிட மாட்டான்."

" சரி! போகலாம்"

உளவாளி வெளியே சென்றான்.

அசோகர் சிரித்தார்; அவர் சிரிப்பில் சோகம் கலந்திருந்தது.

" சந்தோஷச் செய்தியாம்! மனையெங்கும் அழுகுரல் கேட்டது சந்தோஷச் செய்தியாம்! வெற்றி நமதே! சக்தியற்றவனை, சக்தியுள்ளவன் கொன்று குவிப்பதா வெற்றி? ஓர் அரசன் சுயநலத்தை வென்று, நாடெங்கும் சுபிட்சம், சத்யம், ஜீவகாருண்யம், அஹிம்சை இவற்றைப் பரப்புவதல்லவா வெற்றி!"

இவ்வாறு சிந்தித்தார். அவருக்கு இருப்புக்கொள்ள வில்லை. உடைவாளை எடுத்துச் சொருகிக் கொண்டு கூடாரத்துக்கு வெளியே வந்தார்.

நல்ல, பால் போன்ற நிலவு காய்ந்துகொண்டிருந்தது. வானத்திலே விடிவெள்ளி தோன்றியிருந்தது. இன்னும் கொஞ்ச நேரத்தில் பொழுது புலர்ந்துவிடும்.

அவருடைய கூடாரத்தைச் சுற்றிலும் போர்வீரர்களின் கூடாரங்கள் இருந்தன. தூரத்திலே கங்கை மௌனமாக ஓடிக்கொண்டிருந்தது. சந்திரனின் ஒளி பட்டு, பூமி வெள்ளி முலாம் பூசப்பட்டது போன்று விளங்கிற்று.

அந்த மோகன வேளையில், அவர் இதயம் ஒரு பெரும் பாரத்தால் அழுத்தப் பட்டிருந்தது.

'வெற்றி பெற்றேன்! கீர்த்தி பெற்றேன்! ஆயினும் என்ன பெற்றேன்? கிடைத்தற்கரிய சாந்தியைப் பெற வில்லையே!' என்று நெடுமூச்சு விட்டார்.

அருகிலே கட்டப் பெற்றிருந்த அவருடைய பாரா ஜாரியான புரவி, அவரைக் கண்டதும் கனைத்தது. அருகில் சென்று அதைத் தட்டிக் கொடுத்தார். ஏதோ நினைத்தவராய் திடீரென அதை அவிழ்த்து அதன் மீது லாவகமாய் ஏறிக்கொண்டு புறப்பட்டார். கொஞ்ச நேரத் தில் அவர் போர்க்களத்தில் இருந்தார்.

எதிரே கோர காட்சி! கண்ணுக்கெட்டிய தூரம் வரை ஒரே பிண மயம்! போர் வீரர்களின் சடலங்கள் ஒன்றின்மீது ஒன்று சாய்ந்து கிடந்தன. வெட்டுண்ட தலைகள், குத்துண்ட மார்புகள், சிதறிய அவயவங்கள், மாண்ட புரவிகள், ஒடிந்த வாட்கள், சேதமடைந்த ரதங் கள்—களமெங்கும் பரவிக் கிடந்தன. நேற்று இங்கே மனிதனின் அரக்க உணர்ச்சி கோர தாண்டவமாடிற்று. வீராவேசத்துடன் போர் வீரர் மோதினர். குத்து! வெட்டு! 'கோ' வெனும் கதறல்! வாட்களின் ஜங்காரம்! ஈட்டி களின் 'உய்' யொலி! குதிரைகளின் கனைப்பு! யானைகளின் பிளிறல்! ரதங்களின் 'கடகடா'! இவை யாவும் சேர்ந்து ஒரே அமளி துமளியாயிருந்தது.

அசோகர் குதிரை மீது அமர்ந்தவாறே மௌனமாக நோக்கினர். அவர் கண்களில் நீர் துளித்தது. "நான் பாபி! மஹா பாபி!" என்று இரு கைகளாலும் முகத்தை மூடிக் கொண்டார். "அந்தோ! என்னல் சிருஷ்டிக்க முடியாத அரிய வாலிப வீரர்களைக் கொன்று குவித்து

விட்டேன். நாட்டுச் செல்வமாக விளங்கும் வீரர்களைப் பலியிட்டு விட்டேன். என்ன காரியம் செய்துவிட்டேன்! எத்தனைச் சுமங்கலிகளை விதவைகளாக்கி விட்டேன்! எத்தனைப் பச்சைக் குழந்தைகளை அனாதைகள் ஆக்கி விட்டேன்! எத்தனை முதியோர்களின் வருங்கால ஆதரவை அழித்து விட்டேன்! நான் மனிதத் தன்மையி னின்றும் மாறுபட்டு விட்டேன். அரக்கனாகி விட்டேன். நாடாசை என்னைப் பைசாசமாக்கி விட்டது. என்மீது ரத்தக்கறை பட்டுவிட்டது. நான் அதைப் போக்கிக் கொள்ள முடியுமா?' என்று கலங்கினார்.

யுத்த களத்தில் மீண்டும் ஒரு பார்வையைச் செலுத் தினார். அதோ! தூரத்திலே ஓர் உயிர்ச் சின்னம்! ஏதோ ஒன்று அசைகிறது! குறை உயிர் உள்ள வீரரும் இருப் பரோ? அவர் தம் அசுவத்தை அப்பக்கம் மெதுவாகச் செலுத்தினார். அந்தக் குதிரை வெகு ஜாக்ரதையாகப் பிணங்களை மிதிக்காமல் தாண்டித் தாண்டிச் சென்றது. அவர் அருகில் சென்றதும், அவ்வுருவம் எழுந்துநின்றது. அவள் ஒரு பெண்! அசோகரின் முன் தலைவிரிகோலமாய் நின்றாள். தன் சேலைத் தலைப்பால் கண்களிலிருந்து கசியும் நீரைத் துடைத்துக் கொண்டு ஆவேசம் வந்தவ ளாய் அசோகரை நோக்கி, 'யார்? மகத நாட்டுப் போர் வீரனா? என் உற்றார் உறவினர் அனைவரையும் அழித்து விட்டாய்! என்னையும் கொல்வதால் உன் ரத்தவெறி அடங்குமாயின் கொல்! கொல்! என்னையும் கொன்று விடு!' என்று இரைந்தாள்.

'பெண்ணே! நீ யார்? இந்த வேளையில் இந்தப் பிணங்களிடையே உனக்குப் பயமாயில்லையா?'

'பயமா? ஹி! ஹி! ஹி! பிணங்களிடையே என்ன பயம்? கொடுமை புரியும் சக்தியாகிய உயிர் நீங்கிய கட்டைகளிடம் என்ன பயம்? உன்னைக் கண்டு தான் பயப்படுகிறேன். உன்னால்தான் எனக்குத் தீங் கிழைக்க முடியும். இவை தீங்கற்றவை!'

இதைக் கேட்டதும் அசோகர் திகைத்தார். 'என்ன நெஞ்சம்!' என்று வியந்தார். தம் குதிரையை விட்டு இறங்கி அவளை உற்று நோக்கினர். இப்போது நிலவில் அவள் முகம் நன்கு தெரிந்தது. நல்ல அழகி! ஆனால் முகமதியில் சோகக் களங்கம்! எங்கோ பார்த்த முகம்! கடந்தகாலம் எனும் இருளிலே ஞாபகசக்தி எனும் மின்னல் பளிச்சிட்டது. அசோகர் அவளைத் தெரிந்து கொண்டார்.

'பெண்ணே! இங்கு இந்த வேளையில் என்ன செய்து கொண்டிருக்கிறாய்?'

'தேடிக் கொண்டிருக்கிறேன்'
'எதைத் தேடிக் கொண்டிருக்கிறாய்?'
'என் லட்சியத்தை—என் சாந்தியை'
'இந்தப் பிணக் காட்டிலா?'
'ஆம்!'
'நீ சொல்வது எனக்குப் புரியவில்லையே!'

'எப்படிப் புரியும்? மக்களைக் கொன்று குவிப்பதை யும், சகோதரரை அடிமை கொள்வதையும் லட்சியமாகக் கொண்டிருக்கும் உனக்கு எப்படிப் புரியும்? மக்களின் ரத்தத்தைக் கண்டு சாந்தி அடையும் உன் மனம், என் மனத்தை எப்படி அறியும்? இந்தக் காட்டில், நீ உன்

லட்சியத்தை அடைந்துவிட்டாய். உன் மனம் சாந்தியைப் பெற்றிருக்கலாம். அவை இரண்டையும் இதே காட்டிலே நான் இழந்து தவிக்கிறேன். மனித உருவில் இருக்கும் அரக்கனே! உனக்குச் சாந்தி கிடைக்குமாயின் என்னையும் கொன்றுவிடு! இந்த உலகில் நான் மறுபிறவி எடுக்காவண்ணம் இந்த உலகத்தையே அழித்து விடு. உனக்குப் புண்ணியமாகும்!' என்று கதறி 'ஓ' வென அழலானாள் அப்பெண்.

அசோகரின் மனம் கரைந்தது. "பெண் திலகமே! நீ ரொம்ப மனம் நொந்து போயிருக்கிறாய் என்பதை அறிகிறேன். உன் உற்றார் உறவினர் மாண்டு போயிருக்கலாம். உன்னுடைய நாட்டு மக்களைக் கொன்றதால் மகத நாட்டார் அனைவரையும் கொடிய அரக்கர் என்று தீர்மானம் செய்துவிட வேண்டாம். இதோ! இப் பிணங்களைக் கண்டு நான் விட்ட கண்ணீர் வற்றவில்லை. உன் மனத்தைக் காட்டிலும் என் மனம் மிகவும் நோகிறது. மனிதன் எங்கிருந்தாலும் மனிதன்தான். உள்ளம் ஒன்றுதான். உணர்ச்சி ஒன்றுதான். சிலர் நன்கு சிந்தித்தபின் செயலாற்றுகிறார்கள். சிலர் செய்தபின் சிந்திக்கிறார்கள். பலர் சிந்தியாமலே மனம்போன போக்கில் போகிறார்கள். முதலாமவர் அறிவாளிகள்; இரண்டாமவர் தவறிழைக்கும் மனிதர்கள்; மூன்றாமவர் அரக்கர்கள். நான் இரண்டாமவர் நிலையில் இருக்கிறேன். முதலாமவர் நிலைக்கு உயர விரும்புகிறேன். மகத நாட்டு வீரரால் உன் கலிங்கநாட்டுக்கு ஏற்பட்ட கஷ்ட நஷ்டத்துக்குப் பிராயச் சித்தம் இருந்தால் சொல்; செய்கிறேன்" என்றார் அசோகர்.

இவ்வுரையைக் கேட்ட அவள் மனம் சாந்தம் அடைந்தது.

'இனி நீ இத்தொழிலை விட்டு, அன்பு சாகரமாகிய பகவான் போதி ஞானியின் பாத கமலங்களில் சரணடைந்தால்-அன்பும், அஹிம்சையும் மலரச் செய்தால், அதுவே பிராயச் சித்தம் ஆகும். அதுவரை உன் ஆன்மா சாந்தியடையாது' என்றாள் அப் பெண்.

'பெண்கள் நாயகமே! நான் தன்யனானேன். சரியான சமயத்தில் சரியான வழி காட்டினாய். அதோ விடியப் போகிறது! நீ இன்னும் என்னை இருளிலேயே வைத்திருக்கிறாய். உன் பெயரென்ன?'

"காஞ்சனை"

"உன் ஊர்?"

"யாதும் ஊரே"

"உன் உறவினர்?"

"யாவரும் கேளிர்"

"அப்படி யென்றால் அனாதையா? நான் உன்னை அனாதையாக்கி விட்டேனா?"

"நான் ஏன் அனாதையாகிறேன்? உற்றார் உறவினரை இழந்தவர்கள் அனாதைகளல்லர். உலகத்தாரின் அன்பை இழந்தவர்களே அனாதைகள்."

"ஆம்! உண்மைதான்! உன் பண்பட்ட மனத்தை மெச்சுகிறேன். இங்கு யாரைத் தேடிக்கொண்டிருக்கிறாய்?"

இக் கேள்வியைக் கேட்டதும் அவள் மீண்டும் விம்மி னள். கண்களைத் துடைத்துக் கொண்டாள். சிறிது நேரத்தில் கூறலானள்.

" இன்று காலையில் என் லட்சியமாகிய-சாந்தியாகிய கணவரைத் திலகமிட்டு, ஆரத்தி எடுத்து, ஆசீர்வதித்து இப் போர்க்களத்திற்கு அனுப்பிவைத்தேன். ஏற்கனவே என் தாய், தந்தையர், உற்ருர், உறவினர் என்னைவிட்டுப் பிரிந்து போய்விட்டனர். என் கணவர் வீரமரணம் எய்தி னர் என்று கேள்விப்பட்டேன். போர் ஓய்ந்ததிலிருந்து அவர் சடலத்தைத் தான் தேடிக் கொண்டிருக்கிறேன்."

" இரவு முழுவதுமா தேடிக் கொண்டிருந்தாய்? இப் பிணக் குவியலில் கண்டுபிடிப்பது சாத்தியமா?"

" சாத்தியமோ! இல்லையோ! அன்பு அதையெல் லாம் கவனிக்காது. அந்த முயற்சியில் என் உயிர் நீங்கி னும் நீங்கட்டும். முயற்சி மெய் வருந்தக் கூலி தரும் என்று நினைத்தேன். ஒருவன், தன் லட்சியத்தை—சாந் தியை ஆயுள் முழுதும் தேடுகிருன். நான் ஓர் இரவு தேடியது பெரிதா?"

" மாதரசியே! நீயே என் குரு! இன்று முதல் நீ கூறியதுபோல் இந்தக் கொலைத் தொழிலை விட்டு விட் டேன். மனையெங்குமுள்ள அழுகுரலை நிறுத்திச் சிரிப் பொலி கேட்கச் செய்வேன். நாடெங்கும் அன்பும், அஹிம்சையும் மலரச் செய்வேன். ஜீவகாருண்யமும், கலைகளும் வளரச் செய்வேன். 'வெட்டுங்கள்!' 'கொல் லுங்கள்!' எனும் வெறி முழக்கங்களை ஒழித்து, 'வாழுங் கள்! பிறரையும் வாழவிடுங்கள்!' எனும் அன்புக் கொள்கையைப் பரப்புவேன். நீ என்னுடன் வந்து உற்ற துணையாக இருப்பாயா?"

" அப்படியானால் தாங்கள் யார் ? "

" நான்தான் உன் சாந்தியைக் கலைத்த, மகத நாட்டு ரத்தவெறி பிடித்த மன்னன் அசோகன் ! "

" ஸம்ராட் !....... தாங்களா?....... நான் தங்களைப் போர்வீரன் என்று கருதினேன். மன்னிக்க வேண்டும். அவமரியாதையாக நடந்து கொண்டேன். இந்தப் பாபியை மன்னித்தருள வேண்டும். நான்.......நான்....'.

'காஞ்சனா ! தெரிந்து கொண்டேன். ஒருகாலத்தில் நான் உன்னைக் காதலித்தேன். நீ என் காதலை ஏற்க மறுத்து விட்டாய். நீ ஏற்கனவே ஒருவரைக் காதலித் திருந்தாய். நீ பாபியல்ல ! நானே பாபி ! என்னையே நீ மன்னிக்கவேண்டும் " என்று கை கூப்பியவண்ணம் அவள் முன் மண்டியிட்டார் அசோகர்.

" பிரபோ ! எழுந்திரும் ! என்னை வெட்கப்படும்படிச் செய்ய வேண்டாம். மன்னிப்பதற்கு நான் யார் ? அதோ ! தூரத்திலே உள்ள தோட்டத்திற்குள், கருணை வள்ளல் சாங்கிய முனிவர் இருக்கிறார் அவர் ஆசிர்வாதத்தைப் பெறுங்கள். "

" இதோ ! அங்கு செல்லத்தான் போகிறேன். நீயும் வருகிறாயா ? "

" ஆஹா ! தங்கள் சித்தம் என் பாக்யம் ! "

" அப்படியானால் என்னைப்பற்றிய அபிப்பிராயத்தை நீ மாற்றிக் கொண்டாயா ? "

'ஆஹா! அப்போதே மாற்றிக் கொண்டேன். மனிதன் எப்பொழுதும் ரத்தவெறி பிடித்தவனல்லன். ஏதோ சிற்சில சமயங்களில்தான் அவன் அரக்க உணர்ச்சி தாண்டவமாடுகிறது. அந்த உணர்ச்சியை மனிதன் அடக்கிவிட்டால்'யுத்தங்களை ஒழித்து விடலாம். யத்தங்களை மனிதன் ஒழிக்க வில்லையானுல், யுத்தங்களே மனிதனை ஒழித்து விடும்.'

இப்படிப் பேசிக் கொண்டே இருவரும் அருகில் இருந்த சோலைக்குள் புகுந்தனர். அங்கே கௌதம புத்தரின் பெரிய விக்கிரகம் ஒன்று தென்பட்டது. எதிரில் சென்றதும் அசோகர் தன் உடைவாளை உருவினுர்; 'படார்' என ஒடித்தார்—தூர எறிந்தார். கண்களில் நீர் பெருக "பிரபோ! கருணு சாகரமே! என்னை ரக்ஷித் தருளும். இனி நான் தங்களுடைய அடிமை. என் ஆன்மா கடைத்தேற வழி காட்டும்!"-என்று சாஷ்டாங்கமாக விழுந்தார்.

வெகு நேரம் அப்படியே இருந்தார். அவர் எழுந்த போது அவர் மனம் சாந்தி அடைந்திருந்தது. அவர் பார்வையில் ஒரு உறுதி காணப்பட்டது.

அவர் எழுந்து அருகில் மெய்மறந்து நின்றிருந்த காஞ்சனையை நோக்கி 'வா! போகலாம்!' என்ருர்.

காஞ்சனை, 'பிரபோ! என் வேலை தீர்ந்து விட்டது. நான் இன்று இரவு என் லட்சியத்தையும், சாந்தியையும் அந்தப் பிணக்காட்டில் தேடிக் கொண்டிருந்தது வியர்த்தமாகவில்லை. இனி எனக்கு யாதொன்றும் வேண்டாம். நான் வருகிறேன்" என்று கூறிப் புறப்படலானுள்.

"காஞ்சனு! எங்கே போகப் போகிருய்? உன் உற்ருர் உறவினரையும், கணவரையும் இழந்து விட்டாயே? இனி என் அன்பை ஏற்று என்னுடன் வருவாயா?"

"இல்லை! பிரபோ! என்னை மன்னிக்க வேண்டும்."

"அன்பு காட்டுவது பௌத்தத்தில் பாபமா?"

"இல்லை. பௌத்தமே அன்பு; அன்பே பௌத்தம். நான் ஒருவருக்கு மட்டும் காட்டும் குறுகிய அன்பை விட்டு, இவ்வுலகம் உய்ய இவ்வையக முழுமைக்கும் அன்பு காட்டப் போகிறேன். ஜனசமூகம் என்னை அழைக்கிறது. பொதுஜன சேவை செய்யப் போகிறேன். என்னைத் தடுக்க வேண்டாம். புத்தம் சரணம் கச்சாமி! தர்மம் சரணம் கச்சாமி! சங்கம் சரணம் கச்சாமி" என்று கூறிவிட்டு விடையை எதிர்பாராமலே புறப்பட்டு விட்டாள் காஞ்சனு.

அவள் சென்ற திசையையே பார்த்த வண்ண மிருந்தார் அசோக மன்னர். அத்திசையிலிருந்து சூரியன் உதயமானுன். சூரிய ஒளியில் அவள் மறைந்துவிட்டாள்.

இருள் நீங்கிற்று. பொழுது புலர்ந்தது.

---

# ஜரீனா

நான் வியாபார நிமித்தம் ஊர் ஊராய்ப் பிரயாணம் செய்பவன்.

ஒரு சமயம் குல்பர்கா நகரில் என் அலுவல்களை முடித்துக் கொண்டு, மாலையில் அங்குள்ள ஹஜ்ரத் காஜா பந்தே நவாஜ் வலியல்லாஹ் அவர்களின் தர்காவுக்குச் சென்றேன்.

வாசற்படியில் தம் தாடியை உருவிய வண்ணம் வேட்டைக்காகக் காத்துக் கொண்டிருந்த ஒரு சாஹிப், என்னைக் கண்டதும் அருகில் ஆவலுடன் வந்து "வலியல்லாஹ் அவர்களுக்கு ஏதாவது நேர்ச்சை இருந்தால் என்னிடம் கொடுங்கள், நான் பூர்த்தி செய்து தருகிறேன்" என்றார்.

வலியல்லாஹ் அவர்களுக்குப் பாத்திஹா ஓதப்போகிறேன். தங்கள் பெயரால் வேண்டுமானாலும் பாத்திஹா ஓதி விடுகிறேன்" என்றேன்.

அவர் கண்களை அகல விரித்துக்கொண்டு தாடியை உருவிய வண்ணம் அப்படியே நின்று விட்டார்.

நான் உள்ளே நுழைந்தபோது அங்கே நிஜார், ஷேர்வானி, துருக்கித் தொப்பி அணிந்திருந்த நடுத்தர வயதுடையவரும், புர்கா அணிந்திருந்த இரு மாதர்களும் பாத்திஹா ஓதிக் கொண்டிருந்தார்கள்.

அவர்கள் வெளியே வந்தபின், நானும் வெளியே வந்தேன். இருமாதர்களும், அங்குக்காத்துக்கொண்டிருந்த

வண்டியில் ஏறிக் கொண்டார்கள். வண்டி புறப்பட்டது. அவர் என்னுடன் வாசற்படியில் நின்றுவிட்டார்.

தங்களை ஏமாற்றிவிட்டு காணிக்கை ஒன்றும் செலுத்தாமல் வந்த எங்கள் இருவரையும் சாஹிப் மார்களின் கூட்டம் சூழ்ந்து கொண்டது. நான் கோபித்து விரட்டினேன். அந்தக் கனவானே தம் பையிலிருந்து ஐந்து ரூபாய் நோட் ஒன்றை எடுத்து அவர்களிடம் கொடுத்தார். அவர்கள் குதூகலத்துடன் அவிடத்தை விட்டு மறைந்தனர்.

கேள்விக் குறியுடன் அவரைப் பார்த்துக்கொண்டிருந்த என்னை நோக்கி "பாபம்! ஏழைகள்! நம்மைப் போன்றோர்கள் தரும் பணத்திலிருந்தே வயிறு வளர்க்க வேண்டியவர்களா யிருக்கிறார்கள்!" என்றார் அவர்.

நான் "அப்படி இரக்கம் காட்டுவதால்தான் இவர்கள் சோம்பேறிகள் ஆகி விட்டார்கள்—மனித மூட்டைப் பூச்சிகள் ஆகி விட்டார்கள்" என்றேன்.

"அது உண்மைதான். நானும் தங்கள் கொள்கையுடையவன் தான். நேர்ச்சை ஒன்றும் செய்யாமல் வெறும் பாத்திஹா மட்டும் தங்களைப்போல் ஓதி வந்துவிட்டேன் பார்த்தீர்களா! ஆனால் இவர்களைப் பார்க்கும்போது மனம் இளகி விடுகிறது; ஏதாவது கொடுத்துவிடுகிறேன்" என்றார்.

"வண்டி போய்விட்டது—தாங்கள் நின்றுவிட்டீர்களே!" என்றேன்.

"வீடு அருகில் தான் இருக்கிறது. மாலை வேளையாகையால் பெண்களை அனுப்பிவிட்டு நடந்து போகலாம் என்று தங்கிவிட்டேன்," என்றார்.

நானும் அவரும் பேசிக் கொண்டே சென்றோம். அவர் பெயர் ஹபீபுர்ரஹமான் என்றும், ஹைதராபாத்தில் உதவி வருமானவரி உத்தியோகஸ்தர் என்றும், கஷ்டப்பட்டு முன்னுக்கு வந்தவர் என்றும் தெரிந்துகொண்டேன். வண்டியில் சென்றவர்கள் தம்முடைய மனைவியும், ஹைஸ்கூலில் படிக்கும் மகள் ஜரீனாவும் என்றும் தெரிவித்தார். நான் மதுரையில் உள்ள ஒரு வியாபாரி என்று அறிமுகப் படுத்திக் கொண்டேன்.

அன்று இரவு ரயிலில் ஹைதராபாத்துக்குப் புறப்பட்டேன். ஹபீபுர்ரஹமானும் வண்டியில் உட்கார்ந்திருந்தார். என்னைக் கண்டதும் அழைத்துத் தம் அருகில் உட்கார வைத்துக் கொண்டார். என்னை அவருக்கு மிகவும் பிடித்து விட்டது.

அன்று இரவு முழுதும் இருவரும் தூங்காமல் வண்டியில் பேசிக்கொண்டே சென்றோம். ஹிட்லரின் பாதி மீசையிலிருந்து அரசியல் தத்துவம் வரை பேசினோம். இரண்டுநாள் லீவில் தம்முடைய பந்துவின் வீட்டுக்கு வந்திருந்ததாகவும், மறுநாள் உத்தியோகத்திற்குப் போக வேண்டும் என்றும் அவர் கூறினர். நாங்கள் இருவரும் நீண்டநாள் சிநேகிதர்களைப் போல் மனம்விட்டுப் பேசிக் கொண்டோம். அவருக்கு வயது ஐம்பது. என் வயதோ இருபது. ஆயினும் மறுநாட் காலை நாங்கள் ஹைதராபாத் ஸ்டேஷனில் இறங்கும்போது நெருங்கிய நண்பர்களாகி விட்டோம்.

நான் விடை பெற்றுக்கொண்டு ஹைதராபாத்தின் முக்கிய வியாபார ஸ்தலமாகிய ஆபித் ரோட்டிலிருந்த ஹோட்டல் ஒன்றில் போய்த் தங்கினேன். அவர் குடும் பத்துடன் சார்மினருக்கு அருகில் இருந்த தம்முடைய வீட்டுக்குப் போய் விட்டார்.

∴ ∴ ∴

மாலைப் பொழுது. வெயிலின் வெப்பம் தணிந்து கொண்டிருந்தது. அன்றைய அலுவல்களை முடித்துக் கொண்டு ஹோட்டலின் மேல்மாடியிலிருந்து வீதியைப் பார்த்துக் கொண்டிருந்தேன்.

'கிணுகிணு' வென்று ஒலித்துக்கொண்டு ஓடும் சைக்கிள்களும், ரிக்ஷாக்களும், 'பூம்பூம்' என்று பறந்து செல்லும் கார்களும், பிரயாணிகளைச் சுமந்து கொண்டு பேரிரைச்சலுடன் ஓடும் இரட்டை அடுக்கு பஸ்களும் ஹைதராபாத் ஒரு பெரிய நகரம் என்பதை எடுத்துக் காட்டிக் கொண்டிருந்தன. நவீன நகரங்களில் காணப் படும் அவசரம் அங்கும் காணப்பட்டது.

துருக்கித் தொப்பியின் குஞ்சலம் ஆட ஹபீபுர் ரஹமான் சைக்கிளில் வருவதைக் கண்டேன். மேலிருந்த வாறே கைதட்டிக் கூப்பிட்டேன். அவர் மேலே பார்த்தார். அந்தோ! பின்னால் வந்துகொண்டிருந்த ரிக்ஷா மோதி அவர் கீழே விழுந்தார். நான் அதிர்ச்சி யடைந்து கீழே இறங்கி ஓடினேன்.

அவரைச் சூழ்ந்து கூட்டம் கூடியிருந்தது. நல்ல வேளை! அவருக்குக் காயம் ஒன்றும் படவில்லை. உருண்டு

கிடந்த தம்முடைய தொப்பியை எடுத்துத் தூசியைத் தட்டிக் கொண்டிருந்தார்.

"காயம் ஒன்றும் படவில்லையே! எல்லாம் என்னால் ஏற்பட்டது. பெரிய தவறு செய்துவிட்டேன். உள்ளே வாருங்கள்" என்று என் அறைக்கு அழைத்துச்சென்றேன். அவர் நகைச்சுவை மிக்கவர். அன்று உடம்பு மந்தமாய் இருந்தது என்றும் அந்த அதிர்ச்சியால் ரத்தஓட்டம் துரிதமடைந்து உற்சாகமடைந்து விட்டதாகவும் கூறினார்.

என்னைத் தம்வீட்டுக்கு விருந்துக்கு வரும்படி அழைத் தார். அவருடன் வீட்டிற்குச் சென்றேன்.

என்னை வராந்தாவில் நாற்காலியில் உட்காரவைத்து விட்டு "இதோ! ஒரு நிமிஷத்தில் வந்துவிடுகிறேன்." என்று வீட்டுக்குள் சென்றார்.

வீடு சிறியதாயிருந்தாலும் அழகுணர்ச்சியுடன் கட்டப்பட்டு இருந்தது. மிகவும் சுத்தமாக, சின்ன பங்களாவைப் போல் காட்சியளித்தது. குரோட்டன்ஸ் செடிகள் அழகாக அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. வாசற் படியிலும், ஜன்னல்களிலும் அழகிய பூவேலை செய்த திரை போடப்பட்டிருந்தது.

ஒரு முதியவர் சூடான தேநீர் கொண்டுவந்து கொடுத் தார். அவர் அவ்வீட்டு வேலைக்காரர் என்று தெரிந்து கொண்டேன்.

நான் தேநீர் அருந்திக் கொண்டிருந்தேன். வாசலில் திரையிட்ட குதிரை வண்டி ஒன்று வந்து நின்றது. சொர்க்

கத்து ஹுரோ என்று ஐயுறத்தக்க அழகிய பதினன்கு வயது நிரம்பிய நவநாகரிக இளநங்கை, கையில் புஸ்தகங்களுடன் இறங்கினுள். நான் அங்கிருப்பது தெரியாததால் என் எதிரே வந்துவிட்டாள். ஒருகணம் இருவர் கண்களும் சந்தித்தன. பார்வைகள் மோதிச் சிதறின. ஒரு அம்பா பாய்ந்தது? ஓராயிரம் கணைகள் ஒரே சமயத்தில் என் நெஞ்சைத் துளைத்துச் சல்லடையாக்கிச் சென்றன. மறுவினுடி அவள் மானைப்போல் பாய்ந்து உள்ளே சென்ருள்.

சந்திரன், அந்தத் திரை மேகத்தில் மறைந்து விட்டான். திரை ஆடிக் கொண்டிருந்தது. 'இனி நீ பார்க்க முடியாது' என்று அது என்னைக் கிண்டல் செய்வதுபோல் எனக்குப் பட்டது.

எனக்குத் தேநீர் கொடுத்த முதியவர் சிரித்துக் கொண்டே 'இவள் எஜமானரின் மகள் ஜரீன! ரொம்பக்-குறும்புக் காரி' என்று கூறினர்.

நான் காலிக் கோப்பையை அவரிடம் கொடுத்து விட்டு நாற்காலியில் சாய்ந்தேன். அருகில் இருந்த ஜன்னல் கதவு கிரீச்சிட்டது. யாரோ மெதுவாகத் திறக்கிருர்கள் என்பதை உணர்ந்து கொண்டேன், அது ஜன்னல் கதவுக்குத் தெரிகிறதா? கிரீச்சிட்டு ரகசியத்தை வெளிப் படுத்தி விடுகிறது. மீண்டும் மெதுவாகச் சாத்தப் பட்டது. மீண்டும் திறக்கப் பட்டது. இரு கூரிய விழிகள் கதவிடுக்கிலிருந்து என்னைக் கவனிப்பதாக உணர்ந்தேன். கைவளையல் குலுங்கும் ஒலி கேட்டது.

பெண்கள், ஆண்களைத் திரைக்குப் பின்னுலிருந்தும், கதவிடுக்குகளிலிருந்தும் நன்கு பார்க்கலாம். அவர்களை

மட்டும் ஆண்கள் பார்க்க முடியாது. கோஷா முறை பெண்களுக்கு எவ்வளவு உதவுகிறது பார்த்தீர்களா?

நான் பூமியிலா இருந்தேன்? சொர்க்கலோகத்தில் ஊஞ்சல் ஆடிக் கொண்டிருந்தேன். நானும் என்ன அழகில் குறைந்தவனா? இருபது வயது நிரம்பிய கட்டு மஸ்தான காளையல்லவா? என் மனம் கனவுலகில் சஞ்சரிக்கத் தொடங்கிற்று.

கொஞ்ச நேரத்தில் ஹபீபுர் ரஹமான் வெளியே வந்தார். 'போக்கிரி ஜரீனா தாமதமாகப் பள்ளிக்கூடத்தி லிருந்து வந்திருக்கிறாள். அவள் கையால் சமைத்தால் ரொம்ப ருசியாயிருக்கும். அரைமணி நேரத்தில் ஆகி விடும்' என்றார் சிரித்துக் கொண்டே.

"அரைமணி என்ன? எவ்வளவு நேரம் ஆனாலும் பரவாயில்லை. என்ன அவசரம்? இரவு முழுதும் இங்கேயே இருக்கச் சொன்னாலும் இருக்கிறேன்" என்றேன் நான்.

அன்று சமையல் ரொம்பவும் ருசியாக இருந்தது. 'ஜரீனா நன்றாகச் சமைப்பவள்தான்! ஆயினும் இதுவரை இவ்வளவு ருசியாக சமைத்ததில்லை!' என்றார் ஹபீபுர் ரஹமான்.

'என் ஆயுளிலேயே இத்தகைய அறுசுவை உண்டியை உண்டது இல்லை' என்றேன் நான்.

யாரோ யாவற்றையும் திரைக்குப் பின்னாலிருந்து கேட்டுக் கொண்டிருந்து திரையை ஆட்டிவிட்டுச் சென்றார்கள்.



அந்தத் திரையின் அசைவுக்கு அர்த்தம் 'சமையல் நன்ருயிருந்தது என்று பாராட்டியதற்காக நன்றி' என்பதுதான் என்று புரிந்து கொண்டேன்.

அன்று முதல் அடிக்கடி ஹைதராபாத்துக்குப் போகத் தொடங்கினேன், சாப்பாடு முழுதும் ஹபீபுர் ரஹமான் வீட்டில்தான் என்று சொல்லத் தேவையில்லை.

நாட்கள் உருண்டோடின. ஜரீனு, எஸ். எஸ். எல். ஸி. தேறிவிட்டாள்.

யாரிடமும் சொல்லமாட்டீர்களே? அப்படியானல் காதை அருகில் கொண்டுவாருங்கள். ஒரு ரகசியம் கூறு கிறேன். எனக்கும் ஜரீனுவுக்கும் கடிதத் தொடர்பு ஏற்பட்டு விட்டது. ஜரீனுவும், நானும் சந்தித்துப் பேசியு மிருக்கிருேம். எப்படி? எங்கே? என்றெல்லாம் கேட் காதீர்கள். அது ரகசியம்! அந்த வீட்டு வேலைக்கார ராகிய முதியவருக்கும், எனக்கும் தான் தெரியும்.

ஒரு சமயம் நானும், ஹபீபுர் ரஹமானும் பேசிக் கொண்டிருந்தோம்.

'நான் தங்கள் ஊருக்கு வரவேண்டும் என்றிருக் கிறேன்' என்ருர் அவர்.

'ரொம்ப சந்தோஷம். அவசியம் பார்க்க வேண்டிய அழகான ஊர் எங்கள் ஊர். எங்கள் விருந்தாளியாக வரவேற்கக் காத்திருக்கிறேன்' என்று குதூகலத்துடன் கூறினேன்.

'ஒரு தடவை மட்டும் வர விரும்பவில்லை. வாழ்க்கை முழுதும் அடிக்கடி வர விரும்புகிறேன். ஜரீனுவைத்

தங்களுக்கு நிக்காஹ் செய்து கொடுப்பதற்காகத் தங்கள் தாய் தந்தையருடன் பேச விரும்புகிறேன்.' என்ருர்.

எனக்குச் சந்தோஷம் தாங்க முடியவில்லை. கலியாணமே ஆகி விட்டதைப் போன்றும், நானும், ஜரீனவும் தோட்டத்தில் ஆடிப் பாடி உலாவுவதைப் போன்றும் கனவு கண்டேன்.

ஆனல் !..................?

ஆம்! ஆனல்! நான் அப்போது கலியாணம் செய்து கொள்வதற்குத் தயாராயில்லை. ருதுவாகி வீட்டிலிருக்கும் என் தங்கையை மணம்செய்து கொடுத்த பின்பே நான் விவாகம் செய்துகொள்ள வேண்டும் என்று தீர்மானம் செய்திருந்தேன். போதிய பணமும் கையில் இல்லை.

இவ்விஷயம் ஹபீபுர் ரஹமானிடம் கூறி, கொஞ்ச நாள் பொறுத்திருக்கும் படியும், நான் ஜரீனவைத் தவிர வேறு யாரையும் மணந்துகொள்ளப் போவதில்லை என்றும் ஏற்கனவே தாய் தந்தையரின் சம்மதத்தைப் பெற்றுக் கொண்டேன் என்றும் தெரிவித்தேன்.

அவர் சந்தோஷம் தெரிவித்தாராயினும் தாமத மாகும் என்று கேள்விப்பட்டுக் கொஞ்சம் வாட்டமுற்ருர்.

காலம் கடந்தது. இந்தியா சுதந்திரம் பெற்றது. ஹைதராபாத்தில் ரஸாகார் இயக்கம் மும்முரமடைந்தது. ரஸ்வியின் பிரசங்கங்கள் உலகெங்கும் எதிரொலித்தன. குழப்பங்களும், கலகங்களும் தலைகாட்டின.

நான் வெகுநாள் வரை அங்கு போகவில்லை. குழப்ப நிலைமையில் அங்கு போகவேண்டாம் என்று என் தாய் தந்தையர் தடுத்து விட்டனர்.

கொஞ்ச நாட்கள் ஹபீபுர் ரஹமானிடமிருந்து கடிதங்கள் வந்துகொண்டிருந்தன. ஆனல் அவற்றில் ரஸாகார் இயக்கத்தைப் பற்றி ஒரு வார்த்தையும் இல்லே. குடும்ப விஷயங்களே மட்டுமே எழுதினர். பிறகு அவர் தபால் வருவதும் நின்று போயிற்று. நான் எழுதிய கடிதங்களுக்கும் பதில் இல்லே.

*ஹைதராபாத் மீது போலீஸ் நடவடிக்கை எடுக்கப் பட்டது.* அங்கு இந்திய ராணுவ ஆட்சி ஏற்பட்டது. நான் ஆவலுடன் அங்கு சென்றேன்.

*ரயிலே விட்டு இறங்கியதும் நேரே ஹபீபுர் ரஹமான் வீட்டிற்குப் போனேன். வீடு பூட்டிக் கிடந்தது. அக்கம்* பக்கத்தில் விசாரித்ததில் அவரைப் பற்றிய தகவலே *கிடைக்கவில்லே.*

அவர் உத்தியோகம் பார்த்த ஆபீஸில் விசாரித்தேன். அவர் வேலேயிலிருந்து நீக்கப்பட்டு விட்டார் என்றும் இப் போது எங்கிருக்கிருர் என்று தெரியாது என்றும் கூறினர்கள்.

வீதி வீதியாகத் தேடினேன். மூலே முடுக்கெல்லாம் தேடினேன். காணப்படவில்லே. உயிருடன் இருக்கிருர் களா? அழிந்துவிட்டார்களா? அல்லது பாகிஸ்தான் சென்று விட்டார்களா? ஒன்றுமே தெரியவில்லே. குல்பர்காவில் இருந்த அவருடைய பந்து வீட்டிற்கும் சென்று விசாரித்தேன். என்ன ஆனர்கள் என்ற தகவலே கிடைக்கவில்லே.

என் மனம் படாத பாடு பட்டது. எண்ணுத எண்ண மெல்லாம் எண்ணி எண்ணி ஏங்கினேன்.

ஆய்ந்து ஓய்ந்துபோய் ஒருநாள் ஹைதராபாத்தில் சினிமாவுக்குப் போனேன். கொஞ்ச நேரமாவது கவலை யற்றிருக்க முடியுமா என்று பார்ப்பதற்காகத்தான்.

டிக்கட் வாங்க வரிசையில் நின்றுகொண்டிருந்த போது, ஒரு ரிக்ஷா உள்ளேவந்து நுழைந்தது. ரிக்ஷாவின் திரை விலகிற்று. உள்ளே ஜரீனா உட்கார்ந்திருந்தாள். அவளும் என்னைப் பார்த்தாள். அவள் ஏதோ அவசரமாக ரிக்ஷாக்காரனிடம் கூறினாள். ரிக்ஷாக்காரன் ரிக்ஷாவை இழுத்துக் கொண்டு வெளியே ஓடினான். அவள் இறங்கி வருவாள் என்று எதிர்பார்த்த எனக்கு ஆச்சரியம் உண்டா யிற்று. 'ஜரீனா! ஜரீனா!' என்று கூவிக்கொண்டு அந்த ரிக்ஷாவுக்குப் பின் ஓடினேன். ரிக்ஷாவின் வேகம் அதிகப் பட்டது. நானும் ஒரு ரிக்ஷாவில் ஏறிக்கொண்டு அந்த ரிக்ஷாவைப் பின் தொடர்ந்தேன். ஜரீனாவின் ரிக்ஷா ஒரு சந்தில் போய் நின்றது. அவள் இறங்கி ஒரு சிறிய வீட்டுக்குள் நுழைந்தாள். அந்த வீட்டில் வேறு யாரும் இருப்பதாகத் தெரியவில்லை. நானும் ஓடிப் போய் பின்னால் நுழைந்தேன்.

அவள் என்னைப் பார்க்க விரும்பாததைப் போல் முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டு நின்றாள்.

"ஜரீனா! ஏன் இப்படி ஓடிவந்தாய்? இது என்ன கோலம்? உன் தாய் தந்தையர் எங்கே?" என்று கேட்டேன்.

அவள் மறுமொழி ஒன்றும் கூறாமல் சுவரில் சாய்ந்த வண்ணம் விம்மி விம்மி அழத் தொடங்கினாள். நான் அருகில் சென்றேன். அவள் விலகிச் சென்று விட்டாள்.

"பேசு! ஜரீனு! பேசு! என்ன நேர்ந்தது? ஏன் அழுகிருய்? நான் இதுவரை வரவில்லை என்று கோபமா?"

"தங்கள் மீது எனக்கு ஒரு கோபமும் இல்லை. விதியின்மீதுதான் கோபப்படுகிறேன். நான் மாண்டுவிட்டேன் என்று நினைத்துக்கொண்டு இவ்விடத்தை விட்டுப் போய் விடுங்கள்."

"ஏன் ஜரீனு அப்படிக் கூறுகிருய்?" என்று ஆத்திரத்தில் அவளை நெருங்கி முகத்தை என் பக்கம் திருப்பி, "என்ன நேர்ந்தது?" என்றேன்.

அவள் முகமே மாறிப் போயிருந்தது. வாடிய மலரைப்போல் அவள் தோன்றினுள்.

"நான் மிகவும் துரதிர்ஷ்டசாலி! தங்களைச் சந்தித்திருக்கவே கூடாது. பழைய ஜரீனு மாண்டு போனுள். என்மனம் நிம்மதியாயில்லை. தயவு செய்து என்னை இப்போது ஒன்றும் தொந்தரவு செய்யாதீர்கள், போய் காலையில் இங்கு வாருங்கள். எல்லா விஷயங்களையும் கூறுகிறேன்" — அவள் தொண்டை கரகரத்துப் போயிருந்தது.

"உன் தாய் தந்தையர் எங்கே?" என்று பதட்டத்துடன் கேட்டேன்.

அவள் விம்மினுளே யொழிய பதில் அளிக்கவில்லை.

"எல்லாம் காலையில் கூறுகிறேன். இப்போது தொந்தரவு செய்யாதீர்கள்" என்ருள் மீண்டும்.

"நான் உன்னை இந்த நிலையில் விட்டு விட்டுப் போகவா?" என்றேன்.

"போகாவிட்டால் இங்கேயே படுங்கள். நான் அடுத்த அறையில் படுத்துக் கொள்கிறேன். என்னை மட்டும் பேசும்படி வற்புறுத்த வேண்டாம். விடிந்த பின் என்னை வந்து பார்க்கலாம்" என்றாள் ஜரீனா.

நான் அப்படியே அங்குப் படுத்துக் கொண்டேன். அவள் அடுத்த அறையில் போய்க் கதவைத் தாழிட்டுக் கொண்டாள்,

எனக்குத் தூக்கம் எங்கே வரப் போகிறது? படுக்கையில் புரண்டு கொண்டே கிடந்தேன். அந்த இரவு அம்மம்ம! கழியவே மாட்டேன் என்றது. ஒரு யுகம் போல இருந்தது. நடுநிசிவரை ஜரீனாவின் அறையில் விளக்கு எரிந்து கொண்டிருந்தது. பிறகு அணைந்து விட்டது.

இன்னும் விடியவில்லை. காகங்கள் கரையத் தொடங்கின. விடிவெள்ளி தோன்றியிருந்தது. எனக்கு இருந்த ஆத்திரத்தில் எழுந்து ஜரீனாவின் கதவைத் தட்டினேன். அது உடனே திறந்து கொண்டது. இருட்டாயிருந்ததால் ஸ்விட்சைப் போட்டேன்.

அந்தோ! என்ன காட்சி! ஜரீனா படுக்கையில் மாண்டு கிடந்தாள். அவள் அருகில் 'விஷம்' என்று எழுதிய புட்டி இருந்தது. நான் துடித்தேன்; கதறினேன், மேஜைமீது இரண்டு கடிதங்கள் இருப்பதைக் கண்டேன். ஒன்று போலீஸ் இன்ஸ்பெக்டருக்கும், மற்றொன்று எனக்கும் எழுதப் பட்டிருந்தது.

போலீஸ் இன்ஸ்பெக்டருக்கு எழுதியிருந்த கடிதத்தில் தன்னை இழிநிலையிலிருந்து விடுவித்துக் கொள்ள விஷம் உண்டு தற்கொலை செய்து கொண்டதாகவும், வேறு யாரும் கொலை செய்யவில்லை என்றும் எழுதியிருந்தாள்.

எனக்காக எழுதப்பட்டிருந்த கடிதத்தில் கீழ்க் கண்டவாறு இருந்தது.

"என் அன்பே! என் மனதுக் கிசைந்த மணாளர் கிடைத்து விட்டார் என்றும், தங்களை மணந்து ஆனந்தமாய் வாழப் போவதாகவும் கனவு கண்டேன். அந்தோ! விதி சதி செய்துவிட்டது.

ரஸாகார் இயக்கத்தில் என் தந்தையைச் சேரும்படி அவ்வியக்கத்தார் வற்புறுத்தினார்கள். தந்தை மறுத்தும் அவர்கள் விடவில்லை. ஒத்துழைத்தாலன்றி உயிருடன் வாழமுடியாது என்று பயமுறுத்தினார்கள். தந்தை வேறு வழியின்றி பொருள் உதவி மட்டும் செய்வதாக வாக்களித்தார். அதன்படி உதவி வந்தார். போலீஸ் நடவடிக்கைக்குப் பின் அவர் ரஸாகார் இயக்கத்தில் சேர்ந்தவர் என்று வேலையிலிருந்து நீக்கப்பட்டு சிறையில் அடைக்கப் பட்டார். மாரடைப்பால் அவர் இரண்டு தினத்தில் சிறையிலேயே மாண்டார். அவரைப் பின் தொடர்ந்து தாயும் சென்றார். நான் நடுத் தெருவில் விடப்பட்டேன். தத்தளித்தேன். உறவினர் ஒருவரும் ஒத்தாசை செய்ய முன்வர வில்லை. தங்கள் ஊருக்கு வர முயன்றேன். கையில் பணம் இல்லை. வயிற்றுச் சோற்றுக்கே திண்டாடினேன்.

இந்த நிலையில் என்மீது கண் வைத்திருந்த ஒரு இளைஞன், என்னை மோசம் செய்து விட்டான். பொய் சொல்லி என்னை அழைத்துச் சென்று தனியே இருக்கும் போது என் கற்பை அழித்துவிட்டான். அன்று முதல் விபசாரி ஆக்கப் பட்டேன். நான் சண்டாளி. தங்களை மணக்க லாயக்கற்றவள். என்னை அறவே மறந்து வேறு யாரையாவது மணம் செய்துகொண்டு இன்புற்றிருக்கும் படி மிகவும் கேட்டுக் கொள்கிறேன். அப்படிச் செய்தால் தான் என் ஆன்மா சந்தோஷப்படும். ஆண்டவன் தங்களைக் காப்பாற்றுவானாக!" என்று படித்து முடித்தேன்.

ஆண்டவனே! அவள் என்னை மணக்கத் தயாராயிருந்தபோது நான் தயாராயில்லை. நான் தயாரானபோது அவள் தயாராயில்லை.

என் தலை சுழன்றது. வீடு சுழன்றது. உலகமே வேகமாகச் சுழல்வதைப்போல் உணர்ந்தேன். மயக்கமுற்றுக் கீழே விழுந்தேன். நான் கண் விழித்த போது கட்டிலில் கிடத்தப்பட்டிருந்தேன். என்னைக் கவலையுடன் ஒரு முதியவர் உற்று நோக்கிக் கொண்டிருந்தார்.

'நான் எங்கே இருக்கிறேன்?' என்று அம் முதியவரை நோக்கிக் கேட்டேன். 'என் வீட்டில்தான் இருக்கிறீர்கள்! நான் ஒரு யூனானி டாக்டர். எதிர் வீட்டில் தான் நீங்கள் மயக்கம் அடைந்து விழுந்தீர்கள். சத்தம் கேட்டு வந்து உங்களையும், ஜரீனாவையும் இங்குக் கொண்டு வந்தேன்...............' என்றார் அவர்.

'ஜரீனா! ஜரீனா!' ..............நான் என்னையறியாமல் கத்தினேன்.

'கவலைப்பட வேண்டாம்! ஜரீனா உயிரோடிருக்கிருள்!' என்ருர் அம் முதியவர்.

'உயிரோடு இருக்கிருளா? உண்மையைத்தான் சொல்லுகிறீர்களா?'-நான் ஆச்சரியத்துடன் கேட்டேன்.

'உண்மையைத்தான் கூறுகிறேன். 'விஷம்' என்று எழுதியிருந்த புட்டியில் மயக்க மருந்து வைக்கப்பட்டிருந்தது. என் வீட்டிலிருந்து தான் அதை அவள் திருடிக் கொண்டு போயிருக்கிருள். மயக்க முற்றிருந்தாள். அவள் மயக்கமும் தெளிந்து விட்டது' என்ருர் சிரித்துக் கொண்டே.

'என் ஜரீனா எங்கே?' என்றேன்.

'நிக்காஹ் செய்து கொள்வதாக வாக்களித்தால்தான் காட்டுவேன்' என்ருர் யூனனி டாக்டர் குறுநகை பூத்த முகத்துடன். 'செய்து கொள்கிறேன். இப்போதே காஜியாரைக் கூட்டிக்கொண்டு வாருங்கள்' என்றேன் ஆத்திரத்துடன்.

இச் சமயம் ஜரீனா புன்னகை பூத்த முகத்துடன் என் எதிரே வந்தாள்.

நான் வாயடைத்துப் போய் அவளையே பார்த்துக் கொண்டு நின்றேன்.

'நான் சாக விரும்பியதோ, உங்களுக்கு எழுதிய கடிதத்தின் பிற்பகுதியோ உண்மையானதல்ல. உங்கள் மனத்தைச் சோதிக்கவே இவை யாவையும் செய்தேன். மயக்க மருந்து என்று தெரிந்தே அந்தப் புட்டியை எடுத்

துச் சென்றேன். ஹைதராபாத்தில் பெரும்பாலோர் எங்கள் நிலைமையையே அடைந்தார்கள். அவதிக்கு ஆளான பல பெண்களைப் பற்றியும் நீங்கள் கேள்விப் பட்டிருக்கலாம். அதேமாதிரி நானும் ஏன் ஆயிருக்கக் கூடாது என்று நீங்கள் நினைத்தால் என்ன செய்வது? அப்படி ஆகிவிட்டேன் என்று தெரிந்தாலும் என்னை மணந்துகொள்ள சம்மதிப்பீர்களா என்று பரிசோதனை செய்யவே இவ்வாறு செய்தேன். இந்த யூனானி டாக்டர் தான் என்னைக் காப்பாற்றி வருபவர். நான் இவருக்குத் துணையாக மருந்து வகைகள் தயார் செய்வதில் ஈடுபட்டிருக்கிறேன்' என்றாள்.

நான் எல்லாம் வல்ல இறைவனுக்கு நன்றி செலுத்தினேன்.

# விபரீத விளைவு

அன்பார்ந்த ஆசிரியை "ரமணி" அவர்களுக்கு,

வணக்கம். தங்களுடைய பத்திரிகையின் இந்த மாத இதழ் வரப்பெற்றேன். அடடா! என்ன அழகு! என்ன அழகு!

எழுத்துக் கலையும், அச்சுக் கலையும் ஒருங்கே கர்வம் கொள்ளத்தக்கதாய் தங்கள் பத்திரிகை விளங்குகிறது. பெண்களுக்காகப்பெண்களால் நடத்தப்படும்பெண்களின் பத்திரிகையை இவ்வளவு உயர்தரமாக இதுவரை யாரும் வெளியிட்டதில்லை. பெண்ணினத்தின் பெருமையே தங்களால் ஓங்கி வளர்கிறது. தங்களுக்கு முன் ஆண்களின் திறமை வெட்கித் தலைகுனிய வேண்டும்.

இந்த ஆணவம் பிடித்த ஆண்கள் தங்களுடைய பத்திரிகைகளில் "பெண்கள் பகுதி" என்று சில பக்கங்களை ஒதுக்கி, அவற்றில் எட்டுச் சுட்டிக் குழந்தைகளை வைத்துக் கொண்டு செவ்வனே வீட்டுக் காரியத்தைச் செய்து முடிப்பது எப்படி? எண்ணெயில்லாமல் ருசியாக அப்பளம் பொரிப்பது எவ்விதம்? பத்துருபாய் விலையுள்ள புடவையைப் பத்து விதமாகக் கட்டிக்கொண்டு ஆண்கள் வீட்டுக்கு வரும்போது பல்லை இளித்துக்கொண்டு நிற்பது எவ்வாறு? என்றெல்லாம் எழுதி, பெண் இனத்தை இழிவு செய்வது கண்டு என் மனம் பொருமுவதுண்டு. வேறு விஷயங்களே பெண்களுக்கு வேண்டியதில்லை என்பது இவர்கள் எண்ணமா?

தாங்கள், ஆடவரை அடக்கி ஆள்வது முதல் அணு குண்டு செய்வது வரை சகல விஷயங்களைப் பற்றியும் எழுதிவருவது கண்டு என்மனம் புளகாங்கித மடைகிறது. தங்களுடைய பத்திரிகையைப் படித்த ஆனந்தத்தில் ஒரு நாட்டியமே ஆடிவிட்டேன் போங்கள்!

தங்களைக் காணவேண்டும் என்கிற அவா என் உள்ளத்தில் குமிழியிடுகிறது. தங்களைக் காணவும், பேசவும், பழகவும் ஆசைப்படுகிறேன். தற்சமயம் தயவு செய்து தங்களுடைய போட்டோவை அனுப்பும்படிக் கோருகிறேன்.

இந்த இதழில் என்னுடைய கவிதையைச் சிறந்த சித்திரங்களுடன், எடுப்பாகப் பிரசுரித்தற்காக மிகவும் நன்றி. அடுத்த இதழுக்காக இத்துடன் மற்றொரு கவிதையை அனுப்புகிறேன். தங்கள் போட்டோவைச் சீக்கிரம் அனுப்பிவைக்கவும்.

தங்கள் அன்பு மிகுந்த,

"ராஜம்"

∴ ∴ ∴

அன்பார்ந்த "ராஜம்" அவர்களுக்கு,

வணக்கம். தங்களுடைய கடிதமும், கவிதையும் கிடைத்தன. என்ன ஆவேசமான கடிதம் எழுதியிருக்கிறீர்கள்!

இளமையின் மிடுக்கு தங்களுடைய கடிதத்திலும், கவிதையிலும் பிரதிபலிக்கிறது. தங்களுடைய வாழ்த்துக்

களுக்காக வந்தனங்கள். ஏஜண்டுகள் பணம் அனுப்ப வில்லையே என்ற ஏக்கத்தாலும், உழைப்பு மிகுதியாலும் வாடியிருக்கும் போது தங்களைப் போன்றோர் அனுப்பும் கடிதங்களால் தான் வாழ்க்கையில் சுவை உண்டாகிறது; உயிர் உண்டாகிறது.

தங்களுடைய கவிதை முன்னைய கவிதைகளைவிடச் சிறந்ததாயிருக்கிறது. கவித்வம் மிக்கதாயும், உள்ளத்தை உலுக்கிவிடத் தக்கதாயும் அமைந்திருக்கிறது. அதைப் படிக்கும் போதே உள்ளம் உயர்வடைகிறது. இரண்டு தடவை படித்தால் போதும். என்னையறியாமலேயே என் வாய் தங்கள் கவிதைகளை முணுமுணுக்கத் தொடங்கி விடுகிறது.

தாங்கள் வறட்டுக் கவியல்ல. உண்மைக் கவி; உயிர்க் கவி; பிறவிக் கவி.

தங்களைக்காண என் மனமும் துடிக்கிறது. என் தாய் தந்தையர் மூடக் கொள்கை மிகுந்தவர். போட்டோ பிடிப்பதை ஆகாதது என்று கருதியதால் இதுவரை என் போட்டோ ஒன்றும் பிடிக்கவில்லை. சீக்கிரம் பிடித்து அனுப்பிவைக்கிறேன்.

தங்களுடைய போட்டோவை வாசகர்கள் பிரசுரிக் கும்படி வற்புறுத்துகிறார்கள். ஆகையால் அவசியம் அனுப்பி வைக்கவும். அத்துடன் தங்களுடைய வாழ்க் கைத் துணைவரின் படமும் எதிர்பார்க்கிறேன்.

தங்கள் அன்புமிக்க,

"ரமணி"

அன்பார்ந்த "ரமணி" அவர்களுக்கு,

வணக்கம். தங்களுடைய கடிதத்தில் என்னை அளவுக்கு மீறிப் புகழ்ந்திருக்கிறீர்கள்.

போட்டோ பிடிப்பது கெட்டது என்ற மூடக் கொள்கை மலிந்த சூழ்நிலையில் பிறந்தும், இத்தகைய தீவிர வாதியாகத் தாங்கள் இருப்பதைக் கண்டு சந்தோஷப்படுகிறேன். ஆம்! கொடுமை எல்லையைத் தாண்டும் போதுதான் புரட்சி தோன்றுகிறது. தாங்கள் இயற்கையின் விளைவு! நாம் இருவரும் ஒத்த கொள்கையினராயிருப்பதைப் பற்றி மிகவும் சந்தோஷப்படுகிறேன்.

எனக்குச் சிரிப்பாயிருக்கிறது! எனக்கு வாழ்க்கைத் துணைவர் உண்டு என்பதை எப்போது எப்படித் தெரிந்து கொண்டீர்கள்? நான் இன்னும் மணமாகாதவள். தாய் தந்தையர் இல்லை. என் அண்ணுவுடன் இருக்கிறேன். அவன் படத்தை வேண்டுமானல் அனுப்பிவைக்கிறேன். ஏதாவது பயன்படுமா வென்று பாருங்கள்.

என்னுடைய லட்சிய வாழ்க்கைத் துணைவர் கிடைத்த பின்தான் மணந்து கொள்ளப் போகிறேன். அந்தத் தெய்வீக சக்தியாகிய காதல் என் நெஞ்சைத் தொடுமுன் நான் யாரையும் தொடப் போவதில்லை.

என்னுடைய போட்டோக்களில் நல்லது ஒன்றுகூடத் தற்சமயம் வீட்டில் இல்லை. சீக்கிரம் புதிதாக ஒன்று எடுத்து அனுப்பி வைக்கிறேன். தங்கள் படத்தை அடுத்த தபாலிலேயே அனுப்பிவைக்கவும்.

தங்கள் அன்பு மிகுந்த,

"ராஜம்"

அன்பார்ந்த "ராஜம்"

வணக்கம். பாலை வனத்திற்கு மழையைப் போல், வாடிய பூங்காவிற்குத் தென்றலைப் போல் தங்கள் கடிதம் என் இதயத்துக்கு உவகையை அளித்தது. நான் முற்றிலும் புதிய உலகத்துக்குக் கொண்டு போகப் பட்டேன்.

தங்களுக்கு மணமாகிவிட்டதா என்று நேரிடையாகக் கேட்பது அவ்வளவு நாசூக்காயிராது என்று தான் வாழ்க்கைத் துணைவரின் படத்தை அனுப்பும்படி எழுதினேன். எனக்கு வேண்டிய பதில் கிடைத்துவிட்டது. எனக்கும் இன்னும் விவாகமாகவில்லை என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். ஆம்! அவரவர் மனப்பாங்கிற் கேற்ற துணைவர் கிடைக்காவிடில் என்ன சுகம்?

தங்களுடைய அடுத்த கவிதையைச் சீக்கிரம் அனுப்பி வைக்கவும். பத்திரிகை அச்சுக்குப்போகும் நாள் நெருங்கி விட்டது. இந்த இதழிலேயே தங்கள் படத்தைப் பிரசுரிக்க ஏற்பாடு செய்தும் கிடைக்காததால் ஏமாற்றம் அடைந்தேன். அடுத்த தபாலில் அவசியம் அனுப்பவும். என் படத்தைப் பற்றி அவசரப்பட வேண்டாம். மூச்சு விட நேரமில்லை. போட்டோ பிடிக்க நேரம் எங்கே இருக்கிறது? தங்கள் மறுமொழியைத் தாமதமின்றி எதிர் பார்க்கிறேன்.

தங்கள் அன்பு மிக்க,

**"ரமணி"**

⁂ ⁂ ⁂

அன்பார்ந்த "ரமணி"

வணக்கம். தங்கள் அன்பு பொங்கும் தபால் கிடைத்தது. போட்டோவைச் சீக்கிரம் அனுப்ப முடியாமைக்கு விசனிக்கிறேன். அண்ணு தினசரி காலதாமதமாக வீட்டுக்கு வருகிருர். தாங்கள்தான் முதலில் என் வேண்டுகோளைப் பூர்த்தி செய்யக் கூடாதா? ஒரே ஊரில் இருந்தால் நானே காமிராவைக் கொண்டு வந்து படம் பிடித்துவிடுவேன். அடடா! நேரில் இருந்தால் படம் பிடிப்பானேன்? நேரில் அளவளாவி மகிழ்ந்திருப்பேன். வேற்றூரிலிருந்து என்ன செய்ய முடியும்?

நிற்க, தங்கள் கடிதத்துடன் மற்ருெரு கடிதமும் வரப்பெற்றேன். அது யார்? 'இந்திரன்' எனும் புனை பெயரில் தங்கள் பத்திரிகையில் சிறுகதைகள் எழுதுபவர்? என் கவிதைகளைப் படித்துப் படித்துப் பித்துத்தலைக்கேறி எண்ணைக் காணுமலே அடங்காக் காதல் கொண்டு என்ன செய்வதென்று தெரியாமல் மயங்கிக் கிடக்கிருராம். பாவம்! இங்கே ஓடிவர வேண்டாம். தடுக்கி விழுந்து பற்களை இழந்து விடப்போகிருர். நேரே 'கீழ்ப்பாக்கம்' ஆஸ்பத்திரிக்குப் போகச் சொல்லுங்கள். மேற்கொண்டு இத்தகைய கடிதங்கள் எழுதினுல் தலை காணுமற் போய் விடும் என்று எச்சரிக்கை செய்யுங்கள்.

ஆயினும், அவரைப் பற்றிய விவரம் எனக்குத் தெரிவிக்கவும்.

இத்துடன் கவிதை ஒன்றும் அனுப்பியிருக்கிறேன்.

தங்கள் அன்பு மிகுந்த,

"ராஜம்"

அன்பார்ந்த "ராஜம்"

வணக்கம். அந்த 'இந்திர'னுக்குத் தக்க எச்சரிக்கை செய்கிறேன். தங்களுடைய முந்திய கடிதம் வந்தபோது அவர் என்னைப் பார்க்க வந்திருந்தார். அப்போது கடிதம் மேஜைமீது கிடந்தது. படித்துப் பார்த்து விட்டார் போலிருக்கிறது. தாங்கள் தக்கவருக்கென்று காத்துக் கொண்டிருப்பதாக எழுதி இருப்பதைப் படித்ததும் துணிவு ஏற்பட்டிருக்கிறது.

தாங்கள் அவரைப் பற்றிய விவரம் கேட்டிருக்கிறீர்கள். அவர் அப்படி ஒன்றும் கெட்டவரில்லை. சாந்தமானவர். பெண்கள் கோரும் சகல உரிமைகளையும் கொடுக்கச் சம்மதிப்பவர். தம்முடைய வாழ்க்கைத் துணைவி இழுத்த கோட்டைத் தாண்டமாட்டார். நல்ல நிறம். ஒல்லியான சரீரம். நடுத்தர உயரம். எப்போதும் சுத்தமாக க்ஷவரம் செய்த முகத்துடனும், அழகாகச் சீவி விட்ட கிராப்புடனும், மூக்குக் கண்ணாடி அணிந்துகொண்டிருப்பார். சினிமா, கவிதை, கடற்கரை இவற்றில் மோகம் அதிகம்.

தங்களுடைய கவிதையை அனுப்பியதற்காக வந்தனம். போட்டோவைப் பற்றி ஏதேதோ சாக்குப் போக்கு எழுதியதற்காக விசனம். அடுத்த தபாலிலாவது அவசியம் எதிர்பார்க்கிறேன்.

தங்கள் அன்பு மிக்க,

**"ரமணி"**

∴ ∴ ∴

அன்பார்ந்த "ரமணி"

வணக்கம். விசனிக்க வேண்டாம். சீக்கிரம் போட்டோவை அனுப்பி வைக்கிறேன்.

நிற்க, அந்த இந்திரனின் வர்ணனையைப் படித்ததும் ஒரு கொட்டாவி விட்டேன். பெண்களின் மனத்திலிருந்து வெகு வேகமாக மறைந்து வரும் ரகத்தைச் சேர்ந்தவர் அவர். யாருக்கு வேண்டும்? செயற்கை அழகும், பெண்கள் சொன்னபடி ஆடும் கோழைத் தனமும்? என் லட்சிய புருஷர், கட்டுமஸ்தான காளையாகவும், ஒளிவீசும் கண்களும், நெஞ்சுறுதியும், சிறந்த குணங்களும் உள்ளவராகவும் இருக்க வேண்டும். ஒரு கணம் கண்ணில் நீர் தருவித்தாலும், மறுகணம் இதழ்களில் புன்னகை தவழச் செய்பவரா யிருக்க வேண்டும். அடக்குகிற சமயம் அடக்கியும், அணைக்கிற சமயம் அணைத்தும் கொண்டு போக வேண்டும். அத்தகையவரிடத்தில்தான் ஒரு பெண்ணுக்கு உண்மையான இன்பம் கிடைக்கும். பெண்மை நிறைவுபெற ஆண்மையையே நாடுகிறது. மற்றெருரு பெண்மையை அல்ல.

அது கிடக்கட்டும். அனாவசியமாக ஏதேதோ எழுதிக் கொண்டு போகிறேன். இந்த இதழில் தங்கள் தலையங்கம் ரொம்பப் பிரமாதம் போங்கள்!

அடுத்த இதழுக்குக் கவிதை அனுப்ப முடியாமைக்கு விசனிக்கிறேன். கொஞ்ச நாளாக ஏனோ உற்சாகமா

யில்லே. கவிதை எழுத உட்கார்ந்தால் கதை எழுதத் தோன்றுகிறது. கதை எழுதத் தொடங்கினுல் அது கட்டுரையாகப் பரிணமிக்கிறது. கட்டுரையையும் எப்படி முடிப்பது என்று தோன்ருமல் தூங்கி விடுகிறேன். என்ன கோளாறு என்பது எனக்கே விளங்கவில்லே.

தங்கள் அன்பு மிகுந்த,

**"ராஜம்"**

ஃ ஃ ஃ

*என் உள்ளத்தைக் கொள்ளே கொண்ட "ராஜம்"*

கொஞ்ச நாளாக நீ உற்சாகமாயில்லே என்று படித்து என் உற்சாகமும் ஹிட்லரைப் போல் திடீரென்று மறைந்து விடடது. நீ சீக்கிரம் கலியாணம் செய்து கொள்ள வேண்டும். பிரம்மச்சரிய வாழ்க்கை என்ன வாழ்க்கை? ஏக்கம் பிடித்த நாட்கள்! தூக்கமில்லாத இரவுகள்!

ஆச்சரியப்படாதே! உன்னே ஒருமையில் விளித்து ஏன் இந்தக் கடிதம் எழுதுகிறேன் தெரியுமா? உன் காதை அருகில் கொண்டுவா! ஒரு ரகசியத்தைக் கூறு கிறேன். நான் பெண்ணல்ல. கட்டுமஸ்தான காளே. ''ரமணி'' எனும் பெயராலும், பெண்களுக்காகப் பத்திரிகை நடத்துவதாலும், நீ என்னேப் பெண் என்று தவருக நினேத் துக் கடிதங்கள் எழுதினுய். நானும் வேடிக்கைக்காகப் பெண்ணேப் போலவே கடிதங்கள் எழுதி வந்தேன். நீ

எழுதிய லட்சிய வாழ்க்கைத் துணைவனின் வர்ணனையைப் படித்ததும் எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. உனக்காகவே நான் பிறந்தவனே என்று வியந்தேன். என் நிறம் கொஞ்சம் கறுப்பு. ஆனால் இதர விஷயங்களில் நீ கோரும் லட்சியத் துணைவன்.

என் உயிரே! என் லட்சியமே! உன்னைப் போன்ற ஒருத்திக்காக எத்தனை நாளாய்க் காத்துக் கொண்டிருக்கிறேன் தெரியுமா? காணமலே உன்மேல் காதல் கொண்டு விட்டேன். இனி நீ இல்லையேல் நானும் இல்லை. இனி நான் உயிர் வாழ்வதும் வாழாததும் உன் கையில் தான் இருக்கிறது. என்னை உனக்கு அர்ப்பணம் செய்து விட்டேன். உன் சம்மதத்திற்காகக் காத்துக்கிடக்கிறேன். உடனே 'சரி' என்று உன் சம்மதத்தை எழுது.

உனக்காக ஏங்கித் தவிக்கும்,

உன் உயிர்க் காதலன்,

**"ரமணி"**

ஃ ஃ ஃ

ஐயா ஆசிரியரே!

பேஷ்! யாராவது அல்லி, மெல்லி தங்களுக்குக் கிடைக்க வில்லையா? அவர்களிடம் தங்கள் காதலைத் தெரிவியுங்கள். உங்கள் கடிதத்தைக் கிழித்து, நெருப்புக் கிரையாக்கி விட்டேன். நீர் மட்டும் எதிரே இருந்தால்

உங்கள் மூக்கை உள்ளே அனுப்பி இருப்பேன். அவ்வளவு கோபம் எனக்கு வந்தது.

உங்களுடைய அந்தப் பெரிய நீண்ட காதுகளையும் அருகில் கொண்டுவாருங்கள். ரகசியத்தைத் தெரிவிக்கிறேன். நானும் பெண்ணல்ல; சர்க்கார் உத்தி யோகஸ்தன்; கட்டு மஸ்தான காளை. என்னுடைய பெயராலும், பெண்களுக்காகப் புனையும் கவிதைகளாலும் தாங்கள் தான் முதலில் என்னைப் பெண் எனக் கருதித் தபால் எழுதினீர்கள். நான் உங்களுக்காகத் தூண்டில் போட்டால் நீரே என்மீது பெரிய வலையை வீசி விட்டீர். அது **விபரீத விளைவை** உண்டாக்கி விட்டது.

இவிடமிருந்தே உங்களுக்குக் கோடி வணக்கம். இதைப் படித்து ஏமாற்றம் ஏற்பட்டால் உடனே ஒரு கோப்பை விஷத்தை அருந்துங்கள்.

தங்களை வெறுக்கும்,

**" ராஜம் "**

---

# மன நிறைவு

மாலையில் கல்லூரி விட்டதும் சைக்கிளில் ஏறிவீட்டுக்குப் புறப்பட்டான் சுலைமான். அவன் வாய், சினிமாப் பாட்டொன்றை முணு முணுத்துக் கொண்டிருந்தது.

வழியில் பத்திரிகைகள் விற்கும் கடையில் பார்வையைச் செலுத்தினான். வண்ண அட்டையுடன் தொங்கும் அன்று வந்த சினிமாப் பத்திரிகை, அவன் கவனத்தைக் கவர்ந்தது. புன்முறுவல் பூத்த முகத்துடன் அட்டையில் காட்சியளித்த அழகி, "பத்திரிகையில் ஒன்றுமில்லாவிட்டாலும் எனக்காகவாவது வாங்கு" என்று வற்புறுத்துவதைப்போல் உணர்ந்தான். உடனே சென்று அதனை வாங்கினான்.

சைக்கிளில் சாய்ந்தபடியே பக்கங்களைப் புரட்டினான். ஒரு பக்கத்தில் ஒரு நடிகை. இடுப்பை ஆட்டி நாட்டியமாடிக் கொண்டிருந்தாள். வேறொன்றில் ஒருத்தி சோகமே உருவாகி, செயற்கைக் கண்ணீர் உகுத்துக் கொண்டிருந்தாள். மற்றொன்றில் ஒரு நடிகன் உருவிய வாளை ஓங்கிய வண்ணம், "இந்தத் தகர வாளால் என் படங்களில் எத்தனை பேரை 'டணார், டணார்' என்று வெட்டாமல் வீழ்த்துகிறேன் தெரியுமா?" என்று சொல்லாமல் சொல்லிக்கொண்டிருந்தான்.

பத்திரிகையை எடுத்துக்கொண்டு சைக்கிளில் மீண்டும் ஏறிப் புறப்பட்டான் சுலைமான்.

அவன் வெகு தூரம் செல்லவில்லை. இளைஞர் அனைவரும் மணந்து கொள்ளத் துடிக்கும் பேரழகி 'மிஸ் மசாலா' நடிக்கும் 'கண்ணுமூச்சி' என்ற படத்தின் விளம்பரம் ஒரு சுவரில் ஒட்டப்பட்டிருந்தது. அதன் அழகில் லயித்துப் பார்த்துக்கொண்டே சென்றவன், எதிரே வந்துகொண்டிருந்த கிராமக் கிழவியைக் கவனியாமல் அவள் மீது சைக்கிளை ஏற்றிவிட்டான்.

இருவரும் கீழே உருண்டனர்.

நல்ல வேளை! கிழவிக்கு அதிகக் காயம்படவில்லை. அவள் எழுந்து தூசியைத் தட்டிக்கொண்டே கிராமிய பாஷையில் " நீ நாசமாய்ப் போக! குட்டிச் சுவராய்ப் போக!" என்று காரசாரமாகத் திட்டத் தொடங்கினாள். சுலைமான் " தப்பித்தேன், பிழைத்தேன் " என்று தூசியைக் கூடத் தட்டாமல் சைக்கிளில் ஏறிக் காற்ருய்ப் பறந்தான்.

அவன் வீட்டுக்குள் நுழையும்போது நெஞ்சு, 'பட பட' வென்று அடித்துக் கொண்டிருந்தது.

தன் அறையில் சென்று ஆடைகளைக் களைந்துகொண்டிருந்தான். அவன் தாய் ஹாஜரா மலர்ந்த முகத்துடன் உள்ளே வந்தாள்.

'சுலைமான்! வீட்டில் யார் வந்திருக்கிருர்கள், என்று பார்த்தாயா ?" என்ருள் ஹாஜரா.

"யார் வந்திருக்கிருர்கள் ?" என்று கேட்டான் சுலைமான்.

"உன் மாமா' மகளின் 'பல்கீஸ்' வந்திருக்கிருள். நீ அவளைப் பார்த்து இரண்டு ஆண்டுகள் ஆகிவிட்டன. பூப்பெய்திய பின் இந்த இரண்டு ஆண்டுகளில் அவள் எவ்வளவு மாறியிருக்கிருள் தெரியுமா? அவளை அடையாளமே கண்டுகொள்ள முடியவில்லை. உன்னுடன் ஓடியாடி விளையாடிக் கும்மாளம் போடுகிறவள், இப்போது நீ வருவதைக் கண்டதும் நாணிக் கோணி என் அருகில் வந்து, தலையில் துணியைப் போட்டுக் கொண்டு உன் பெயரைக்கூடச் சொல்ல வெட்கப்பட்டு "மச்சான் வாராக" என்று கூறிஞள் .... உம் .... என்னமோ....நீ பீ.ஏ பாஸ் பண்ணியவுடன் உங்கள் இருவருக்கும் ஒரு முடிச்சுப்போட்டு விட்டால் என் மனப்பாரம் நீங்கிவிடும். நிம்மதியாக 'அல்லாஹ்' என்று கண்ணை மூடிவிடுவேன்"

"அம்மா! அந்த முடிச்சுப் போடவும் வேண்டாம்; நீ கண்ணை மூடவும் வேண்டாம்"

"ஏண்டா! அப்படிச் சொல்லுகிருய்?"

"நீ நீண்ட ஆயுளுடன் இருக்க வேண்டும் என்பதற்காகத்தான் சொல்லுகிறேன். வேருென்றும் இல்லை" என்று கூறிக்கொண்டே சோப் பெட்டியை எடுத்துக் கொண்டு முகம் கழுவப் பின்புறத் தோட்டத்திலுள்ள கிணற்றுக்குச் சென்ருன் சுலைமான்.

ஹாஜரா தேநீர் கொண்டுவரச் சென்ருள்.

கிணற்றருகே புருக்களுக்குத் தீனி போட்டுக்கொண்டிருந்த பல்கீஸ், சுலைமான் அங்கு வருவதைக் கண்டதும் தலையில் முக்காட்டைப் போட்டுக் கொண்டு திரும்பி நின்றுகொண்டாள்.

"யார்? பல்கீஸா? எப்போது வந்தாய்?....அடே யப்பா! வெட்கத்தைப் பார்! மூக்கு நுனி தெரிகிறது. முக்காட்டை இன்னும் இழுத்து விட்டுக்கொள்! பெரிய மனுஷியாகி விட்டாயல்லவா?" என்றான் சுலேமான்.

பல்கீஸ் பேசவில்லை. வேண்டுமென்றே முக்காட்டை மிக நீளமாக இழுத்து விட்டுக்கொண்டாள்.

"அட டூர்! பேசாவிட்டால் போ!" என்று கூறி சுலேமான் முகம் கழுவத் தொடங்கினான். மாடப்புறு ஒன்று 'படபட' வென்று பறந்து வந்து அவன் தலையில் உட்கார்ந்தது.

அதைத் தள்ளிவிட்டு, சுலேமான் திரும்பிப் பார்த் தான். பல்கீஸ் 'களுக்' கென்று சிரித்துவிட்டு வீட்டுக் குள் மறைந்தாள். அவள் குறும்புதான் இது என்பதை சுலேமான் புரிந்துகொண்டான்.

கை கால்களைச் சுத்திசெய்து கொண்டு தன் அறை யில் வந்து உட்கார்ந்தான். தேநீர்க் கோப்பையுடன் ஹாஜரா உள்ளே வந்தாள். கோப்பையை மகன் முன் மேஜைமீது வைத்துவிட்டு 'பல்கீஸைப் பார்த்தாயா? எப்படி இருக்கிறாள்?' என்று கேட்டாள்.

சுலேமான் முகத்தைச் சுழித்து, "அவள் நகையும்! புடவைக் கட்டும்! அசல் குறத்தி மாதிரி இருக்கிறாள்!" என்றான்.

"ஏண்டா! அவள் அழகுக் கென்ன? மூக்கும் முழியுமாய் நன்றாயிருக்கிறாள். நாகரிகமாக ஆடை அணியவில்லை; நகைகள் போட்டுக் கொள்ளவில்லை

என்ருல் நீ சொல்லிக்கொடுத்து நாகரிகப்படுத்திக்கொள்! தாய் தந்தையருக்கு ஒரே பெண். கண்போல வளர்க்கிருர் கள். பணம், குணம் இரண்டுமுண்டு. உனக்கு நிக்காஹ் செய்துவைக்க வேண்டும் என்பதற்காகவே அவள் தாய், பல்கீஸ் என்று தன் மகளுக்குப் பெயர் வைத்தாள். நீங்க ளும் சிறு வயதிலிருந்து அன்புடன்தானே பழகிவருகிறீர் கள்! அவளுக்குக் கொடுக்காமல் நீ எதையும் தின்ன மாட்டாய். அவள் தன் பங்கையும் தின்றுவிட்டு உன் பங்கையும் தட்டிப் பறித்துக்கொண்டு ஓடி விடுவாள். நாங்கள் அவளை அதட்டிஞல், நீ தடுத்து சிரித்துக் கொண்டிருப்பாயே!"

"ஆம், அம்மா! சிறுவயதில் கூடிவிளையாடிஞல், காதல் கொள்ளவேண்டும்; கலியாணம் செய்து கொள்ள வேண்டும் என்பது சட்டமா?. இப்போதும் அன்பு இருக் கிறது. காதல் இல்லையே"

"காதல் இல்லாத கலியாணம் இறைச்சியில்லாத பிரியாணியைப் போன்றது. காதல் வாழ்வின் நிலவொளி; ஊடல் வாழ்வின் இனிய சங்கீதம். இவையின்றி நான் யாரையும் மணந்து கொள்ளமாட்டேன். பல்கீஸ் சுத்த கர்ஞடகம் மட்டுமன்று; தற்குறியுங்கூட. அர்த்தந் தெரியாமல் ஆடி ஆடி அரபி ஓதத் தெரியுமே யொழிய வேறு ஒரு எழுத்தும் தெரியாது. பி. ஏ. படித்த உன் மகன், நான்கு பேருடன் பழகத்தெரியாத தற்குறியையா மணந்துகொள்வது? எனக்கு நாகரிகமான படித்த பெண் தேவை. அப்போதுதான் மன நிறைவு ஏற்படும். இந்த விஷயத்தில் வற்புறுத்தாதே அம்மா!" என்று அழுத்த மாகக் கூறிஞன் சுலைமான்.

ஹாஜரா மூக்கு முனையில் விரல் வைத்தவண்ணம் சிலையாக நின்று விட்டாள். இத்தகைய பிரசங்கத்தைத் தன் மகனிடமிருந்து கனவிலும் எதிர்பார்த்ததில்லை. ஒன்றும் கூறத் தோன்ருதவளாய் அறையை விட்டு வெளியேறினுள்.

சுலைமான், கதவைத் தடாலென்று சாத்திக்கொண்டு தேநீரை அவசர அவசரமாகத் தொண்டைக்குள் கொட்டிக் கொண்டான். முகட்டைப் பார்த்தவண்ணம் படுக்கையில் படுத்தான்.

அவன் சிந்தனை சிறகை விரித்து மேலே மேலே பறக்கத் தொடங்கிற்று.

"யார்மீது காதல் ஏற்படுகிறதோ அவளையே கலியாணம் செய்துகொள்ள வேண்டும். விதியின், விளையாட்டுப் பொம்மை ஆகிவிடக்கூடாது. நெஞ்சுர மற்றவனுக்குத் தான் விதி, மண்ணுங்கட்டி எல்லாம்" என்று கருதினுன்.

"என் காதலியே! நீ எங்கிருக்கிருய்? எனக்காக யாராவது ஒருத்தி பிறந்துதானே இருக்க வேண்டும்! எந்த வீட்டில் வளர்கிருய்? உன்னை எங்கே எப்போது எப்படிச் சந்திப்பேன்?

சினிமாவில் நேருவது போன்ற சம்பவம் நிகழ வேண்டும். என் காதலியைச் சந்திக்க வேண்டும். தோட்டத்தில் ஆடிப்பாடிக் களிக்கவேண்டும். என் காதலி கோஷாப் பெண்ணு? கோஷாவிலிருந்து விடுதலையடைந்த பெண்ணு? கோஷாப் பெண்ணுயிருந்தால் எப்படிக் காண்பேன்? எப்படிக் காதலிப்பேன்? அந்தோ! இந்தப் பாழும் கோஷா முறை ஏன் இருக்கிறது?" என்று தனக்குள் கூறிக்கொண்டே படுக்கையில் புரண்டான்.

∴ ∴ ∴

சுலைமான் அந்த ஆண்டில் பீ. ஏ. பரீட்சை எழுதினான். விடுமுறை கழிந்தபின் பத்திரிகைகளில் பரீட்சை முடிவு வெளியாயிற்று. ஆவலுடன் பத்திரிகையைப் பிரித்துப் பார்த்தான். அவனுக்கு முந்திய எண்ணும், பிந்திய எண்ணும் இருந்தன. அவன் எண் காணப்படவில்லை. மகனின் தோல்வியைக் கேட்டு ஹாஜரா மனமுடைந்துபோனாள்.

சுலைமான் தோல்வியுற்ற பாடங்களைப் பிரத்யேகமாய்ப் படித்துப் பரீட்சை எழுதுவதற்காகச் சென்னை சென்று, அங்கொரு பிரத்யேகப் போதனைக் கல்லூரியில் சேர்ந்தான்.

அவன் சென்னையில் பாடங்கள் மட்டும் படிக்கவில்லை. தன் காதலியையும் தேடத் தொடங்கினான். அங்குதான் தனக்கேற்ற முற்போக்குள்ள பெண்கள் இருப்பார்கள் என்பது அவன் எண்ணம்.

முதன் முதலில் ஒரு பெண்ணைப் பார்த்தான். அவன் மனம் எப்படி எப்படியோ ஆகத்தொடங்கிற்று. தனக்குக் காதல் ஏற்பட்டு விட்டதென்று கருதினான். ஆனால் அவளோ சுலைமானைத் திரும்பிப் பார்க்கவும் இல்லை. "சிறு பார்வை இன்பம்கூட கொடுக்க மறுக்கும் கஞ்சப்பெண் அவள்!" என்று பொருமினான். பிறகு அவளைப்பற்றி விசாரித்ததில் அவளுக்கு ஏற்கனவே விவாகம்ஆகிவிட்டதென்று தெரிந்தது. அவன் அடைந்த துயரத்துக்கு அளவில்லை. "அட அல்லாஹ்! என்னைச் சந்திக்குமுன் இவள் ஏன் கலியாணம் செய்து கொள்ள வேண்டுமோ!" என்று அங்கலாய்த்தான். பிறகு அவளை மறந்தான்.

அவன் படித்துக் கொண்டிருந்த போதனுக் கல்லூரி யில், எஸ். எஸ். எல். ஸி. யில் தோல்வியுற்று அவனைப் போலவே படிக்க வந்தாள் சல்மா. அவளுடைய இரட் டைச் சடையும், மூக்குக் கண்ணுடியும், நவநாகரிக உடை யும் சுலைமானின் உள்ளத்தைக் கொள்ளை கொண்டன.

சல்மாவின் தந்தை சென்னையில் ஒரு வியாபாரி. அவர்கள் வீட்டில் கோஷா முறையே கிடையாது, ஆகை யால் சுலைமான் தாராளமாக சல்மா வீட்டுக்குப் போய் வரத் தொடங்கினுன். சீக்கிரமே அவன் சல்மா வீட்டு மனிதர்களில் ஒருவன் ஆகிவிட்டான்.

சல்மாவுக்குத் தாய் தந்தையரும், அண்ணனும் இருந்தார்கள். தந்தையும், அண்ணனும் வியாபாரத் தைக் கவனித்து வந்தனர். சுலைமானுக்கு ஏதோ கொஞ் சம் நிலபுலன், வீடுவாசல் உண்டு; பீ.ஏ. படிக்கிருன் என்பதையும், தந்தையில்லாதவன், தாயின் பராமரிப்பில் வளர்ந்து வருகிருன் என்பதையும் அறிந்து அன்புடனே பழகினர். ஆனுல் சல்மாவுடன் அதிகமாக நெருங்கிப் பழக அவனை அனுமதிக்கவில்லை. ஜாக்கிரதையாகவே இருந்தனர். சுலைமான் கொஞ்ச நேரம் பேசிக்கொண் டிருந்துவிட்டு வந்து விடுவான்.

செப்டம்பர் மாதம் வந்தது. சல்மாவும், சுலைமானும் பரீட்சை எழுதினர். சல்மா தேறிவிட்டாள். சுலைமான் மீண்டும் ஒரு பாகத்தில் தோல்வியுற்ருன். அது அவனுக் குத் தாங்கொணு வருத்தத்தைக் கொடுத்தது. மீண்டும் தொடர்ந்து படித்தான்.

நாட்கள் உருண்டோடின.

ஒரு நாள் ஞாயிற்றுக்கிழமை மாலையில் சுலைமான் சல்மா வீட்டுக்குச் சென்றான். அங்கே ஒரு புதிய இளைஞன், சல்மாவின் அண்ணனுடன் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தான்.

வழக்கத்துக்கு மாறாக அன்று யாரும் சுலைமானை வரவேற்கவும் இல்லை; உட்காரும்படிச் சொல்லவும் இல்லை. சுலைமான் தயங்கிக்கொண்டே காலியாகக்கிடந்த நாற்காலியில் போய் உட்கார்ந்து கொண்டான். அது அவனுக்கு வேதனையளித்தது.

கொஞ்ச நேரம் பேசியிருந்துவிட்டு, அப் புதிய இளைஞன் போய்விட்டான். அவனை வாசல்வரை சென்று சல்மாவின் அண்ணன் வழியனுப்பி வந்தான்.

'திருதிரு' வென்று விழித்துக்கொண்டு வீற்றிருந்த சுலைமானிடம் சல்மாவின் அண்ணன் வந்து, "அவர் பெயர் ஹபீப். எம். ஏ. பி. எல். வக்கீல் தொழிலில் நல்ல வருவாய்! அவருக்குத் தான் சல்மாவை நிக்காஹ் செய்யத் தீர்மானித்திருக்கிறோம்" என்றான்.

சுலைமானின் தலையிலே பேரிடி விழுந்தது போல் இருந்தது. அவன் தலை சுழன்றது.

சுலைமான் எழுந்து சல்மாவின் அறைப்பக்கம் காலடி எடுத்து வைத்தான். சல்மாவின் அண்ணன் தடுத்து "இனி அவளை அடிக்கடி சந்திக்கவேண்டாம். இன்னொருவருக்குச் சொந்தமாகி விட்டாள்" என்றான்.

சுலைமானின் கண்களிலே தீப்பொறி பறந்தது. முறைத்துப் பார்த்துவிட்டு 'விருக்' கென்று அங்கிருந்து வெளியேறினன்.

அன்றிரவு சுலைமான் தூங்கவேயில்லை. படுக்கையில் புரண்டுகொண்டே கிடந்தான்.

மறுநாட் காலை விடிந்ததும் பிச்சுவா ஒன்றை எடுத்து இடுப்பில் சொருகிக்கொண்டு, இரண்டில் ஒன்று சல் மாவையே கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும் என்று ஆவேசத்துடன் புறப்பட்டான்.

திடீர் என்று சல்மா முன் போய் நின்ருன் நிலைமான். "நீ யாரை மணந்துகொள்ளப் போகிருய்?" என்று கோபத்துடன் கேட்டான்.

அவனுடைய அலங்கோலமான நிலைமையும், கோப மும் சல்மாவுக்கு அச்சத்தை யூட்டின. ஆயினும், தந்தை யும், அண்ணனும் இருப்பதால் தைரியமடைந்து "ஹபீ பைத்தான்" என்ருள்.

"என்னிடம் பழகியதெல்லாம் எதற்காக? இப்படி மோசம் செய்து என் வாழ்வைப் பாழாக்கவா?" என்று கர்ஜித்தான் சுலைமான்.

"உங்களை நன்கு அறிந்துகொள்வதற்காகப் பழகி னேன். எனக்குப் பிடிக்கவில்லை. ஆகையால் வேறு நல்ல காதலரைத் தேடிக் கொண்டேன். இதில் தவறு ஒன்றும் இல்லையே!

நீங்கள் உங்கள் மாமன் மகள் பல்கீஸுடன் பழகி னீர்கள். உங்களுக்குப் பிடிக்கவில்லை. ஆகையால் வேறு

ஒரு நல்ல பெண்ணைத் தேடி வந்தீர்கள். ஆணுக்கு மட்டும் நல்ல காதலியைத் தேடும் உரிமையிருந்தால் பெண்ணுக்கு மட்டும் நல்ல காதலரைத் தேடும் உரிமை இல்லையா? உங்கள் மீது காதல் கொண்டுவிட்டதாக நான் எப்போதும் சொல்லவில்லையே! இப்போதும் உங்களிடம் அன்பு இருக்கிறது. சகோதரரைப் போலவே பாவிக்கிறேன்" என்றாள் சல்மா.

"நான் உன் சகோதரனா?" என்று ஆத்திரத்துடன் கூறி, இடுப்பில் இருந்த பிச்சுவாவை உருவி அவள் நெஞ்சுக்கு நேராக உயர்த்தினான் சுலைமான். சல்மா திடுக்கிட்டுப் பின்னடைந்தாள்.

உடனே ஆபத்தை உணர்ந்து, சல்மாவின் தந்தையும் அண்ணனும் எழுந்து ஓடிவந்து, சுலைமானைப் பிடித்தனர். சல்மாவின் அண்ணன், சுலைமான் கையிலிருந்த பிச்சுவாவைப் பிடுங்க முயன்றான். சுலைமான் திமிறி, அவன் தலையில் ஓங்கிக் குத்தினான். அடுத்த கணம் சல்மா அண்ணனின் மண்டையிலிருந்து இரத்தம் பீறிட்டுப் பாய்ந்தது. 'ஆ! ஊ' என்று கூச்சல் கிளம்பிற்று. சல்மா கதறினாள். சல்மாவின் தாயும் ஓடிவந்து கூச்சலிட்டாள். வெளியிலிருந்து ஆட்கள் 'திமு திமு' வென்று ஓடிவந்தனர். சுலைமானைக் கட்டிப் பிடித்துக்கொண்டனர். சீக்கிரமே அவன் அனைவராலும் நன்கு புடைக்கப்பட்டு ஒரு தூணில் கட்டப்பட்டான்.

சில வினாடிகளில் போலீஸார் உள்ளே நுழைந்தனர். கொலை செய்ய முயன்றதாக, இந்தியன் பினல்கோடு 307 ஆவது பிரிவுப்படி குற்றம்சாட்டி, சுலைமானை அழைத்துச் சென்றனர். அவன் பாதுகாவலில் வைக்கப்பட்டான்.

செய்தி அறிந்த சுலைமானின் தாய் ஹாஜரா துடி துடித்தாள். தன் அண்ணனும், பல்கீஸின் தந்தையுமான முஹம்மத் யாஸீனை அழைத்துக்கொண்டு சென்னை வந்து சேர்ந்தாள்.

வழக்கு நடந்தது. சுலைமான் பயங்கரமான ஆயுதத்தால் ஆழமான காயத்தை உண்டுபண்ணியதாகவும், கொலை செய்ய முயன்றதாகவும் போலீஸார் வாதித்தனர். சுலைமானின் தரப்பில் இரண்டு வக்கீல்கள் வாதித்தும் பயன்படவில்லை. நீதிபதி சுலைமானின் மீது இரக்கம் காட்டித் தண்டனையை மட்டும் குறைத்து, மூன்று ஆண்டு சிறைத் தண்டனை விதித்தார்.

ஹாஜராவும், முஹம்மத் யாஸீனும் கண்ணீரும் கம்பலையுமாய் சுலைமானைச் சிறையில் வந்து கண்டுபோனார்கள். ஹாஜரா பேரதிர்ச்சியடைந்தாள். அவள் ஊருக்குப் போனதுமுதல் அன்ன ஆகாரமே உட்கொள்ளாமல் நோய்வாய்ப்பட்டாள். அண்ணன் யாஸீனும், பல்கீஸும், ஹாஜராவை மிகவும் கவனித்தனர். ஆனால் பயன்படவில்லை. ஓர் ஆண்டு கழிந்தது. ஹாஜரா கண்ணை மூடிவிட்டாள். பல்கீஸின் முகத்தைப் பார்த்துக் கண்ணீர் வடித்துக் கொண்டே அவள் ஆவி துறந்தாள்.

தாய் இறந்த செய்தியைச் சிறையில்கேட்ட சுலைமான் 'கோ' வென்று கதறி அழுதான். அவனுக்குப் பைத்தியம் பிடித்து விடும்போல் இருந்தது. அவனுடைய மாமனார் முஹம்மத் யாஸீன் அடிக்கடி வந்து அவனுக்கு ஆறுதல் கூறிப் போனார்.

மூன்று ஆண்டுகள் கழிந்தன.

தண்டனைக் காலம் முடிந்து சுலைமான் வெளியில் வந்தான். ஊருக்குப்போக ரயிலேறினான். ரயிலில் அவன் சிலைபோல் உட்கார்ந்திருந்தான். அன்று முஹம்மத் யாஸீன் வந்து அழைத்துப் போவதாகக் கடிதம் எழுதி யிருந்தார். ஏன் வரவில்லை? என்று சிந்தித்துக் கொண் டிருந்தான்.

அவ்வேளையில் பலமான இருகரங்கள் அவன் தோள் களைக் குலுக்கின. சுலைமான் தலை நிமிர்ந்து பார்த்தான். தன்னுடைய கல்லூரிப் பேராசிரியர் எதிரே நிற்பதைக் கண்டான்!

உடனே எழுந்து, "வாருங்கள் ஸார்! உட்காருங்கள் ஸார்!" என்றான்.

பேராசிரியர் அவன் எதிரே பலகையில் அமர்ந்தார்.

"சுலைமான்! உன் மாமனார் முஹம்மத் யாஸீன் காய்ச் சலாகப் படுத்திருக்கிறார். உன்னை வந்து அழைத்துப் போவதாகச் சொல்லியிருந்தாராம். முடியவில்லை. என்னை அனுப்பி வைத்தார்.

உன் மாமனார் மூலம் உன் கதை முழுதும் தெரிந் தேன். உன்னைப்போல் எத்தனையோ இளைஞர்களைக் கண் டிருக்கிறேன். எல்லோரையும் போலவே நீயும் தவறு செய்திருக்கிறாய். காதல் என்பதையே என்னவென்று புரிந்துகொள்ளாமல் தற்கால யுவர்களும், யுவதிகளும் 'காதல்', 'காதல்' என்று அலைகிறார்கள். உண்மைக் காதல் இலக்கிய ஏடுகளில் காணப்படுகிறதே யொழிய நடைமுறையில் இல்லை. தங்களுக்கு ஏற்படும் மோகத்

தையே காதல் என்று நினைத்து இளைஞர்கள் மோசம் போகிறார்கள்" என்றார் பேராசிரியர்.

இதைக் கேட்டதும் சுலைமானுக்குத் தூக்கி வாரிப் போட்டது.

"அப்படியானால் நான் கொண்டது காதல் இல்லையா?" என்று கேட்டான் சுலைமான்.

"இல்லை. ஒருகாலும் இல்லை" என்று தொடர்ந்தார் பேராசிரியர்.

"காதல் எப்படிப்பட்ட பெண் வேண்டும் என்று முன் கூட்டிச் சிந்திக்காது; படித்த நாகரிகப் பெண்ணே வேண்டும் என்று கோராது. யார் மீதாவது உண்டாகிவிடும். காதலை, மனிதன் வாய்க்கால்வெட்டிச் செலுத்தமுடியாது

"இப்படிப்பட்ட பெண்தான் தேவை என்று விரும்பியபோதே நீ காதலை ஒதுக்கி விட்டாய். ஒரு லட்சியப் பெண்ணையே நாடினாய். முதன் முதலில் சந்தித்த பெண் மணமானவள் என்று தெரிந்ததும் அவளை மறந்தாய். நீ சல்மாவைக் காதலித்ததாகக் கருதினாய். அது வெறும் பருவக்கவர்ச்சி. காதலி எத்தகைய துரோகம் செய்தாலும் அவளைக் குத்திக் கொலை செய்யக் காதல் இடம் தராது. உண்மைக் காதலின் இலக்கணத்துக்கு அது முற்றிலும் மாறுபட்ட செயல். உண்மைக் காதல் இன்பமல்ல; தியாகமேயாகும்" என்று முடித்தார் பேராசிரியர்.

"ஆமாம் சார்! தற்போது சல்மா மீது வெறுப்புத் தான் இருக்கிறதேயொழிய விருப்பு இல்லை" என்றான் சுலைமான்.

"பார்த்தாயா! இந்த நிலை உண்மைக் காதலுக்கு ஏற்படாது. காமத்திலிருந்து காதலைப் பிரிப்பது மிகவும் கடினம். இக்காரணம் பற்றியே காதல் மலிந்த மேனாட்டில், விவாக விலக்கும் பெருகியிருக்கிறது. நேற்று மணம், இன்று விலக்கு நடப்பதும் உண்டு. ஒரு யுவனும், யுவதியும் புதிதாகப் பழகும்போது மோகமே மேலோங்கி நிற்கும். குற்றங் குறைகள் கண்களுக்குப் படா. கலியாணமாகி மோகம் தணிந்தபின் திரை விலகும். சண்டை சச்சரவுகள் பெருகும். கடைசியில் விவாக விலக்கில் போய் முடியும்" என்று விளக்கினர் ஆசிரியர்.

இருவரும் பேசிக்கொண்டே சென்றனர். ஊர் வந்ததும் இறங்கினர்கள். குதிரை வண்டி யொன்றில் ஏறிக் கொண்டு வீட்டுக்குப் புறப்பட்டார்கள்.

வண்டி கொஞ்ச தூரம் சென்றிருக்கும். வழியில் படுத்துக் கொண்டிருந்த நாயைக் காப்பாற்ற வண்டியை ஓரமாக ஓட்டினன் வண்டிக்காரன். சக்கரம் ஒரு பெரிய கல்மீது ஏறவே வண்டி குடை சாய்ந்தது.

தெய்வாதீனமாகப் பேராசிரியர் காயமின்றித் தப்பினர். சுலைமானுக்குத் தலையில் பலமான காயம் பட்டது. அவன் மூர்ச்சையடைந்தான்.

சுலைமானின் வீட்டில்தான் அவனுடைய மாமனர் முஹம்மத் யாஸீனும், பல்கீஸும் இருந்தனர். சுலைமான் அங்குக் கொண்டுபோகப்பட்டான். டாக்டர் வந்து சுலைமானுக்குத் தகுந்த சிகிச்சை செய்து போனர்.

சுலைமான் மூர்ச்சை தெளிந்தான். பல்கீஸின் குரல் தலைப்பக்கம் கேட்டது.

"அல்லாஹ்! வெகு நாட்களாகப் பிரிந்திருந்த அவரை, மண்டையில் காயப்படுத்தியா என்னிடம்சேர்க்க வேண்டும்? இப்படி உணர்வற்றுக் கிடக்கிருரே! நான் என்ன பாவம் செய்தேன்? என்னை ஏன் இப்படிச் சோதிக் கிருய்? என் உயிரை வேண்டுமானுல் எடுத்துக் கொள். அவர் உயிரைக் கொடு! அவருக்காக அரும்பாடு பட்டுப் படித்துக் கொண்டேன். ஆடை அணிகளையும் மாற்றிக் கொண்டேன். இவ்வளவு பிரயாசையையும் வீணுக்கி விடாதே! 'சென்னையிலிருந்து திரும்பி வந்ததும் மாறு பட்டிருக்கும் உன்னை நிச்சயம் கலியாணம் செய்துகொள் வான் என் மகன். நீ தான் அவனைப் பார்த்துக்கொள்ள வேண்டும்' என்று என் மாமி ஹாஜரா மரணத்தறுவாயில் கூறினுரே. அவர் வாக்கைப் பொய்யாக்கி விடாதே" என்ற வார்த்தைகள் சுலைமானின் காதுகளில் ஒலித்தன.

சுலைமானின் உள்ளம் உருகிவிட்டது. புற அழகில் மயங்கி அக அழகைக் காணத்தவறிய தன்னை நொந்து கொண்டான். தன்னையுமறியாமல் 'பல்கீஸ்' என்ருன்.

அக்குரல் சொர்க்கத்திலிருந்து வரும் குல்மான்களின் இனிய கீதத்தைப்போல் பல்கீஸின் காதுகளில் ஒலித்தது. அவள் உடம்பு சிலிர்த்தது. நாணம் அவளைக் குன்றச் செய்தது. அல்லாஹ் அவ்வளவு சீக்கிரம் அவள் பிரார்த் தனையை நிறைவேற்றிவிடுவான் என்று எதிர்பார்க்க வில்லை.

பரபரப்புடன் எழுந்து, சுலைமானின் பார்வையில் தன் பார்வையைப் பதித்தாள். இதயத்தோடு இதயம் கலந் தது. இருவரும் வெகுநேரம் அப்படியே இருந்தனர். நெஞ்சுகள் விம்மின. இருவர் கண்களிலும் நீர் தளும்பிற்று.

சுலேமான் எழுந்து உட்கார்ந்தான்.

'பல்கீஸ்! என்னை மன்னித்துவிடு! உன்னை நன்கறியாமல் உன் மனத்தைப் புண்படுத்தி விட்டேன். அதற்குத் தக்க தண்டனையும் பெற்றுக் கொண்டேன். உன்னை நான் வெறுத்தும் நீ என்னை வெறுக்காமல் இருந்தாயே! எனக்காக உன்னை மாற்றிக் கொண்டாயே! இதுவன்றோ உண்மைக் காதல்! இப்போதே நிக்காஹ் செய்துகொள்ளச் சித்தமாயிருக்கிறேன்' என்றான் உணர்ச்சியோடு.

பல்கீஸ் தனது காலின் பெருவிரல்களை நோக்கிய வண்ணம், 'நான் இப்போது அசல் குறத்தி மாதிரி இல்லையே?' என்று கேட்டாள் குழைவுடன்.

சுலேமான் சிரித்து விட்டான். 'போக்கிரி! இன்னும் ஞாபகம் வைத்துக் கொண்டிருக்கிறாயே! இப்போது அசல் சொர்க்கத்து ஹூர் மாதிரி இருக்கிறாய்!' என்றான்.

இச்சமயம், 'இன்ஷா அல்லாஹ், சீக்கிரமே நிக்காஹ் செய்துவிடுவோம்' என்ற குரல்கேட்டு இருவரும் திடுக்கிட்டனர். காய்ச்சலாகப் படுத்துக்கிடந்த பல்கீஸின் தந்தை முஹம்மத் யாஸின் சிரித்துக்கொண்டே பின்னால் நின்றுகொண்டிருந்தார். 'பாவா!' என்று போய்த் தந்தையின் கால்களைப் பிடித்துக்கொண்டாள் பல்கீஸ். 'போய்ப் படுத்துக் கொள்ளுங்கள் பாவா! மருந்து கொண்டு வருகிறேன்' என்றாள்.

'எனக்கு இனி மருந்துவேண்டாம். நீங்களே என்னைக் குணப்படுத்தி விட்டீர்கள்' என்றார் முஹம்மத் யாஸீன்.

மூவரும் மன நிறைவு பெற்றனர்.

அன்றுதான் மெய்யான **மன நிறைவு** பெற்றதை சுலேமான் உணர்ந்தான்.

# சிங்கப்பூர் மாப்பிள்ளை

அக்கம் பக்கத்து வீட்டு வாசல் திரைகள் ஆடின. ஒரே வேளையில் இரண்டு இளம் பெண்கள் தலையை வெளியே நீட்டினர். ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டனர்; புன்னகை புரிந்தனர்.

'அடியே கதீஜா!'

'என்னடி ஆயிஷா?'

'கேட்டாயா சேதியை?'

'என்ன சேதி?'

'ராபியா அக்காள் இருக்கிறாள் அல்லவா?'

'எந்த ராபியா?'

'அவள் தாண்டி! சிடு மூஞ்சி ராபியா!'

'அவளுக்கென்ன? சிங்கப்பூரிலிருந்து அவள் புருஷன் பணம் அனுப்பிக் கொண்டிருக்கிறான். அவள் வீடு வீடாய்ப்போய் அரட்டை அடித்துக் கொண்டிருக்கிறாள்.'

'இப்போது வந்தது ஆபத்து!'

'என்ன ஆபத்து?'

'அவள் புருஷன் ஒரு மலாய்க்காரியைக் கட்டிக் கொண்டானும்!'

'அட அல்லாஹ்வே! அப்புறம் அவள் கதி!'

'அதோ கதி தான்! மலாய்க்காரிகளுக்குத் தினம் இரண்டு முகப்பவுடர் டின்கள், ஸ்நோ, செண்டு, இவை யாவும் தேவை. விலையுயர்ந்த துணிமணிகள், தங்கப் பொத்தான்கள் வாங்கிக் கொடுக்க வேண்டும். ராபியா புருஷன் சம்பாத்தியம் அந்த மலாய்க்காரிக்கே போதாது. இவளுக்கு இனி எங்கே பணம் அனுப்பப் போகிருன். இனி அல்லாஹ்தான் காப்பாற்ற வேண்டும். இந்த சபுராளிகளைக் கட்டிக் கொண்டாலே இப்படித்தான்!'

'ஏண்டி! எல்லா சபுராளிகளுமா இப்படி இருக்கிருர்கள்?'

'யார் கண்டார்கள்? அங்கே போய் என்ன என்ன செய்கிருர்களோ!'

'அப்படியானுல் நீ பயணம் போகிறவர்களைக் கட்டிக் கொள்ளவே மாட்டாயோ?'

'மாட்டவே மாட்டேன்.'

'ஓஹோ! அப்படி என்ருல் என் அண்ணு அப்துர் ரஸ்ஸாக்கைக் கட்டிக்கொள்ள மாட்டேன் என்கிருயோ?'

'ரஸ்ஸாக்! கிஸ்ஸாக்! யாரா இருந்தால் என்ன?'

'ஏண்டி! புருஷன் பெயரைச் சொல்லுகிருயோ? அறு நாக்கை!'

'அடி அக்கா! அதற்குள் புருஷர் ஆகிவிட்டாரோ!'

'இரு! இரு! இன்றே கடிதம் எழுதிப் போடுகிறேன்.'

'போடு! போடு! இங்கே தொடை நடுங்கிக்கொண்டு இருக்கிருர்களோ?'

'ஓஹோ! அவ்வளவுக்கு வந்துவிட்டாயா?'

'காலம் மாறிப் போச்சு.'

'பின்னே எந்த மாதிரி மாப்பிள்ளையைக் கட்டிக் கொள்வாய்?'

'இங்கேயே இருக்க வேண்டும். தவறினல், பயணம் போகும்போது என்னையும் கூட கூட்டிக் கொண்டு போக வேண்டும். இல்லாவிட்டால் அது என்ன வாழ்க்கை? ஆறு மாதம் இருப்பார்கள். வருஷக்கணக்காக விட்டு விட்டுப் போய் விடுவார்கள். கால முழுதும் தூக்க மில்லாத இரவுகள்! ஏக்கம் பிடித்த நாட்கள்!'

'பெரிய நெஞ்சழுத்தக்காரிதான்! உன்னைப் போல வேறு யார் போக விரும்புவார்கள்?'

'எல்லோரும் போக வேண்டும். ஆண்கள் கூட்டிக் கொண்டு போக வேண்டும். பெரியவர்கள் அனுப்பியும் வைக்க வேண்டும்'

இச்சமயம் கதீஜாவின் தாய் வீட்டுக்குள்ளிருந்து 'ஏண்டி! அறியாப் பெண்கள் இருவரும் கூடிக்கொண்டு என்னடி குசு குசு வென்று பேசுகிறீர்கள்?' என்று கேட்டுக் கொண்டே வந்தாள்.

'இல்லே அம்மா! சிங்கப்பூரிலே சீனக்காரர்கள் பெரிய கலாட்டா செய்கிறார்களாம். அண்ணே ரஸ்ஸாக் என்ன செய்கிருரோ! ஏது செய்கிருரோ! என்று ஆயிஷா கவலைப்படுகிறது அம்மா!'

'அதற்குள்ளாகவே சிங்கப்பூர் கவலை ஏற்பட்டு விட்டதா ஆயிஷா? கவலைப்படாதே! சௌக்கியமாய்

இருப்பதாகக் கடிதம் எழுதியிருக்கிறுன். அடுத்த மாதம் வருகிருனும். வந்தவுடன் நிக்காஹ் வைத்து விடுவோம்.'

ஆயிஷா அங்கே ஏன் நிற்கிருள்? அவள் அப்போதே வீட்டுக்குள் ஓடி விட்டாள்.

அடுத்த மாதமும் வந்தது. அப்துர் ரஸ்ஸாக்கும் சிங்கப்பூரிலிருந்து வந்தான்.

பிற்பகல் 3 மணி. அயர்ந்து ரஸ்ஸாக் தூங்கிக் கொண்டிருந்தான். சத்தம் கேட்டுக் கண் விழித்தான். வாசல் திரையை விலக்கிக்கொண்டு மூன்று சிறுமிகள் தலையை உள்ளே நீட்டிக் கொண்டிருந்தனர். மூவரும் அடுத்த வீட்டு ஆயிஷாவின் சகோதரிகள். பத்து வயதுப் பாத்திமா, எட்டு வயது ஹாஜரா, ஆறு வயது ஆமீனு.

'ஓ! அடுத்த வீட்டுப் பட்டாளமா!' என்று கூறி விட்டுப் புரண்டு படுத்தான் ரஸ்ஸாக்.

'சும்மா வாங்கடி! என்ன பண்ணி விடுவாரு! கொம்பு முளைத்தவரோ!' என்று கூறிக்கொண்டே உள்ளே நுழைந்தாள் ஹாஜரா.

'ஹி! ஹி! ஹி! என்று சிரித்துக் கொண்டே மற்ற இருவரும் ஆட்டுக்குட்டிகளைப் போல் பாய்ந்து உள்ளே சென்றனர். ரஸ்ஸாக்கின் தாயாரைச் சூழ்ந்து கும்மாளம் அடித்தனர்.

கொஞ்சநேரத்தில் மூவரும் வெளியேறினர். ஹாஜரா போகும்போது எழுந்து அவள் சடையை எட்டிப் பிடித்து விட்டான் ரஸ்ஸாக். மற்றவர்கள் ஓடிவிட்டனர்.

'அல்லாஹ்! அல்லாஹ்'

'எங்கே அல்லாஹ்! கொம்பு முளைத்தவரோ? கொம்பு முளைத்தவர் எப்படி இருப்பார்?'

'உங்களைப் போல இருப்பார்!'

'ஓஹோ! அப்படியா? வா இங்கே!' என்று சடையைப் பிடித்து இழுத்துக் கொண்டே மேஜையருகில் போய்க் கத்தரிக்கோலை எடுத்தான் ரஸ்ஸாக்.

'சடையை வெட்டி விடுகிறேன் பார்! இனிமேல் சொல்லவில்லை என்று தோப்புக்கரணம் போடு!' என்றான்.

'ஊஹூம்! மாட்டேன்!'

'மாட்டேன் என்றால் தலைமயிரை நறுக்கிவிடுகிறேன்.'

'சிங்கப்பூரிலே இந்தத் தொழிலைத்தான் கற்றுக் கொண்டு வந்தீர்களோ!'

'அப்படியானால் நறுக்கியே விடுகிறேன்' என்று கத்தரிக்கோலை வைத்தான் ரஸ்ஸாக்.

'தோப்புக் கரணம் போடுகிறேன், விட்டு விடுங்கள்' என்றாள் ஹாஜரா.

ரஸ்ஸாக் அவளை விட்டு விட்டான். அவள் ஓடி விட்டாள்.

அடுத்த நாள் காலையில் வெளியில் போய்ச் சுற்றி விட்டு வீட்டுக்கு வந்து கொண்டிருந்தான் ரஸ்ஸாக். அடுத்த வீட்டுத் திரைக்குப் பின்னாலிருந்து இரண்டு கூரிய விழிகள் அவனைக் கவனித்துக் கொண்டிருந்தன. அவன்

அருகில் வந்ததும் வளையல் குலுங்கும் ஓசை கேட்டது. 'ஹா' என்ற குரலும் சேர்ந்து வந்தது. தலையை உள்ளே இழுத்த ஆயிஷா நிலையில் மோதிக்கொண்டாள். இதைக் கவனித்துக் கொண்டான் ரஸ்ஸாக்.

உள்ளே போய் ஆடைகளைக் களைந்து உட்கார்ந்தான். ஆயிஷாவின் சிறிய சகோதரி ஆமீனா வந்தாள்.

'ஏய்! இங்கே வா!' என்றான் ரஸ்ஸாக்.

'என்ன ஏய்! ஹாய்! பெயரைச் சொல்லி கூப்பிடுங்களேன்!'

'உம்! என்ன பெயர்? பாத்திமாவா?'

சிறுமி கொல்லென்று கைகொட்டிச் சிரித்தாள். என் பெயர் தெரியவில்லை! பூ! இவ்வளவுதானா?'

'ஹாஜரா!'

'ஊ ஹூம்! இல்லை! இல்லை!'

'ஆயிஷா!'

'புர்-ர்-ர்! என் அக்காள் வேண்டுமா? கூட்டிக் கொண்டு வரட்டுமா?'

'பின்னே உன் பெயர் என்ன? சுண்டைக்காய் பீபி-இப்லீஸ் அக்கா.'

'நீங்கள்தான் இப்லீஸின் தாத்தா. என் பெயர் ஆமீனா. இது தெரியவில்லை.'

'சரி! ஏதாவது இருக்கட்டும். இங்கே வா?'

'ஏன்? எதற்கு?'

'இங்கே வாயேன்!'

'இதோ! வந்து விட்டேன்! என்னவாம்?

'உன் பெரிய அக்காள் ஆயிஷாவுக்குத் தலையில் பலமான காயம் பட்டிருக்கும், தலையில் தடவ மருந்து வேண்டுமா? என்று கேட்டு வா'

'உம்! உங்கள் தலையிலேயே தடவிக் கொள்ளுங்கள். அவள் காயம் ஆறிப் போய்விடும்.'

'அப்படியா? உண்மையாகவா? அப்படியாவது தடவிக் கொள்ளட்டுமா என்று கேட்டு வா.'

சிறுமி ஓடிப்போய் சிறிது நேரத்திற்குள் திரும்பி வந்தாள். கையில் ஒரு மருந்து சீசாவையும் கொண்டு வந்தாள்.

'இந்த மருந்தை நீங்கள் சாப்பிடுவீர்களாம்! உங்கள் புத்தி பேதலித்திருப்பதை இது சரிப்படுத்தி விடுமாம். என் அக்காள் கொடுத்தாள்!' என்ருள் ஆமீனு.

'சரி கொண்டுவா' என்று வாங்கி வைத்துக் கொண்டான் ரஸ்ஸாக்.

'குறும்பு மருந்து' என்று அந்த சீசாவின்மீது எழுதி ஒட்டப்பட்டிருந்தது. உடனே தன் மேஜை டிராயரில் வைத்துக் கொண்டான்.

அன்று மாலை வழக்கம் போல அவன் உறங்கி எழுந்தான். அடுத்த வீட்டுப் பெண் பட்டாளம் சொல்லி

வைத்தாற்போல் உள்ளே நுழைந்தது. ரஸ்ஸாக்கைப் பார்த்து விழுந்து விழுந்து சிரித்தார்கள் அனைவரும்.

'ஹி! ஹி! ஹி!' என்றாள் பாத்திமா.

'ஹோ! ஹோ! ஹோ! என்றாள் ஹாஜரா.

'ஆட்டுக் கொம்பு மீசைக்காரா! தேள் கொடுக்கு மீசைக்காரா!' என்று கூறி குதித்துக்கொண்டிருந்தாள் சிறுமி ஆமினா.

ரஸ்ஸாக் அவர்களைப் பிடிக்க எழுந்தான். அனைவரும் ஓடிப்போய் வாசல் திரையைப் பிடித்துக் கொண்டு கும்மாளம் அடித்தனர்.

உள்ளே வந்த ரஸ்ஸாக்கின் தாய், சிரித்துக் கொண்டே 'என்னடா இது வேஷம்?' என்றாள்.

தாயுமா தன்னைக் கேலி செய்கிறாள் என்று ஆச்சரியப் பட்டான் ரஸ்ஸாக்.

'போடா! போய்க் கண்ணாடியில் முகத்தைப் பார்!' என்றாள் தாய். உடனே எழுந்து கண்ணாடியில் முகத்தைப் பார்த்தான் ரஸ்ஸாக். மையினால் தேள் கொடுக்குப் போல பெரிய மீசையை யாரோ போட்டிருந்தார்கள். உடனே ஓடிப்போய், சோப் போட்டுப் போட்டுத் தேய்த்தான்.

பழிக்குப் பழி வாங்கவேண்டும் என்று ரஸ்ஸாக் கருதினான். அடுத்த வீட்டுப் பெண் பட்டாளம் அருகில் நெருங்கவே இல்லை.

இரண்டு நாட்களுக்குப் பின் அடுத்த வீட்டில் ரஸ்ஸாக்குக்கு விருந்து வைக்கப்பட்டது. ஆயிஷாவோ

அவள் தங்கைகளோ கண்ணில் படவில்லை. ரஸ்ஸாக்கின் தங்கை கதிஜாதான் எல்லாம் பரிமாறினாள். ரஸ்ஸாக் சாப்பிட உட்கார்ந்தான். பக்கத்தில் இருந்த அறைக்குள் திரைக்குப்பின் அந்தப் பட்டாளம் முழுதும் இருப்பதாகத் தெரிந்தது. வளையல் குலுங்கும் ஓசைகளும், 'களுக்' 'களுக்' கென்று சிரிப்பொலிகளும் வந்துகொண்டிருந்தன.

பிரியாணியில் ஒரு கவளத்தை எடுத்து வாயில் வைத்தான் ரஸ்ஸாக்.

ஒரே உப்பு!

துப்பவும் முடியாமல் விழுங்கவும் முடியாமல் திணறினான் ரஸ்ஸாக்.

'என்ன அண்ணா?' என்றாள் தங்கை கதீஜா.

கொல்லென்று அடுத்த அறையிலிருந்து சிரிப்பு ஒலி வீடு அதிரக் கேட்டது.

'என்னடி அது?' என்று ஆயிஷாவின் தாய் அடுப்பங்கரையிலிருந்து குரல் கொடுத்தாள்.

'சே! என்னத்தையோ தின்றுவிட்டு—முஞ்சியைப் பாருங்கள்!' என்று கூறிச் சிரித்துக்கொண்டே வெளியே வந்தாள் ஹாஜரா.

ரஸ்ஸாக் கண்ணை மூடிக்கொண்டு சோற்றை விழுங்கி விட்டுத் தண்ணீரை ஊற்றி 'மடக்' 'மடக்' என்று குடிக்கத் தொடங்கினான்.

விஷயத்தை உணர்ந்த கதீஜா, எதிரில் இருந்த பிரியாணித் தட்டை அப்புறப்படுத்திவிட்டு, வேறுதட்டில்

இருந்த பிரியாணியை எடுத்துக்கொஞ்சம் ருசி பார்த்தாள். அது நன்ருயிருந்தது. அதைத் தன் அண்ணன் எதிரில் வைத்தாள்.

'இவருக்குப் பிரியாணி பிடிக்காது போல் இருக்குது அம்மா! ஏதாவது சோள ரொட்டி செய்துகொடு அம்மா!' என்று கூறிக்கொண்டே அடுப்பங்கரைக்குச் சென்ருள் ஹாஜரா.

அறையிலிருந்து அடங்கிய சிரிப்பொலி கேட்டுக் கொண்டே இருந்தது.

'ஏண்டி! என் அண்ணனை விருந்துக்கு அழைத்து கலாட்டாவா பண்ணுகிறீர்கள்?' என்று கூறிக்கொண்டே கதீஜா அறைக்குள் நுழைந்தாள்.

கொஞ்ச நேரத்தில் ஆயிஷாவின் முந்தானையைப் பிடித்து இழுத்துக்கொண்டு வந்தாள் கதீஜா. ஆயிஷா நிலையில் கையை ஊன்றிக்கொண்டு திரைக்குப் பின்னு லேயே இருந்து கொண்டாள்.

'இவள் செய்த திருவிளையாடல்தான் எல்லாம்' என்ருள் கதீஜா.

'அப்படியாஞல் விட்டுவிடு ! சாவகாசமாகத் தண்டிக் கலாம்!' என்ருன் வாயில் சோற்றை மென்று கொண்டே ரஸ்ஸாக்.

ரஸ்ஸாக் சாப்பிட்டு எழுந்தான். 'சமையல் ரொம்ப ஜோர்!' என்ருன்.

'அட அல்லாஹ்வே! சமையல் நன்ருயிருக்கிறது என்று ஓர் எலும்பையும் விடாமல் தின்று விட்டாரே!' என்ருள் கண்களை அகலத் திறந்தவண்ணம் ஹாஜரா.

பிரியாணியில் எலும்பை நீக்கிய கறியே சேர்த்திருந்தது.

'ஆயிஷா! சொல்லட்டுமா?' என்ருள் அறையை நோக்கி கதீஜா.

'ஷ்! ஷ்! ஷ்!' என்ற ஓசை மட்டும் கேட்டது அறையிலிருந்து.

'என்ன கதிஜா அது?' என்று கேட்டான் ரஸ்ஸாக்.

'உம் ஒன்றுமில்லை அண்ணு.'

'என்ன ஒன்றும் இல்லை? எல்லாம் இருக்கிறதாகக் காண்பித்து விட்டு ஒன்றுமில்லை என்ருல்?'

'சும்மா! ஒரு விஷயம்!'

திரை பலமாக ஆடிற்று.

'என்ன கதீஜா? சொல்!'

'ஆயிஷாவையும் பயணம் போகும்போது கூட்டிக் கொண்டு போனுல்தான் நிக்காஹ் செய்துகொள்ளுவாளாம்,

'ஓ! அப்படியா? பேஷாகக் கூட்டிக்கொண்டு போகலாம் என்று சொல்! ஏரோப்பிளானில் கூட்டிக் கொண்டு போகலாம்!'

'இல்லாவிட்டால் மலாய்க்காரியை எங்கே கட்டிக் கொள்வீர்களோ என்று பயப்படுகிருள்.'

'ஹா! ஹா! ஹா! அப்படியா சமாச்சாரம்? அந்தப் பயம் வேண்டாம் என்று சொல்' என்று கூறிவிட்டு 'மலாய்க்காரியை யார் கட்டிக்கொண்டிருக்கிருர்கள்?' என்று கேட்டான் ரஸ்ஸாக்.

'ராபியா புருஷன் கட்டிக் கொண்டாளுமே!'

'யார் சொன்னது?.'

'ஆயிஷாதான் சொன்ஞள்.'

'ஹா! ஹா! ஹா! அதுவா? அந்தச் சிடுமூஞ்சியை அடக்குவதற்காக அவன் செய்த தந்திரம் அது. சும்மா பொய்ச் செய்தி அனுப்பியிருக்கிருன்.'

'அப்படியா?'

'ஆம்!'

ஆயிஷாவுக்கும், ரஸ்ஸாக்குக்கும் சீக்கிரமே நிக்காஹ் நடந்தேறியது. எல்லாம் முடிந்தபின் கொஞ்ச காலம் இருந்துவிட்டு ரஸ்ஸாக் பயணம் புறப்பட்டான். மூட்டை முடிச்சுகள் எல்லாம் கட்டித் தயாராயிருந்தன. நண்பர் களைப் பார்க்க ரஸ்ஸாக் வெளியே போயிருந்தான். ஆயிஷா கவலை தோய்ந்த முகத்துடன் உட்கார்ந்தாள். அவள் உள்ளத்திலே புயல் குமுறிக் கொண்டிருந்தது.

கதீஜா உள்ளேநுழைந்தாள். 'எங்க ஊரு சிங்கப்பூரு! தில்லாலே லேலே! குடியிருப்பது தஞ்சாவூரு ஜில்லாதான் லேலே' என்று அபிநயத்துடன் பாடிஞள்.

ஆயிஷா அதை ரசிக்கவில்லை. ரஸ்ஸாக் விடை பெற்றுக்கொள்ள ஆயிஷாவிடம் வந்தான். அவள் அவன் மார்பிலே முகத்தைப் புதைத்து விம்மி விம்மி அழுதாள். ரஸ்ஸாக்கின் சட்டையே நனைந்துவிட்டது. 'அழாதே ஆயிஷா! உன்னை நான் அவசியம் அங்கே கூட்டிக்கொண்டு போக முயற்சி செய்வேன். இந்த வழக்கத்தை மாற்றத்தான் வேண்டும். எங்கே சிரி! சிரித்து விடை கொடு!' என்ருன்.

அவள் சிரித்தாள். ஆனல் அந்தச் சிரிப்பில் சோகம் தான் கலந்திருந்தது. ரஸ்ஸாக் புறப்பட்டுப் போய் விட்டான்.

ஆயிஷாவின் உதடுகள் துக்கத்தால் துடித்தன. கண்களிலிருந்து நீர் பொல பொல வென்று உதிர்ந்தது. முந்தானையை வானை நோக்கி உயர்த்தி 'யா அல்லாஹ்! நல்லவிதமாக அவரை ஊர் கொண்டுபோய்ச் சேர்' என்று துவாச் செய்தாள்.

---

# இரண்டாம் தாரம்

ஆங்கில இஞ்செக்ஷன்கள், ஆயுர்வேதத் தைலங்கள், சித்தவைத்தியச் செந்தூரங்கள், யூனனி ஹல்வாக்கள், அலோபதி, ஹோமியோபதி மருந்துகள் ஆகிய யாவற்றை யும் கொடுத்தும், என் மனைவியின் வியாதி இரண்டுஆண்டு களாகக் குணமடைய வில்லை. என்ன வியாதி என்று எனக்கோ, என் மனைவிக்கோ இதுவரை புரியவில்லை. எந்த இரண்டு வைத்தியரும் ஒரே வியாதியின் பெயரைச் சொன்னதில்லை.

'ஏதாவது ஆவியின் நிழல் பட்டிருக்கும்' என்றாள் பக்கத்து வீட்டுக்காரி.

'முருங்கை மரத்து நொண்டிப் பிசாசு தான் பிடித் திருக்கும்' என்றாள் எதிர் வீட்டுக்காரி.

'ஆம்! ஆம்! அப்படித்தான் இருக்கும்' என்று அனுபல்லவி பாடினார்கள் என் மனைவியின் இதர தோழி யர்கள்.

'நல்ல மந்திரவாதியைக் கொண்டு மந்திரித்துப் பார்த்து விடு!' என்றாள் என் கிழத்தாய்.

'அந்தக் குறையும் ஏன்? அதையும் பார்த்து விடுங் கள்' என்றாள் என் மனைவி.

'உன்னை ஒரு பிசாசும் பிடிக்கவில்லை. உன் தோழி கள் தாம் பிடித்து ஆட்டுகிறார்கள் என்று நான் கூறி

னேன்: பலன் ஏற்படவில்லை. தன்னைப் பிசாசு பிடித்திருப்பதாக அவள் உறுதியாக நம்பும்போது ஏதாவது செய்யவில்லையானால் அந்த நம்பிக்கையே பிசாசாக மாறி விடும். ஆகையால் கைதேர்ந்த மந்திர, தந்திர வாதிகளை எல்லாம் அழைத்து வந்து, அவர்களுடைய கைவரிசைகளை எல்லாம் காட்டும்படிச் செய்தேன். அப்போதும் அந்த வியாதிப் பிசாசு போகவில்லை.

'அல்லா(ஹ்) தான் இனி என்னைக் குணப்படுத்த வேண்டும். ஏனோ என்னை இச்சோதனைக்கு ஆளாக்கி விட்டான். நான் பாவி! தங்களுக்கு இன்பத்திற்குப் பதிலாகத் துன்பமே தந்து கொண்டிருக்கிறேன். என்னை அவன் ஏன் உயிருடன் வைத்திருக்கிறானோ தெரியவில்லை' என்று என் மனைவி கூறி இரண்டு சொட்டுக் கண்ணீர் விட்டாள்.

'வருத்தப்படாதே சல்மா! சாகவேண்டும் என்று விரும்பாதே. அது கோழைத்தனம். உலகக் கஷ்டங்களைச் சமாளிக்க முடியாமல் ஓடும் மனப்பான்மை அது. ஆண்டவனே! இக்கஷ்டங்களைப் போக்கு! என்று துவாச் செய். துன்பங்களை எதிர்த்து வாழ்க்கையை வெற்றிகரமாக நடத்துகிறவர்களே வீரர்கள்' என்று நான் உபதேசம் செய்தேன்.

அவள் தற்போது நடமாடவும் முடியாமல் படுத்த படுக்கையாகிவிட்டாள்.

ஒருநாள் எனது நண்பர் அருணாசலம் அவர்களின் வீட்டில் உட்கார்ந்திருந்தேன். அவர் தம்மை முற்போக்கு வாதி என்று கூறிக்கொள்பவர்.

'உங்கள் மனைவி தீராத வியாதியால் பீடிக்கப்பட்டு ஆண்டுகள் இரண்டு ஆகியும் குணமாகவில்லையே! இன்னும் எத்தனை நாள் இப்படிக் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கப் போகிறீர்கள்? அவளை விவாக விலக்குச் செய்துவிட்டு வேறு பெண்ணை மணந்து கொண்டால் என்ன?' என்று கேட்டார்.

'விவாக விலக்குச் செய்வதா? தங்கள் சொல் என் காதுகளில் நாராசம் காய்ச்சி ஊற்றுவது போல் இருக்கிறது. அதில் சுயநலம் இருக்கிறது: லோகாயதம் இருக்கிறது. அன்பில்லை; மனிதத் தன்மை இல்லை. அவள் என்மீது உயிரையே வைத்திருக்கிருள். உற்ருர் உறவினர் அவளுக்கு ஒருவரும் இல்லை. அவளை இந் நிலையில் விவாக விலக்குச் செய்வதும், கொலை செய்வதும் ஒன்றே' என்றேன்.

'அப்படியானல் கலியாணம் பண்ணியும் பிரம்மச்சாரியாகவே இருந்துவிடப் போகிறீர்களா'? என்று கேட்டார்.

'என் மனம் இப்படியே இருக்க மறுத்தால் இன்னொரு பெண்ணை மணந்து கொள்ளலாம். அதற்கு இவளை விலக்குவானேன்?'

'இன்னொரு பெண்ணை மணந்து கொள்வதற்கு உங்கள் மனைவி உடன்படவேண்டுமே!'

'உடன்படவில்லையானல் விவாக விலக்குச் செய்து கொள்ள அவளுக்குப் பூரண உரிமை உண்டு. நானக அவளை விலக்கவேண்டிய அவசியம் இல்லையே!'

'இரண்டு மனைவிகளை வைத்துக்கொண்டு எப்படிச் சமாளிப்பீர்கள்?'

'சமாளிக்க முடியுமானுல்தான் மற்றும் ஒரு பெண்ணை மணந்துகொள்ளலாம். அவசியம் ஏற்பட்டால், வசதி இருந்தால், செய்துசொள்ளும்படி இஸ்லாம் அனுமதிக்கிறதே யொழிய அவசியம் செய்து கொள்ளும்படி உபதேசிக்கவில்லை.'

'பலதார மணம் கெட்டதுதானே? ஆண் மட்டும் பல பெண்களைக் கட்டிக்கொள்ளலாம் என்ருல், பெண் மட்டும் ஏன் பல புருடர்களைக் கட்டிக்கொள்ளக்கூடாது? ஆணுக்கு ஒரு நீதி பெண்ணுக்கு ஒரு நீதியா?'

'தர்க்கரீதியாக உங்கள் வாதம் சரியாகவே படும். நான்கு கால் உள்ளது மிருகம்; நாற்காலிக்கு நான்கு கால்கள் உண்டு. ஆகையால் நாற்காலியும் ஒரு மிருகம் என்று சொன்னுல் தர்க்கரீதியாகச் சரியே. அதனுல் நாற்காலி மிருகம் ஆகிவிடுமா? அதைப் போலவே எதையும் தர்க்கரீதியாகவே பார்க்கக்கூடாது. மனித இயல்பையும், ஆண், பெண் தேகக்கூறுகளையும் சோதனை செய்து தீர்மானிக்கவேண்டும்.

எந்தப் பெண்ணும் இரண்டு புருடர்களை மணந்து கொள்ள விரும்பியதே இல்லை. அவர்களே விரும்பாத ஒன்றை அவர்கள் மீது திணிக்க என் விரும்புகிறீர்? தவிர, பெண்களிடம் காணப்படும் அனுசரித்துப் போகும் இயல்பு, சகிப்புத் தன்மை, பொறுமை ஆகிய நல்ல குணங் களும், பண்பாடும் ஆண்களிடம் இல்லை. ஆகையால் பஞ்சபாண்டவர்களைத் தவிர வேறு எந்த இரு ஆண்களும் ஒரு பெண்ணை மணந்துகொண்டு வாழ விரும்பியதேஇல்லை. அப்படி மணந்து கொண்டால், கலகம், கொலை இவற்றில் தான் அத்திருமணம் முடிவுறும். ஏன் எனில் அது இயற்

கைக்கு ஒவ்வாதது. இரு ஆண்களை ஒரு பெண் திருப்தி செய்ய முடியவே முடியாது. ஆனால் ஒரு ஆண் பல பெண்களைத் திருப்தி செய்யமுடியும். ஆதலால்தான் இத்தகைய வழக்கம் இயற்கையாகவே ஏற்பட்டிருக்கிறது.

பெண், மாதம் ஒரு முறை மாதவிடாயின்போது குறைந்தது ஒரு வாரம் கணவனால் தீண்டத்தகாதவள் ஆகிவிடுகிறாள். கருத்தரித்த ஏழாவது மாதத்திற்குப் பின்னும், பிரசவித்து மூன்று மாதம் வரையும், ஆறு மாத காலம் ஆண் நெருங்குவதற்கு லாயக்கற்றவள் ஆகிவிடுகிறாள். ஓரிரண்டு குழந்தைகள் பெற்றபின் தேகம் தளர்ந்துவிடுகிறது. கணவனை அடிக்கடி திருப்தி செய்ய முடியாத நிலையை அடைந்து விடுகிறாள். இத்தகைய சந்தர்ப்பங்களில் ஆண் விபசாரத்தில் ஈடுபட ஏதுவாகிறது. அவ்வாறு கெட்டலைவதைவிட கண்ணியமாகக் கலியாணம் செய்துகொண்டு வாழ்வது எவ்வளவோ மேல் அல்லவா?

புண்ணைக் கீறி சிகிச்சை செய்வதைப்போல் இயற்கையை ஏற்றுக்கொண்டு அவசியம் என்று கருதுகிறவர்கள் ஒன்றுக்கு மேற்பட்ட பெண்களை மணந்துகொள்ள அனுமதிப்பது நல்லது. இல்லையானால் விபசாரமே பெருகும்.

ஒரு தார மணம் உள்ள மேலை நாட்டில் கற்புடைய ஒரு ஆணையோ, பெண்ணையோ பார்க்க முடியவில்லை என்று அந்நாட்டு அறிஞர்கள் வருந்துகிறார்கள். பலதார மணம் செய்துகொள்ள அனுமதியுள்ள அரேபியாவில் தான் விபசாரம் இல்லை. மேலை நாட்டு நாகரீகத்தைக் கண்மூடித்தனமாகப் பின்பற்றுவது அறிவுடைமையாகாது.

தவிர, இஸ்லாமிய விவாகச் சட்டங்கள் மிகவும் தூர திருஷ்டியுள்ளவை. நான்கு மனைவிகள் வரை மணந்து கொள்ள அனுமதி இருந்தாலும், கடுமையான கட்டுப் பாடுகள் இருப்பதால், நான்கு மனைவிகள் உள்ள முஸ்லிம் களை அபூர்வமாகவே காணமுடியும். அவசர காலத்திற்கு உதவுவதற்காகத்தான் அந்த விதி இருக்கிறது.

ஒருவர் வேற்றூரில் போய் உத்தியோகம் பார்த்துக் கொண்டிருக்கலாம்; அல்லது வேற்று நாட்டில் தொழில் நடத்திக் கொண்டிருக்கலாம். அவருடைய மனைவி அவருடன் வர இயலாத நிலையில் இருக்கலாம். அப் போது வீண் விபசாரத்தில் ஈடுபடுவதை விட வேறு ஒரு பெண்ணை மணந்து வாழ்வது சிறந்ததாகும். பெரிய யுத்தம் ஒன்று தோன்றி பெருவாரியாக ஆண்கள் இறந்துபோக நேரிட்டால், பெண்கள் அனாதைகளாய் ஏங்கி எங்கிச் சாகவேண்டியதில்லை. ஓர் ஆண், பல பெண்களை மணந்து காப்பாற்றலாம். விரும்பாத பெண் விவாக விலக்குப் பெற்றுப் போக உரிமை இருக்கும் போது பலதார மணம் கொடுமையானதாகாது. அது பெண்களுக்கு நன்மை அளிக்குமே யன்றி தீமை செய்யாது' என்று நண்பருக்கு விளக்கினேன். அவர் திருப்தியடைய வில்லை.

மறுநாள், நண்பர் ஒருவரின் கலியாணத்திற்குப் போய் இரவு ஒரு மணிக்கு வீடு திரும்பினேன். கதவைத் தட்டினேன். என் கிழத்தாய் வந்து கதவைத் திறந்தாள். பாவம்! அவளுக்குத் தள்ளாத காலத்தில் அதிகப் பொறுப்பு. அவளுக்கு ஒத்தாசையாயிருப்பாள் என்றே சல்மாவை மணந்து கொண்டு வந்தேன். என் ஒருவனைக் கவனித்துக் கொண்டிருந்தது போதாது என்று தற்போது

என் மனைவியையும் சேர்த்து என் தாயே கவனிக்கிருள். சகல காரியங்களையும் அவள் ஒருத்தியே செய்கிருள். வேலைக்காரியை நியமிக்க அவள் சம்மதிக்க வில்லை. நானறிய அவள் இதுவரை ஒரு தலைவலி என்று படுத்த தில்லை.

அறைக்குள் சென்றேன். என் மனைவி படுக்கையில் உட்கார்ந்திருந்தாள்.

'ஏன்! இன்னும் தூங்கவில்லையா?' என்று கேட்டேன்.

'தூக்கம் வரவில்லை' என்று அவள் கூறி கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

அருகில் சென்று, அவளுடைய இரு கன்னங்களையும் என் இரு கரங்களாலும் பற்றி, முகத்தை என்பக்கம் திருப்பி, 'சல்மா! அழுதுகொண்டிருந்தாயா? ஏதாவது கஷ்டமாயிருக்கிறதா? டாக்டரை அழைத்து வரட்டுமா?' என்று கேட்டேன்.

'இல்லை! எனக்கு ஒன்றும் இல்லை! இனி எனக்கு மருந்தே தேவை இல்லை. நிறுத்தி விடுங்கள். தங்களுக்கும், தங்கள் தாயாருக்கும் நான் வீண் பாரமாயிருக்கிறேன். இது தீராத வியாதி'.

'இப்படிப் பேசாதே! ஏன்? என் தாய் ஏதாவது சொன்னாளா?'

'அவர் ஏன் கூறுகிருர்? நான் பெரும் பாக்கியசாலி. இத்தகைய தங்கமான மாமியாரை யாரும் அடைய

முடியாது. நான் அவருக்குச் சேவை செய்வதற்குப் பதிலாக அவர் எனக்கு மிகப் பொறுமையுடன் தொண்டு செய்கிருர்.'

'அப்படி இருந்தும் நீ கவலைப் படுவானேன்?'

'உங்கள் குடும்பத் தோட்டத்திலே நான் ஒரு முள்ளாக வந்து உதித்தேனே! இதை நினைக்கும் போது தான் என் மனம் நோகிறது; துக்கம் குமிழியிடுகிறது. நான் ஒரு வார்த்தை சொல்லுகிறேன் கேட்பீர்களா?'

'என்ன சொல்? நீ சொன்னதை நான் கேட்காமல் இருந்ததுண்டா'?

'அவசியம் செய்வேன் என்று சத்தியம் செய்து கொடுங்கள்.'

அவள் வாயிலிருந்து சத்தியம் என்ற சொல் இது வரை வந்த தில்லை. அடிக்கடி சத்தியம் என்று சொல்லி அச்சொல்லை அவமானத்திற்கு ஆளாக்குபவள் அல்ல அவள். ஆகையால் நான் அதிர்ச்சியடைந்தேன். அவள் என்ன சொல்லப் போகிருளோ என்று என்மனம் திடுக் கிட்டது. சத்தியம் செய்யும்படி அவள் கேட்டது என் பயத்தை அதிகப்படுத்திற்று.

'சல்மா! அப்படி என்ன இதுவரை சொல்லாத பெரிய விஷயத்தைச் சொல்லப் போகிருய்? சத்தியம் எதற்கு? நீ சொல்லி நான் செய்யாத காரியம் உண்டா? இன்று ஏன் இந்தப் புதிய முறை? நான் செய்ய இயலாத காரிய மாயிருக்குமோ?'

'நீங்கள் செய்யக்கூடிய காரியம்தான். செய்யக் கூடாததை நான் சொல்லமாட்டேன். சத்தியம் செய்து கொடுத்தால்தான் சொல்வேன்' என்று பிடிவாதம் பிடித்தாள். அவள் கையில் அடித்து 'சத்தியமாக நீ சொல்கிறபடி செய்கிறேன்,' என்று கூறினேன்.

அவள் முகத்தில் அசாதாரண மலர்ச்சி ஏற்பட்டது. நெஞ்சு விம்மிற்று. கண்களில் ஒளி வீசிற்று. என்றுமிலா மகிழ்ச்சியடைந்தவளாய் என் கையைத் தன் கையில் இறுகப் பிடித்த வண்ணம் 'இப்படி அருகில் உட்காருங் கள்' என்ருள். நான் விதவிதமான எண்ணங்கள் குமிழி யிட அவள் அருகில் அமர்ந்தேன். அவள் என்னையே சிறிது நேரம் உற்று நோக்கிஞள். 'நான் சுகமடைவேன் என்று எண்ணுகிறீர்களா?' என்று கேட்டாள். 'அல்லா (ஹ்) வின் கிருபையால் குணமாகி விடுவாய் சல்மா! குண மாகி விடும் என்று உறுதியாக நம்பு. அத்தகைய நம்பிக் கையின்றி மருந்து உட்கொண்டால் பலன் ஏற்படாது' என்றேன்.

'பொய் நம்பிக்கை குணம் தருமா?'

'பொய்யாக ஏன் நம்பவேண்டும்? உண்மையாகவே நம்பு.'

'என்ஞல் அப்படி நம்ப முடியவில்லையே! நீங்கள் அத்தகைய நம்பிக்கையை உண்டாக்கவும் முடியாதே!'

'பின் என்ன செய்யச் சொல்லுகிருய்?'

'நீங்கள் இன்ஞெரு பெண்ணை மணந்து கொள்ள வேண்டும்.'

இதைக் கேட்டதும் நான் ஸ்தம்பித்து விட்டேன். அவள் அப்படிக் கூறுவாள் என்று கனவிலும் கருத வில்லை.

'கண்ணே! என்ன காரியம் செய்யச் சொல்லுகிறாய்? என் நெஞ்சில் அணுகுண்டை அல்லவா வீசிவிட்டாய்! நான் மற்றொருத்தியை மணந்து கொள்வதா?'

'ஆம்! இல்லையானால் உங்கள் வாழ்க்கை வறண்ட வாழ்க்கை ஆகிவிடும். அதற்கு நானே காரணம் என்று நினைக்கும்போது என் நெஞ்சு நோகும். நீங்கள் அவசியம் செய்து கொள்ளத்தான் வேண்டும். சத்தியம் செய்து கொடுத்து விட்டீர்கள்! ஞாபகம் இருக்கட்டும்.'

'கண்ணே! முழு அன்பையும் நான் உனக்கு அளித்து விட்டேனே! இன்னொரு பெண்ணிடம் செலுத்த அன்பு ஏது? தன்னிடம் அன்பில்லாத என்னை மணக்க எந்தப் பெண் சம்மதிப்பாள்? அப்படிச் சம்மதித்தாலும், நம் வீட்டில் நிலவும் அன்பையும், அமைதியையும் குலைத்து விடாமல் இருக்கவேண்டுமே! எல்லா வகையிலும் திருப்தி அளிக்கக்கூடிய பெண்ணை எங்கே தேடுவது?'

'அதைப்பற்றி நீங்கள் கவலைப்படவேண்டாம். என் சின்னம்மா மகள் ஹபீபாவைப்பற்றி உங்கள் அபிப் பிராயம் என்ன?'

'ஓஹோ! பெண்ணையும் முன்கூட்டியே தீர்மானித்து வைத்திருக்கிறாயோ? ........... அவள் நல்லவள் தான். உன் தங்கை என்ற முறையில் அப்படி இருக்கலாம். சக்களத்தி என்ற முறையில் எவ்வாறு நடந்து கொள் வாளோ?'

'நன்ருகவே நடந்து கொள்வாள். உங்களுக்குப் பிடித்தமானவளாயிருந்தால் போதும். 'சரி!' என்று சொல்லுங்கள். மற்ற காரியங்களை நான் கவனித்துக் கொள்கிறேன்.

'அப்படியானுல் நெடுங்காலமாகவே திட்டம் தீட்டி வருகிருய் போலிருக்கிறது!'

'ஆமாம்! குடும்பத்தை இப்படியே விட்டு வைத்திருக்க எனக்குக் கொஞ்சமும் இஷ்டமில்லை. தங்களுக்கும், தங்கள் தாயாருக்கும் நான் பெரும் தீங்கு செய்தவள் ஆகி விடுவேன்.'

'உனக்கு அப்படிச் செய்தால்தான் திருப்தி ஏற்படும் என்று இருந்தால் செய். அல்ஹம்துலில்லாஹ்! ஆனுல் ஒன்று! இதை உனக்காகவே நான் செய்யச் சம்மதிக் கிறேன்..........ஆமாம்! ஹபீபாவின் அபிப்பிராயத்தைத் தெரிந்து கொண்டாயா! இரண்டாம் தாரமாக வாழ்க் கைப்பட அவள் மனம் இசைய வேண்டுமே!'

'அந்தக் கவலை உங்களுக்கு வேண்டாம். அவளுக்கு இரட்டிப்புச் சந்தோஷம். ஏற்கனவே அவள் கருத்தை அறிந்து சம்மதத்தையும் வாங்கி வைத்திருக்கிறேன்'.

'அடி கைகாரி!' என்று என் மனைவியின் கன்னத்தில் மெல்லத் தட்டினேன். அவள் பெரும் ஆனந்தம் அடைந்தாள். அவள் கண்களில் ஒளி வீசிற்று. நிமிர்ந்து உட்கார்ந்தாள்.

அதிகம் விளக்குவானேன். சீக்கிரமே எளிய முறையில் எனக்கு இரண்டாவது நிக்காஹ் நடை பெற்றது. நான் இரண்டு பெண்டாட்டிக்காரன் ஆகி விட்டேன்.

இரண்டாம் தாரமாகிய ஹபீபா, நான் எதிர்பார்த்ததைவிட அதிக அக்கறையோடு குடும்பத்தைக் கவனிக்கலானுள். என் கிழத்தாய்க்கு ஓய்வு கிடைத்தது. என் முதல் தாரத்துக்கு மன நிம்மதி ஏற்பட்டது.

இரண்டாம் தாரம் நடந்துகொள்ளும் விதத்திலிருந்து அவள் மீதும் அன்பு சுரந்தது. அன்புக்கு மாறு அன்பைத் தவிர வேறு இல்லை.

ஹபீபா வீட்டுக்கு வந்து ஆறுமாத காலம் ஆனபின் கருத்தரித்தாள். சல்மாவுக்குச் சந்தோஷம் தாங்கமுடியவில்லை. அந்தச் சந்தோஷத்திஞல் அவள் ஆச்சரியகரமாகக் குணம் அடையத் தொடங்கிஞள். எழுந்து நடமாடிஞள்; மருந்து மாயம் ஒன்றும் இல்லாமலே பூரண சுகம் பெற்றுவிட்டாள்.

ஹபீபாவுக்கு வாந்தியும், ஆயாசமும் ஏற்பட்டன. அவளை வேலை வெட்டி செய்ய விடாமல், சல்மாவே எல்லாக் காரியங்களையும் செய்யலாஞள். என் தாயோ சல்மாவை வேலை செய்ய விடாமல் தடுத்து, 'நீ போய் உட்காரம்மா! நீண்ட காலம் நோய்வாய்ப் பட்டிருந்தவள்!' என்று கூறி தானே ஓடியாடி வேலை செய்தாள். வீட்டில் அன்பு வெள்ளம் பெருக்கெடுத்து ஓடிற்று. நான் சந்தோஷ மிகுதியால் ஒரு சுற்றுப்பருத்து விட்டேன்.

ஹபீபாவுக்குப் பிரசவகாலம் நெருங்கிற்று. முதல் பிரசவம் கஷ்டமாயிருக்கும் ஆதலால், பிரசவ விடுதியில் சேர்த்து விடுதல் நலம் என்று கருதினேன். இதைக் கேட்ட என் தாயும், சல்மாவும் கோபம் அடைந்தார்கள். 'நாங்கள் ஒன்றுக்கு இரண்டு பேர் வீட்டில் இருக்கும்

போது அவளை ஏன் பிரசவ விடுதிக்கு அனுப்பவேண்டும்? எல்லாம் நாங்களே கவனித்துக் கொள்வோம்' என்று கூறி விட்டனர்.

ஹபீபாவுக்கு அழகான ஆண்குழந்தை பிறந்தது.

என் தாய்க்கும், சல்மாவுக்கும் உச்சி குளிர்ந்து விட்டது. குழந்தையை இருவரும் மாற்றிமாற்றித் தூக்கிக் கொண்டு திரிவார்கள்; கொஞ்சுவார்கள். என்னிடமோ, குழந்தையைப் பெற்றவளிடமோ ஒரு நிமிஷம்கூட விட்டு வைக்கமாட்டார்கள்.

குழந்தையின் வயிறு நிரம்பியிருக்கும், 'பாவம்! பசிக்கும்!' என்று பால் ஊட்டுவார்கள்; ஆந்தையைப் போல் கண்களை அகல விரித்து விழித்துக்கொண்டிருக்கும் போதே தொட்டிலில் இட்டுத் தாலாட்டுவார்கள்.

நான் குழந்தையை எடுத்துக்கொண்டால் 'உங்களுக்குக் குழந்தையை வைத்துக் கொள்ளவே தெரியவில்லை. இப்படிக் கொடுங்கள்!' என்று சல்மா பிடுங்கிக்கொள்வாள். 'குழந்தையை வீட்டுக்கு வெளியே கொண்டு போகாதே! காற்று பட்டு விடும்!' என்று தடுப்பாள் என் தாய்.

ஒருநாள் நண்பர் அருணாசலம் என் வீட்டுக்கு வந்தார். குழந்தையைக் காண்பித்தேன். எடுத்துக் கொஞ்சிக் குதூகலம் அடைந்தார்.

'உங்களுக்கு ஒரு செய்தி!' என்றார் அருணாசலம்.

'என்ன?' என்று கேட்டேன். 'என் மைத்துனன் ஏற்கனவே கலியாணம் ஆனவன் என்பதை நீங்கள் அறிவீர்கள். அவனுடைய உறவினள் ஒருத்திக்குப் பெரிய அம்மை வார்த்துக் கண்கள் பொட்டையாகி விட்டன. பாவம்! அவளை மணந்து கொள்ள ஒருவரும் முன் வரவில்லை. என் மைத்துனன், தன் சம்சாரத்தின் அனுமதி பெற்று அவளைக் கலியாணம் செய்து கொண்டு, அவளுக்கு வாழ்வு அளிக்க விரும்புகிறான். ஒருதார மணச்சட்டம் வந்து அவனைத் தடுக்கிறது. அப்பெண்ணின் கதி என்ன ஆவது?' என்று கேட்டார்.

'போய் சட்டம் செய்த உங்கள் தலைவரைக் கேளுங்கள்!' என்றேன்.

'நான் இந்தச் சட்டத்தை மாற்றக் கிளர்ச்சி செய்யப் போகிறேன்!' என்று கூறிவிட்டு எழுந்து சென்றார் அவர்.

இரவு மணி பத்து இருக்கும். வீட்டுக்குள் நுழைந்தேன். முதல்தாரம் வந்து இன்று ஏன் இவ்வளவு நேரம் என்று கேட்டாள். 'ஒரு நண்பருடன் பேசிக்கொண்டிருந்து விட்டேன்' என்று கூறி உள்ளே போனேன்.

ஹபீபாவும், குழந்தையும் அருகருகே தூங்கிக்கொண்டிருந்தனர். குழந்தை கனவு கண்டதோ, என்னவோ... சிரித்தது. எனக்குப் பின்னால் நின்று சல்மாவும் அக்காட்சியைக் கண்டு ரசித்தாள்.

'சல்மா!' என்றேன்.

'உம்!' என்றாள்.

'நீ தான் இப்போது பூரண குணம் அடைந்து விட்டாயே! ஹபீபாவை விவாக விலக்குச் செய்து விடட்டுமா?' என்று குறுநகை பூத்தவண்ணம் கேட்டேன். அவள் அதிர்ச்சி அடைந்தாள். முகம் குப் என்று சிவந்தது. புலியைப்போல் என்னை உற்று நோக்கினுள்.

'அவள் என்ன? கருவேப்பிலையா? காரியம் ஆன வுடன் தூக்கி எறிந்துவிட? அவளை நீங்கள் விலக்கினுல் உங்களை நான் விலக்கிவிடுவேன்' என்ருள். நான் பெரு மிதம் அடைந்தேன்.

அடுத்த கணம் அவள் லோலக்கு என் கன்னத்தில் அடிபட்டது!

---

# அவன் செயல்

முஹம்மத் ஸாதிக்கும், நானும் ஒரே ஊர்க்காரர்கள். நாச்சியார்கோவில் எங்கள் ஊர். சென்னைக் கல்லூரி ஒன்றில் படிக்கும் மாணவர்கள். ஒரே அறையில் தங்கியிருக்கும் தோழர்கள்.

நான் செல்வச் சீமானின் புதல்வன். ஸாதிக் ஏழை. அவனுடைய நற்குணங்களைக் கண்டு பிஞங்கு வியாபாரி-பாவாசா பண உதவி செய்து அவனுக்குக் கல்வி கற்பித்து வந்தார்.

எங்கள் ஊரார் காதோடு காதாக ஒரு ரகஸியம்பேசிக் கொண்டார்கள். பாவாசா, தன் ஊமைப் பெண்ணை ஸாதிக்கின் தலையில் கட்டுவதற்காகவே அவனுக்கு உதவி செய்து வருவதாகக் கூறினார்கள். பாவாசாவின் பரோபகாரத்தில் சுயநலத்தையே கண்டனர்.

'ஸாதிக்!'

'என்ன ஹபீப்?'

'உன்னைப் பார்க்கும்பொழுது எனக்கு அழுகை வருகிறது.'

'ஏன்?'

'பாவாசாவால் குர்பானி ஆட்டைப்போல் வளர்க்கப் பட்டு வருகிறாய்.'

'நீ கூறுவது எனக்குப் புரியவில்லையே!'

'உனக்கு எங்கே புரியப் போகிறது? நீ மலக்கு களுக்குச் சமமானவன். தன் ஊமைப் பெண்ணை உன் தலையில் சுமத்தத்தானே பாவாசா உனக்கு உதவிசெய்து வருகிறார்?'

'உபகாரத்துக்கு மாசு கற்பிப்பது குற்றமாகும்.'

'அந்த ஊமைப்பெண்ணை நிக்காஹ் செய்துகொண்டு பினுங்குக் கடையைக் கவனித்துக் கொள்ளச் சொன்னால் என்ன செய்வாய்?'

'அல்ஹம்துலில்லாஹ் என்று சொல்லிவிடுவேன்.'

'அப்படியானால் பணத்திற்காக அப் பெண்ணை மணந்து கொள்ளுவாய்!'

'என் தியாக புத்திக்கும் நீ களங்கம் கற்பிக்கிறாய்!'

'அந்த ஊமைப் பெண்ணோடு வாழ்வைக் கழிப்பது கஷ்டமாயிராதா?'

'கஷ்டமாயிருக்கலாம். அதற்காக வருத்தப்பட மாட்டேன். ஒரு பெண்ணை நிக்காஹ் செய்துகொண்ட பின் அவள் ஊமையாகி விட்டால் என்ன செய்வோம்? பெண், ஆணுக்காகத் தியாகம் செய்யவேண்டும். ஆண் பெண்ணுக்காகத் தியாகம் செய்யக் கூடாதா? ஆண் ஊமையாயிருந்தாலும் அவனுக்குப் பெண் சுலபமாகக் கிடைத்து விடுவாள் அல்லவா? தியாக புத்தி உள்ளவர் களே மேலான மனிதர்கள். தியாகமே, மனிதனை மிருகத் திடமிருந்து பிரிக்கிறது.'

இவ்வுரையைக் கேட்டதும் நான் பிரமித்துப் போனேன். அவனுடைய பண்பட்ட உள்ளம் எங்கே? என்னுடைய சிந்தனைகள் எங்கே? சமுதாயத்துக்கே பெருமையைத் தேடித்தருபவன் அவன்.

'ஸாதிக்! உன்னை நான் மலக்குகளுக்குச் சமமாகக் கூறியது தவறு. நீ மலாயக்குகளுக்கும் மேலானவன்' என்றேன்.

அவன் பேசவில்லை.

ஆனால் அந்தோ! அந்தத்தியாக மூர்த்தியின் வாழ்வு என்ன ஆவது?

அன்றுமுதல் என் சிந்தனை அதி தீவிரமாக வேலை செய்யத் தொடங்கிற்று.

நான், கொஞ்ச நாள் லீவு எடுத்துக்கொண்டு ஊருக்குப் புறப்பட்டேன்.

'ஹபீப்! இப்போது எதற்காக ஊருக்குப் போகிறாய்?' என்று கேட்டான் ஸாதிக்.

'மனம், பாடங்களைப் படித்துப் படித்து அலுத்து விட்டது. கொஞ்ச நாள் ஊருக்குப் போய் வந்தால்தான் மாறுதல் ஏற்படும்' என்று கூறினேன். அது வெறும் புளுகு.

பாவாசா, பினங்கிலிருந்து ஊருக்கு வந்திருக்கிறார். சென்னையில் எங்களைச் சந்தித்துத்தான் போனார். நாங்கள் ரயில்வே ஸ்டேஷனுக்குப் போய் அனுப்பிவைத்தோம்.

ஊர் போய்ச் சேர்ந்ததும் அந்த ஊமைப் பெண்ணை எனக்காகக் கேட்கும்படி என் தாயாரிடம் சொன்னேன்.

'என்னடா! உனக்குப் பைத்தியம் பிடித்து விட்டதா?' என்று தாயார் கேட்டார் வியப்புடன்.

'சும்மா இரு அம்மா! நான் ஒன்றும் பைத்தியம் பிடித்து அலையவில்லை. பாவாசாவுக்கு அவள் ஒரே மகள். பாவாசா கப்ரஸ்தானை அணுகிக்கொண்டிருக்கிறார். அவர் சொத்து முழுதும் எனக்கே சேரும். இஸ்லாத்தில் நான்கு மனைவிகள்வரை நிக்காஹ் செய்து கொள்ளலாம் என்று அனுமதிக்கப்பட்டிருக்கிறது.' என்று கண்களைச் சிமிட்டினேன்.

என் தாயார் என் கருத்தைப் புரிந்து கொண்டார். தாயைப் போல் பிள்ளை என்று சொல்வார்கள். என் விஷயத்தில் பிள்ளையைப் போல் தாய் என்று வைத்துக் கொள்ளுங்களேன்.

'மதராஸிலிருந்து எனக்கு ஒன்றும் கொண்டு வரவில்லையா?' என்று கேட்டாள் என் தங்கை.

'உனக்காக நல்ல மாப்பிள்ளையைக் கொண்டுவந்திருக்கிறேன். என்னோடு படிக்கும் முஹம்மத் ஸாதிக்கை நீ நன்கு அறிவாயே!' என்றேன்.

'போங்கள் அண்ணா!' என்று அவள் உடம்பை எட்டுக் கோணங்களாக வளைத்து, சேலைத்தலைப்பை வாயில் வைத்துக் கடித்துக் கொண்டே ஓடி விட்டாள்.

என் எண்ணம் நிறை வேறியது. தன் மகளை யார் கட்டிக்கொள்ளப் போகிறார்கள் என்று நினைத்த பாவா சாவுக்கு, உள்ளூரிலேயே படித்த–பணக்கார மாப்பிள்ளை

யாக் கிடைத்ததில் சந்தோஷம் தாங்க முடியவில்லை. தாம் அடைந்த பெருமிதத்தில் மெய்ம்மறந்தார். அப்பாவி மனிதர்!

பெண் நிச்சயம் செய்து விட்டு சென்னைவந்து சேர்ந் தேன். ஸாதிக் இடம் ஒன்றும் கூறவில்லை. அவனுக விஷயத்தை அறிந்து கொள்ளுமுன் நான் ஏன் அவசரப் படவேண்டும்?

பாவாசாவிடமிருந்து ஸாதிக்குக்குக் கடிதம் வந்தது.

அவன் என்னை வியப்புடன் நோக்கினான்.

'ஹபீப்! இதென்ன காரியம் செய்தாய்?'

'உனக்கு நல்லதையே செய்தேன். என் தங்கையை உனக்கு நிக்காஹ் செய்து வைக்க என் தாயார் சம்மதத் தையும் வாங்கி வந்திருக்கிறேன். சம்மதந்தானா?'

என்னுடைய இவ்வுரையைக் கேட்டதும் ஸாதிக் வியப்புக் கடலில் ஆழ்ந்தான்.

'அந்த ஊமைப் பெண்ணை மணந்து, எனக்காக உன் வாழ்வை ஏன் பாழாக்கிக்கொள்ள விரும்புகிறாய் ஹபீப்?' என்று அவன் கேட்டான்.

நல்ல நெஞ்சுக்கு நச்சுச் சிந்தனை வரவே வராது. அவனுக்காக நான் தியாகம் செய்வதாக நினைத்துக் கொண்டான்.

'நான் நன்கு சிந்தித்தே இம்முடிவுக்கு வந்தேன் ஸாதிக்! உன் உறவால் என் மனமும் உரம் பெற்று விட்டது. நானும் மனிதன் ஆக விரும்புகிறேன். என்னை

மட்டும் கோழையாகவும், சுயநலக்காரனுகவும் இருந்து விடச் சொல்லுகிருயா? என் வாழ்வையும் உயர்த்தச் சந்தர்ப்பம் அளி ஸாதிக்!' என்றேன் நயமாக.

அவன் மனம் ஏனே சமாதானம் அடையவில்லை. ஏதேதோ முனகிக்கொண்டே இருந்தான்.

நிக்காஹ் தினம் சமீபித்தது. அல்லாஹ்வின் செயலை யாரே அறிவார்? என் தாயார் திடீர் என்று நோய்வாய்ப் பட்டார். நெஞ்சு நோகிறது என்று உட்கார்ந்து விட்டார். நான் துடிதுடித்துப் போனேன். காரில் கும்பகோணத் துக்கு அழைத்துச் சென்று டாக்டரிடம் காண்பித்தேன். தன் பார்வையிலே என் தாயார் இருக்கவேண்டும் என்று டாக்டர் கூறினுர். தன் டிஸ்பென்ஸரியிலேயே இடமும் கொடுத்தார்.

அடுத்த நாள் நிக்காஹ். விருந்தாளிகளும் வந்து விட்டார்கள். தாயார் குணம் அடையவில்லை. எல்லா ஏற்பாடுகளும் நிறைவேறிவிட்டன. நிக்காஹ்வை ஒத்தி வைக்கும்படி பாவாசாவைக் கேட்டுக்கொண்டேன். அவர் அதற்கு இசையவில்லை. நிரம்பச் செலவு செய்து ஏற்பா டுகள் எல்லாம் செய்தாகிவிட்டன. விருந்தாளிகளும் வந்து விட்டார்கள். பினுங்குக்குத் திரும்பிப்போக வேண்டும். விசாவும் சீக்கிரம் காலாவதியாகிவிடும். என் தாயாரின் அனுமதிபெற்று வந்து, நிக்காஹ் நிறைவேறி யதும் போய்விடும்படிக் கேட்டுக் கொண்டார். பின்னல் நாங்கள் எங்கே மனம் மாறிவிடுவோமோ என்ற அச்சமும் அவருக்கு இருந்து வந்தது. என்ன செய்வது என்று தோன்றவில்லை,

'பரவாயில்லை மகனே! போய் நிக்காஹ் செய்து கொள்!' என்று தாயார் அனுமதி அளித்தார். எனக்கோ தாயார் இல்லாமல் கலியாணம் செய்து கொள்ளவே இஷ்டம் இல்லை. வேறு வழியின்றி அந்த ஏற்பாட்டுக்குச் சம்மதித்தேன்.

பைத் ஓதிக்கொண்டு இளைஞர்கள் முன்னால் சென்றார்கள். மாப்பிள்ளை கோலத்துடன் நான் காரில் போய்க் கொண்டிருந்தேன். அருகில் ஸாதிக் நடந்து வந்தான். நான் அவனைப் பார்ப்பேன். அவன் என்னைப் பார்ப்பான். ஒன்றும் பேசமாட்டோம். திரளான மக்கள் முன்னும் பின்னும் இருந்தனர். எல்லோரும் ஏதோ கூடிக்கூடிப் பேசிக்கொண்டே வந்தார்கள். அவர்கள் என்னைப் பார்த்த பார்வையில் நிறைய பொருள் இருந்தது.

'பணப்பைத்தியம்! படித்து என்ன பயன்?' என்று தான் எல்லோரும் பேசிக்கொள்வார்கள். வேறு என்ன பேசப்போகிறார்கள்? என் இடத்தில் ஸாதிக் இருந்தால் 'ஐயோ பாவம்'! என்று பேசிக்கொண்டிருப்பார்கள்.

காந்த விளக்குகள் ஒளிசிந்த கலியாண ஊர்வலம் நகர்ந்து கொண்டிருந்தது. ஒரு விளக்கு மங்குவதும் ,குப்' என்று எரிவதுமாய் இருந்தது. என் நெஞ்சம் அத்துடன் போட்டிபோட்டது. ஒரு கணம் சந்தோஷத்தில் நீந்துவேன். மறுகணம் சோகத்தில் ஆழ்ந்து விடுவேன். என் திட்டம் நிறைவேறியதற்காகச் சந்தோஷம். தாயின் நோய்க்காகச் சோகம். என் நண்பன் ஸாதிக்குக்காகச் செய்யும் தியாகத்தில் பெருமிதம்.

திடீர் என்று கூட்டத்தில் பரபரப்பு உண்டாயிற்று. ஒருவர் தந்தியுடன் என்னிடம் ஓடி வந்தார். அவசர மாக அதை வாங்கிப் பிரித்துப் படித்தேன்.

'தாயாருக்கு ஆபத்து. உடனே புறப்படவும்'.

தந்தியைப் படித்ததும் என் இதய ஓட்டமே நின்று விடும்போல் இருந்தது. பாவாசாவை அழைத்து வரும் படிச் சொன்னேன். அவர் வந்தார். 'நான் கும்ப கோணத்திற்குப் புறப்பட வேண்டும். விடைதாரும்!' என்றேன். அவர் சிலையாகச் சமைந்து விட்டார்.

கூட்டத்தில் அல்லோல கல்லோலம். நான் மாப் பிள்ளை வேஷத்தைக் களைந்தேன். ஊர்வலம் வந்த காரி லேயே கும்பகோணத்திற்குப் பறந்தேன். நிக்காஹ்வை சீக்கிரம் முடித்துக் கொண்டு போகும்படி பாவாசா வற்புறுத்தினார். அவர் கண்கள் கலங்கியிருந்தன. நான் இசையவில்லை.

கும்பகோணம் வந்து என் தாயாரைக் கண்டபின் தான் எனக்கு நிம்மதி ஏற்பட்டது. அவர், ஏன் வந்தாய் என்று கேட்டார். நன்றாகத்தான் இருந்தார். நான் தந்தியைக் காட்டினேன். 'தந்தி நாங்கள் கொடுக்க வில்லையே!' என்று டாக்டர் கூறினார். அவர் தந்தியை வாங்கிப் பார்த்தார். 'என்ன இப்படி அனாவசியமாகக் குழப்பிக் கொண்டீர்களே! தந்தி திருவாரூரிலிருந்து கொடுக்கப்பட்டிருக்கிறது. உங்கள் ஊரில் வேறு ஹபீப் யாராவது இருக்கிறார்களா?' என்று கேட்டார்.

என் தலையில் சம்மட்டியால் யாரோ அடித்ததைப் போல் இருந்தது. நான் மீண்டும் நாச்சியார் கோவி லுக்குப் பறந்தேன்.

ஊர்க் கோடியிலேயே எனக்குப் பேராச்சரியம் காத்துக் கொண்டிருந்தது. ஊமைப் பெண்ணுக்கும், ஸாதிக்குக்கும் நிக்காஹ் நடந்து விட்டது என்று கேள்விப் பட்டேன். கோபத்தோடு பாவாசாவிடம் போய்க் கேட்டேன். 'நான் என்ன செய்வேன்? ஆண்டவனின் நாட்டம்' என்ருர் பாவாசா.

'ஆண்டவனின் நாட்டமாவது?' நான் சீறினேன்.

'தாங்கள் மீண்டும் வந்து நிக்காஹ் செய்து கொள்வீர்கள் என்ற நம்பிக்கை எனக்கு ஏற்படவில்லை. ஆகையால் இப்படிச் செய்துவிட்டேன்' என்ருர் அவர்.

முஹம்மத் ஸாதிக்கைக் கண்டுபேசினேன். அவன் தன்னை ஆசீர்வதிக்கும்படிக் கேட்டான். நான் ஒன்றும் பேசாமல் விருட்டென்று வந்துவிட்டேன்.

பல வருடங்கள் கடந்து விட்டன. இப்போது எனக்கு வேறு பெண்ணுடன் திருமணம் நடைபெற்று விட்டது.

அன்று எங்கள் வீட்டில் ஒரே கலாட்டா. எனக்கும், என் வாழ்க்கைத் துணைவிக்கும் பெரிய வாய்ப் போர் நடந்தது. முஹம்மத் ஸாதிக் இச்சமயம் உள்ளே நுழைந்தான்.

'உஷ்! வாயை மூடு!' என்று என் மனைவியைப் பார்த்து இரைந்தேன். அவளா பயப்படுகிறவள்? மேலும் மேலும் கத்திக்கொண்டிருந்தாள்.

முஹம்மத் ஸாதிக் சிரித்தான். 'உன்பாடு தேவலை! எல்லாப் பெண்களையும் ஊமையாகவே அல்லாஹ் படைத்தால் நல்லது' என்று நான் கூறினேன்.

முஹம்மத் ஸாதிக் கடகடவென்று சிரித்தான். 'எல்லாம் அவன் செயல்' என்ருன்.

---

# லாலா ரங்

மனோகரமான மாலை வேளை.

டில்லி செங்கோட்டைக்குள், கலாமண்டபத்தில் நாட்டிய ராணி அத்ஹம்பாய், உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் வண்ணம் நாட்டியம் ஆடிக் கொண்டிருந் தாள். அதை ரசித்துக் கொண்டிருந்தார் மன்னர் முஹம் மத்ஷா. எதிரே மேஜைமீது உயர்தரமான, சுவைமிக்க மது வகைகள் வைக்கப்பட்டிருந்தன.

ஔரங்கஜேபுக்குப்பின் திறம்படைத்த மன்னர்கள் தோன்றவில்லை. மொகலாயர்களின் வழித்தோன்றல்கள் மதுவிலும், மங்கையிலும் மயங்கிக் கிடந்தனர். உலகப் பிரசித்தி பெற்று விளங்கிய மாபெரும் அரசு, மங்கி மறைந்து கொண்டிருந்தது. டில்லியும், அதைச்சுற்றி யிருந்த ஊர்களுமே மன்னர் முஹம்மத்ஷாவுக்கு எஞ்சி யிருந்தன.

அமைச்சர் கமருத்தீன் பரபரப்புடன் கலாமண்டபத் தில் நுழைந்தார். மன்னரின் கண்கள் செக்கச் செவேல் என்று சிவந்திருந்தன. அத்ஹம் பாயின் நளினமான அங்க அசைவிலும், சதங்கைகளின் இன்ப நாதத்திலும் அவர் கவனம் லயித்திருந்தது.

கமருத்தீன் கொஞ்சம் தயங்கினர். பிறகு மன்னரை அணுகிக் கூறினர் :—

'ஆலம்பனுஹ்! டில்லிக்கு ஆபத்து! ஆப்கானிய மன்னன் அப்தாலி டில்லியை நோக்கிப் படையெடுத்து வருகிருன் என்று செய்தி கிடைத்திருக்கிறது. லாஹூரை நெருங்கி விட்டதாகத் தெரிகிறது. சீக்கிரம் போருக்குப் புறப்படவேண்டும்.'

மதுமயக்கத்தில் இருந்த டில்லி பாதுஷா அமைச்சரை ஏறிட்டுப் பார்த்தார்.

'என்ன சொல்லுகிறீர்? அப்தாலி வருகிருனு? அவன் ஏன் இங்கே வருகிருன்? நான் என்பாட்டுக்குச் சுவையான மதுவகைகளை அருந்திக்கொண்டு, அத்ஹம்பாயின் அற்புதமான நாட்டியக் கலையை ரசித்துக் கொண்டிருக்கும் போது, என்னை ஏன் தொந்தரவு செய்ய வருகிருன்? பிச்சைக்காரப் பயலைப் போகச் சொல்லுங்கள்! என்னை அனுவசியமாகத் தொல்லைக்கு ஆளாக்க வேண்டாம் என்று கூறுங்கள்!'

'ஆலம்பனுஹ்! அப்தாலி நமது நாட்டைக் கவர வருகிருன். போர் புரிந்தே அவனை விரட்ட வேண்டும். வேறு வகையில் போகமாட்டான். போர் புரியாவிட்டால் நமது அரசு அழிந்துவிடும். மொகலாயர் கௌரவத்துக்கே மாருத களங்கம் ஏற்பட்டுவிடும்.'

'கமருத்தீன்! உங்களுக்கு வயதாகி விட்டது. ஏதோ உளறுகிறீர். அருமையான நாட்டியக் கலையை ரசிப்பதை விட்டு, கத்தி எடுத்துக்கொண்டு மனிதர்களைக் கொலை செய்யக் கூப்பிடுகிறீரே! நீங்கள் போய் ஏதாவது செய்யுங்கள். என்னை இந்தச் சொர்க்கத்திலிருந்து வெளியே வரச் சொல்லாதீர்கள். போங்கள்!'

'ஜஹாம்பனுஹ்! மன்னர் தலைமை தாங்கி போரை நடத்தினல் ஒழிய போர்வீரர் உற்சாகத்துடன் போரிட மாட்டார்களே!'

'அப்படியானல் என் குமாரன் அஹமத்ஷாவை அழைத்துச் செல்லுங்கள். அவன் சூரப்புலி. என்னுடனேயே சண்டைக்கு வருகிருன்.'

'அப்படியே செய்கிறேன்.'

அமைச்சர் கமருத்தீன் வெளியேறினுர். அவர் முகத்தில் வெறுப்புக் காணப்பட்டது. உள்ளம் கொந்தளித்துக் கொண்டிருந்தது.

∴ ∴ ∴

அன்று இரவு.

மணி பதினென்று இருக்கும். இளவரசர் அஹமத் ஷாவின் அறையிலே விளக்கு எரிந்து கொண்டிருந்தது. அவர் இங்கும், அங்கும் உலாவிக் கொண்டிருந்தார். முகத்தில் கவலைக்குறிகள் காணப்பட்டன.

அறையின் வாசலில் தொங்கிய பெரிய பட்டுத்திரை விலகிற்று. அழகிய பருவமங்கை ஒருத்தி ஓசையின்றி உள்ளே நுழைந்தாள். அவள் அரண்மனைப் பணிப்பெண்.

'இளவரசே! இன்னும் தூங்கவில்லையா?'

'யார்? லாலா ரங்! இந்நேரத்தில் எதற்காக வந்தாய்?'

'விளக்கு எரிந்து கொண்டிருப்பதைக் கண்டேன். போருக்குப் புறப்படவேண்டி யிருப்பதால் ரொம்பக் கவலையாயிருப்பீர்களோ என்று பார்க்க வந்தேன்.'

'ஆம்! கவலைதான்! போருக்குப் புறப்படுவதற்காகக் கவலைப்படவில்லை. போரில் மடியவும் அஞ்சவில்லை. என் தந்தை — மொகலாயர்களின் வழித்தோன்றல் இப்படிக் கோழையாகி விட்டாரே என்றுதான் கவலைப்படுகிறேன். வாட்களின் நிழலிலே வளர்ந்து, வீரவாழ்வு வாழ்ந்து, வரலாற்றுச் சுவடிகளிலே அழியாப் புகழ் பொறித்துச் சென்றவர்களின் பரம்பரையினர், மது மயக்கத்திலும், மங்கையர் மோகத்திலும், மனத்தைப் பறிகொடுத்து விட்டனரே என்று நெஞ்சம் குமுறுகிறது. அல்லாஹ்வுக்காகவே பிறந்து, அல்லாஹ்வுக்காகவே வாழ்ந்தவர்கள், இன்று சுய நலத்துக்காக வாழ்கிறார்கள். உலக அறிஞர்களாயிருந்தவர்கள், இன்று முட்டாள்கள் என்ற பெயர் பெற்றிருக்கிறார்கள். அறிஞர்களால் பெரிதும் மதிக்கப் பட்டவர்கள் இன்று காரி உமிழப்படுகிறார்கள். பண்பாட்டிலே உலகத்தாருக்கு வழிகாட்டிகளா யிருந்தவர்கள், இன்று சீரழிந்து கிடக்கிறார்கள். நாம் எந்நிலையிலே இருக்கிறோம் என்பதைச் சிந்தியாமல், பிரியாணி வயிறு நிறையக்கிடைத்தால் போதும் என்று அலைகிறார்கள். உயர்ந்த சிந்தனைக்கும், எளிய வாழ்வுக்கும் எடுத்துக் காட்டாய் விளங்கியவர்கள், சுகவாழ்வு வாழ ஆரம்பித்து விட்டார்கள். நச்சுச் சிந்தனைகளே நெஞ்சங்களில் அரவங்களைப்போல் நெளிகின்றன. அந்தோ! அழிவின் அறிகுறிகளே காணப்படுகின்றன. தியாக புத்தி தினையளவும் இல்லை. பரந்த உள்ளமும், பொது நோக்கும் அறவே ஒழிந்துவிட்டன. இவர்களுக்கு எப்படிப் புத்திபுகட்டுவேன்? எப்படிப் பண்டைப் பெருமைகளை எய்தும்படிச் செய்வேன்?—இளவரசர் ஆத்திரத்துடன் பேசிக்கொண்டே போனார்.

'கவலைப்படவேண்டாம் இளவரசே! உறுதியைக் கைவிடாது ஆண்டவனை நம்பிக் காரியத்தில் இறங்குங்கள். அவன் உதவி செய்வான்.'

'அவன் எங்கே உதவி செய்யப்போகிருன்? நாங்கள் அவனை மறந்து வெகு தூரம் விலகிவிட்டோம். மகா பாபிகள் ஆகிவிட்டோம். ஆகையால் அவனும் நம்மை மறந்துவிட்டான்.'

'அப்படிச் சொல்ல வேண்டாம் இளவரசே! அல்லாஹ் தண்டிப்பதிலும் பெரியவன்; மன்னிப்பதிலும் பெரியவன். இதுவரை செய்த தவறுகளுக்காக மன்னிப் புக்கோரி திருந்திஞல் நிச்சயம் நம்மை மன்னித்து உதவி புரிவான்.'

'அந்த நம்பிக்கையும், மனப்பாங்கும் போய் விட்டனவே!'

'தங்கள் தந்தைக்கு அந்த மனப்பாங்கு இல்லாமல் இருக்கலாம். தங்களுக்கு இருக்கிறது என்பதைத் தங்கள் உணர்ச்சியே காட்டுகிறது. பரிசுத்த உள்ளத்துடன் இரண்டு ரகாத் தொழுது பிரார்த்தனை செய்யுங்கள். ஆண்டவன் உதவி செய்வான். மன நிம்மதி ஏற்படும். நிம்மதியும், வெற்றியில் உறுதியுமே போருக்குப் புறப் படுமுன் தேவை'.

'லாலா ரங்'

'இளவரசே!'

'நான் ஏதோ நினைக்கிறேன். நீ ஏதோ உபதேசம் செய்கிருய். உன் புல்லாங்குழல் எங்கே?'

'இதோ மடியிலேயே இருக்கிறது.'

'அதை எடுத்து வாசி. அப்போதுதான் என் மனத்திற்கு நிம்மதி ஏற்படும்.'

'முதலில் தொழுது கொள்ளுங்கள். பிறகு வாசிக்கிறேன்.'

'எனக்குக் கட்டளையிடும் அளவுக்கு அவ்வளவு உரிமை பெற்றுவிட்டாயா?'

'மன்னிக்க வேண்டும் இளவரசே!'

'உம்! சரி! ஒலூச்செய்ய நீர் கொண்டுவா.'

லாலா ரங் ஓடிச்சென்று நீர் கொண்டு வந்தாள். இளவரசர் அஹமத்ஷா ஒலூச்செய்து இரண்டு ரகாத் தொழுதார். 'யா அல்லாஹ்! எங்கள் குற்றங்களை மன்னித்து விடு. என் நெஞ்சுக்கு உறுதி அளி. போரிலே வெற்றியைக் கொடு' என்று துவாச் செய்தார்.

'ஆமீன்' என்றுள் லாலா ரங்.

இளவரசர் கட்டிலில் சாய்ந்து படுத்துக்கொண்டு 'இப்போது வாசி' என்றுர்.

லாலா ரங் வாசிக்கத் தொடங்கினள். புல்லாங்குழலின் இனிய நாதம் இளவரசரைப் பரவசப்படுத்திற்று. மெய்ம்மறந்தார்; கண்களை மூடிக்கொண்டார்.

இளவரசர் தூங்கிவிட்டார் என்று கருதிய லாலா ரங், வாசிப்பதை நிறுத்தி, அவர் தலையணையைச் சரி செய்தாள்.

இளவரசர் கண்களைத் திறந்து கொண்டார்.

'என்ன செய்கிருய் லாலா? ஏன் வாசிப்பதை நிறுத்தி விட்டாய்?'

'தாங்கள் தூங்கிவிட்டதாக நினைத்து ...........'

'ஹூம்! நான் தூங்கவில்லை. கண்களை மூடிக் கொண்டு, உன் புல்லாங்குழலின் இன்பநாதத்தை ரசித்தேன்.'

'கண்களை மூடிக்கொண்டு ஏன் ரசிக்கவேண்டும்?'

'கண்களைத் திறந்து கொண்டிருந்தால், அவைகள் உன்னைப் பார்க்கின்றன. உன் பவழக் கன்னங்களிலும், கொவ்வைச் செவ்வாயிலும் லயிக்கின்றன. காதுகள் இசையைக் கேட்பதை நிறுத்தி விடுகின்றன. ஒரே வேளையில் ஏதாவது ஒன்றைத்தான் அனுபவிக்கமுடியும் போல் தோன்றுகிறது.'

'போங்கள் இளவரசே! கேலி செய்கிறீர்கள்!'

'உண்மையைத்தான் கூறுகிறேன். உன் செந்நிறத் துக்காக நான்தானே லாலா ரங் என்று பெயரிட்டேன்.' (லாலா ரங் = செந்நிறத்தாள்).

'அப்படியானல் நான் பெயரை மாற்றிக்கொள்ளப் போகிறேன்.'

'புல்லாங்குழல் மோகினி' என்று வைத்துக்கொள்.'

'ஊஹூம்! என் பழைய பெயர் பாத்திமாவே இருக்கட்டும்.'

'அந்தப் பெயர் வைத்துக்கொண்டால், உன் பழைய உறவினன் தர்வேஷ் வந்து விடுவான். ஜாக்ரதை! அன்று அவனுடன் மல்யுத்தத்துக்கே தயாராய் விட்டாயே! கத்தி எடுத்துக் குத்தவும் போய்விட்டாயே!'

'ஹூம்! அந்த அயோக்யனின் பெயரை உச்சரிக்க வேண்டாம். என்னை விளையாட்டுக்கருவி என்று நினைத்துக் கொண்டான். அன்றே அவனை நரகலோகம் அனுப்பி யிருப்பேன். தாங்கள்தான் வந்து காப்பாற்றினீர்கள்.'

'கலாஞானம் இல்லாதவன். உன் இசையில் மயங் காமல், உன் அழகில் மயங்கிவிட்டான். வம்பு செய்யத் தொடங்கி விட்டான். சரி! நேரம் ஆகிறது. இனி நீ போகலாம்.'

'இளவரசே! ஒரு வேண்டுகோள்!'

'என்ன வேண்டுகோள்?'

'என்னையும் போர்க்களத்திற்கு அழைத்துச் செல்ல வேண்டும்.?'

'கொல்லன் பட்டறையில் ஈக்கு என்ன வேலை?'

'ஈ நினைத்தால் கொல்லனின் மூக்கில் 'ஙொய்' என்று நுழைந்து மூளையைக் குழப்பிவிட முடியும்.'

'ரொம்ப கெட்டிக்காரியாய் இருக்கிருயே!'

'அத்துடன் ருசியாகச் சமைத்துத் தருவேன். பணி விடைகள் செய்வேன். புல்லாங்குழல் வாசிப்பேன்.'

'அப்படியானல் வரலாம்.'

'ரொம்ப நன்றி! இளவரசே! ரொம்ப நன்றி!' என்று கூறிக்கொண்டே குதித்துக்கொண்டு வெளியே ஓடினுள் லாலா ரங்.

∴ ∴ ∴

1748 ஆம் ஆண்டு, மார்ச் மாதம், 11 ஆம் நாள்.

மானுபூருக்கு அருகே அப்தாலியின் படையும், டில்லி இளவரசர் அஹமத்ஷா படையும், எதிர் எதிரே அணி வகுத்து நின்றன. மறுநாட் காலேயில் போர் தொடங்க வேண்டும் என்று அஹமத்ஷா தீர்மானித்திருந்தார். திடீர் என்று இரவிலேயே அப்தாலியின் பீரங்கிகள் நெருப்பைக் கக்கத் தொடங்கின. டில்லி வீரரும் திருப்பிச் சுட்டனர். இருபுறமும் குண்டு மாரி ஆரம்பமாயிற்று; போர் மூண்டு விட்டது.

அப்தாலியிடம் துப்பாக்கிகளும், பீரங்கிகளும், மருந்தும் அதிகம். அப்தாலியின் பீரங்கிகள் நெருப்பு மழை பெய்யத் தொடங்கின.

டில்லி அமைச்சர் கமருத்தீனும், இளவரசர் அஹமத் ஷாவும் போர் வீரருக்குக் கட்டளைகள் இட்டுக் கொண்டிருந்தனர், 'டுமீல்' என்று ஒரு குண்டு அருகில் விழுந்து வெடித்தது. 'யா அல்லாஹ்!' என்று கூறிக் கொண்டே கமருத்தீன் கீழே சாய்ந்தார். அடுத்தகணமே அவர் உயிர் பிரிந்தது. உடனே அவர் பதவியை, அவருடைய மகன் முயீனுல் முல்க் ஏற்றுச் செயலாற்றத் தொடங்கினுன்.

அமைச்சர் கமருத்தீன் மரணம் அடைந்து விட்டார் என்ற செய்தியைக் கேட்டதும், டில்லி வீரர்கள் குழப்பம் அடைந்தனர். இளவரசர் அஹமத்ஷா கைகளைப் பிசைந்துகொண்டே கூடாரத்திற்குள் நுழைந்தார்.

கூடாரத்துக்குள் லாலா உட்கார்ந்து துவா ஓதிக் கொண்டிருந்தாள். இளவரசரைக் கண்டதும் 'அஞ்ச வேண்டாம்! அல்லாஹ் நிச்சயம் வெற்றியளிப்பான்' என்ருள்.

'என்ன நெஞ்சம்! குண்டுமாரி ஈரல்குலையை நடுங்கச் செய்கிறது. அனுபவப்பட்ட போர்வீரரே அஞ்சுகின்றனர். அப்தாலியிடம் உள்ள துப்பாக்கி மருந்து நம்மிடம் இல்லை. இந்நிலையில் உனக்கு வெற்றியில் உறுதி! நீ ஆணுய்ப் பிறந்திருக்க வேண்டியவள் லாலா! புல்லாங் குழல் மோகினியாய்ப் பிறந்துவிட்டாய். சரி! ஆபத்து நெருங்கிவிட்டது. ஏதாவது அற்புதம் ஏற்பட்டால் ஒழிய, நாங்கள் வெற்றி பெற முடியாது, போ! ஓடிப் போய் உன் உயிரைக் காப்பாற்றிக்கொள்!'....இளவரசர் பரபரப்புடன் பேசினுர்.

'நான் களத்திலிருந்து ஓடுவதற்காக வரவில்லை. தங்களைக் காப்பேன். அல்லது அம்முயற்சியில் அழிவேன். எனக்கு வாழ்வும், சாவும் ஒன்றே. அந்தச் சாவு உங்கள் காலடியில் கிடைத்தால், பெரும் பேறு என்று கருது வேன்!'....லாலா உணர்ச்சியோடு கூறினுள்.

இச்சமயம் முயீனுல் முல்க் உள்ளே வந்தார்.

'இளவரசே! ஆபத்து! நம் வீரர்கள் பின் வாங்கு கின்றனர். நான் எவ்வளவோ உற்சாகம் ஊட்டியும் பயன்படவில்லை. தன்னுடைய துப்பாக்கி மருந்தால் நம் போர்வீரர் மீது அப்தாலி நெருப்பு மழை பொழிகிருன். நம்மிடம் மருந்து போதிய அளவு இல்லை. அப்தாலியின் வெடி மருந்தை அழித்தால் ஒழிய நாம் வெற்றிபெற

முடியாது. அவ்வேலைக்குத் தகுதி வாய்ந்தவர்கள் ஒருவரும் கிடைக்கவில்லை. ஆகையால் நாம் பின்வாங்கி விடுவது நல்லது. இல்லையானால் உயிருக்கே ஆபத்து வந்துவிடும்.'

இவ்வுரையைக் கேட்ட இளவரசரின் முகம் சிவந்தது.

'முயீனுல் முல்க்! முதலில் நீங்கள் ஓடிப் போய் விடுங்கள்! ஒரு கோழையும் இங்கே இருக்க வேண்டாம். உங்களுடன் வருகிறவர்களையும் அழைத்துக் கொண்டு போய் விடுங்கள். எஞ்சிய வீரர்களைக் கொண்டு இறுதி வரை நான் போரிடுவேன். டில்லி இளவரசன் களத்தி லிருந்து ஓடினான் என்று வரலாறு கூறவேண்டாம். வீரமாகப் போரிட்டு மடிந்தான் என்று கூறட்டும். நெஞ்சுத் துணிவுள்ள ஒருசிலர் என்னுடன் இருந்தாலும் போதும். நான் போரிடுவேன். கடைசித்துளி ரத்தம் உள்ளவரையும் எதிர்ப்பேன்'... இளவரசரின் கண்களில் தீப்பொறி பறந்தது.

முயீனுல் முல்க் மௌனியானார். போர்வீரருக்கு உற்சாக மூட்டப் போய்விட்டார்.

இவற்றைக் கேட்டுக்கொண்டிருந்த லாலா, இளவரசரை நோக்கி 'எனக்கும் போர் செய்ய உத்திரவு வேண்டும்' என்றாள்.

'நீயா போர் செய்யப் போகிறாய்?'.......இளவரசர் புன்னகை புரிந்தார்.

'ஆம்! போய் வெற்றி பெற்றுத் திரும்புவேன். அல்லது வீர மரணம் எய்துவேன்.'

'துப்பாக்கி சுடவே உனக்குத் தெரியாதே. எந்த ஆயுதத்தைக் கொண்டு சண்டை செய்வாய்?'

'இதோ! என் புல்லாங் குழல்.'

'ஹா! ஹா! ஹா! அப்தாலியின் பீரங்கிகளும் பாம்புகளா? உன் புல்லாங் குழல் மகுடியைக் கேட்டு ஆடுவதற்கு?'

'வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம்! ஆண்டவன் தங்களுக்கு நிச்சயம் வெற்றியளிப்பான். நான் வருகிறேன்.' என்று கூறிப் புறப்பட்டாள்.

அவள் வேகமாகத் தன் கூடாரத்துக்குச் செல்வதை இளவரசர் கவனித்தார்.

இளவரசர் போர் வீரர்களுக்குக் கட்டளையிடச் சென்ருர். மீண்டும் டில்லிப் பீரங்கிகள் மும்முரமாகச் சுடத் தொடங்கின.

∴ ∴ ∴

லாலா போய் வெகு நேரம் இருக்கும். எதிரிப்படைகள் இருந்த திசையிலே வான் அதிரும் பேரொலி கேட்டது. பூமி நடுங்கிற்று. அப்தாலி குவித்து வைத்திருந்த வெடி மருந்துக் கிடங்கில் தீப்பிடித்துக்கொண்டது. தீ ஜுவாலை வான்முட்ட எழுந்தது. ஆயிரக்கணக்கான அப்தாலியின் போர்வீரர் எரிந்து சாம்பலாயினர். கூடாரங்கள் யாவும் சுடர் விட்டு எரிந்தன. ஒரே பேரிரைச்சல் கேட்டது. அப்தாலி பின்வாங்கி ஓடினன். டில்லிக்கு வெற்றி கிட்டிற்று.

இளவரசர் அஹமத்ஷாவுக்கு இது ஒரு பெரும் அற்புதமாகவே பட்டது. மிகவும் பாதுகாப்புடன் வைத்திருந்த வெடிமருந்துக் கிடங்கில் எப்படித்தீப் பிடித்தது?

அப்தாலியின் வீரர்கள் ஓடி விட்டனர். டில்லி வீரர்கள் முன்னேறிச் சென்று, அப்தாலி விட்டுச் சென்ற பொருட்களை வசப்படுத்திக் கொண்டனர். எதிர் முகாமில் குற்றுயிராயிருந்தவன் ஒருவன் கூறினன் :-

'மருந்துக் கிடங்கைக் காவல்காத்து நின்ற வீரர்களிடம், யாரோ ஒரு கிராமப்பெண் வந்தாள். அவள் புல்லாங்குழல்.வாசிக்கத் தொடங்கினள். மகா அற்புதமாயிருந்தது. காவல் காத்து நின்ற வீரர்கள், அவள் அழகிலும், புல்லாங்குழல் இசையிலும் மயங்கினர். அப்தாலியிடம் புல்லாங்குழல் வாசித்துப் பரிசுபெற வந்ததாக அப்பெண் கூறினள். அவள் வாசித்துக் கொண்டே போனள். வீரர்கள் சொக்கிப் போனர்கள். அவள் சிறுகச்சிறுக மருந்துக் கிடங்கை நெருங்கினள். திடீர் என்று சிக்கிமுக்கிக் கற்களை எடுத்து உரசினள். அவ்வளவு தான்! மருந்தில் தீப்பற்றிக் கொண்டது. வான் அதிரும் பேரொலியுடன் மருந்து வெடித்தது. அப் பெண்ணும் வெந்து மாண்டாள். ஆயிரக்கணக்கான வீரர்களும் மாண்டனர். நல்லவேளை! அப்தாலி வெகு தொலைவில் இருந்தார். ஆபத்தை உணர்ந்து பின்வாங்கி விட்டார்' என்றன்.

இவ்வுரையைக் கேட்டதும் இளவசர் அஹமத்ஷா, லாலா ரங் கூடாரத்துக்கு ஓடினர். அங்கு லாலா காணப்

படவில்லை. அவளுடைய ஆடைகள் கட்டிலில் கிடந் தன. அவற்றின் மேல் ஒரு கடிதமும் கிடந்தது. இளவரசர் ஆவலுடன் அதைப் பிரித்துப் படித்தார்.

'இளவரசே! என் உள்ளத்தை என்றோ உங்களுக்குப் பறிகொடுத்து விட்டேன். உங்கள் மகிழ்ச்சியே என் மகிழ்ச்சியாகக் கொண்டு வாழ்ந்தேன். நானோ அரண் மனைப் பணிப்பெண், தாங்களோ இளவரசர்.

நம் இருவருக்கும் நிக்காஹ் நடைபெறாது. தாங்கள் விரும்பினாலும் அரண்மனையில் யாரும் அனுமதிக்க மாட்டார்கள். நான் வேறு எவரையும் மணந்து சுகமாக வாழ முடியாது. எந்தவகையில் என் உயிரைத் தங்களுக் காகத் தியாகம் செய்ய முடியும் என்றே அல்லும் பகலும் சிந்தித்து வந்தேன். இந்தப் போர் எனக்குத் தக்க சந்தர்ப்பத்தை அளிக்கிறது. நான் சிக்கி முக்கிக் கற்களையும், கட்டாரியையும் எடுத்துக்கொண்டு, கிராமப் பெண் வேடம் பூண்டு, எதிரிப் படைக்குள் போகிறேன். புல்லாங்குழலால் எப்படியும் எதிரிவீரர்களை வசியப்படுத்தி மருந்துக் கிடங்கில் தீ வைத்து விடுவேன். தவறினால் அப்தாலியின் பரந்த மார்பிலே என் கூரிய கட்டாரி, கட்டாயம் பாய்ந்துவிடும். தங்கள் அமைச்சர், அப்தாலி யின் மருந்தை அழிக்க ஆள் இல்லையே என்று ஏங்கினார். நான் அப்பணியை ஏற்கிறேன். தாங்கள் என் புல்லாங் குழலைக் கண்டு சிரித்தீர்கள். இதனால் என்ன செய்கிறேன் பாருங்கள் ! என் வெற்றியிலே எனக்கு உறுதி இருக்கிறது. அல்லாஹ் நிச்சயம் உதவி செய்வான் என்ற நம்பிக் கையும் இருக்கிறது. ஆண்டவன் தங்களுக்கு வெற்றி யையும், நீண்ட ஆயுளையும், நல்ல அழகிய மனைவியை

யும் தந்தருளுமாறு பிரார்த்திக்கிறேன். தாங்கள் வீர வாகை சூடித் தங்கள் மனைவியுடன் உல்லாசமாயிருக்கும் போது இந்த ஏழைப் பணிப்பெண்ணை நினைப்பீர்களா? என் ஆன்மா கடைத்தேற துவாச் செய்யுங்கள். எப்போதும் அல்லாஹ்வை நம்பி முயற்சி செய்யுங்கள். வெற்றி கிடைக்கும். என் அன்பு!'

லாலா ரங்கின் இக்கடிதத்தைப் படித்து முடித்ததும், இளவரசர் குழந்தையைப் போல் தேம்பித் தேம்பி அழலானார்.

---

# ராபியா

கோழி கூவிற்று.

கூண்டுக்கிளி கண்களைத் திறந்து, சிறகுகளை நீட்டிச் சோம்பல் முறித்தது. சுருண்டு படுத்திருந்த பூனை, தலையைத் தூக்கி, வாயை அகலத் திறந்து, நாக்கை நீட்டி, பெரிய கொட்டாவி விட்டது. இரவு முழுதும் கண் விழித்து, எலி வேட்டையாடிய அலுப்புபோலும்!. 'மியாவ்' என்று குரல் கொடுத்தது.

வேலைக்காரி ராபியா அவசர அவசரமாக எழுந்தாள். தன்னுடைய பீற்றல் பாயையும், தலையணையையும் சுருட்டி எடுத்து, அவைகளுக்கு உரிய இடத்தில் வைத்தாள். ஒலூச் செய்து, சுபுஹு தொழுகையில் ஈடுபட்டாள். சலாம் சொல்லி, நீண்ட துவா ஓதினுள்.

தொழுது எழுந்து, எஜமானர் அறையைப் பார்த்தாள். அது இன்னும் தாழ்ப்பாளிட்டுக் கிடந்தது.

ராபியா சமையல் அறைக்குள் நுழைந்தாள். உள்ளே இருட்டாயிருந்தது. மின் விளக்கைப் போட்டாள். உட்கார்ந்து அடுப்பைப் பற்றவைத்தாள். விறகு ஈரமாயிருந்ததால் சீக்கிரம் பற்றவில்லை. கொஞ்சம் மண் எண்ணெயைக் கொட்டி ஊதினுள். 'பக்' என்று பற்றிக்கொண்டது.

ராபியா சத்தம் கேட்டுத் திரும்பிப் பார்த்தாள். அறை வாசலில் எஜமானி, ஜொஹரா நிற்பதைக் கண்டாள். திக்' என்றது அவள் நெஞ்சம்.

'ஏண்டி! எவ்வளவு திமிர் உனக்கு? இவ்வளவு எண்ணெயை ஊற்றிப் பற்றவைக்கிருயே! யார் வீட்டுச் சொத்து என்று நினைத்துக் கொண்டாய்? பட்டப்பகலில் அம்மாளுக்கு 'எலக்ட்டிரி லைட்டு' வேறு வேண்டுமோ?'... எஜமானியம்மாள் சீறினுள்.

'இல்லை அம்மா!'

'என்ன வெள்ளை அம்மா! நீ என்னடி செய்வாய்? இந்த வீட்டிச் சோறு அல்லவா உன்னை இப்படி எல்லாம் செய்யச் சொல்லுகிறது!'

எஜமானி ஜொஹராவின் கோபத்தைக்கண்டு, ராபியா பதறி எழுந்து, மின் விளக்கை அணைத்தாள்.

இதற்குள் எஜமானர் காசிம் அவிடம் தோன்றினர்.

'என்ன ஜொஹரா! சாந்தமான காலை வேளையில், அல்லாஹ்வை நினைத்துத் தொழுவதை விடுத்து, ஷைத் தானைப்போல கத்துகிருயே!' என்ருர் தம்முடைய மனைவி யைப் பார்த்து.

'ஆமாம்! நான் ஷைத்தான்! இவள் சொர்க்கத்து ஹூரு!. இப்படி இவளுக்காகப் பரிந்து பேசிப் பேசித் தானே இவளைத் தூக்கி விட்டுவிட்டீர்கள். நல்ல கொழுப்பு ஏறிவிட்டது. தலையில் மசாலா அரைக்கிருள். இவளை விரட்டித் தலை முழுகுங்கள்'.

'ஜொஹரா! ஏன் வீணுக அவள்மீது உனக்கு இவ்வளவு வெறுப்பு? கால் பட்டால் குற்றம், கைபட் டால் குற்றம் என்கிருயே! கொஞ்சம் மண் எண்ணெயை

ஊற்றிவிட்டதால் என்ன கெட்டுப்போய் விட்டது? நீ செய்கிற ஊதாரித்தனம் உனக்குப் படவில்லை. அவள் தான் நம் சொத்தை எல்லாம் தொலைப்பதாகக் கூச்சல் போடுகிறாயே!'

'ஆம்! நான் ஊதாரி. அவள் செட்டுக்காரி. அவளே இந்த வீட்டில் இருக்கட்டும். அவளோடு சுகமாக இருங்கள். நான் என் அம்மா வீட்டுக்குப் போகிறேன்.'

ஜொஹரா இவ்வாறு கூறிவிட்டு படபடப்போடு வீட்டுக்குள் நுழைந்தாள். வேலைக்காரி முன், காசிம் அவ்வாறு பேசியது ஜொஹராவின் தன் மானத்தையே போக்கிவிட்டது. அவள் வெகுண்டாள்.

கொஞ்ச நேரத்தில் ஜொஹரா துணிமணிகளை மூட்டை கட்டிக்கொண்டு, துப்பட்டியைப் போர்த்திக் கொண்டு, அடுத்தத் தெருவில் இருந்த தாய் வீட்டுக்குப் புறப்பட்டு விட்டாள். காசிம் பார்த்தபடியே கல்லாகச் சமைந்து நின்றார். ஜொஹரா போவதைத் தடுக்கவும் இல்லை; ஒரு வார்த்தை பேசவும் இல்லை.

இத்தகைய புகைச்சல்கள் அவ்வீட்டுக்குப் புதியவை யல்ல. ராபியா அவ்வீட்டில் காலடி வைத்த நாள் தொட்டே இருந்து வந்தன. காசிம் எவ்வளவோ தம் முடைய மனைவியைச் சமாதானப்படுத்திப் பார்த்தார். அவர் வார்த்தைகள் ஜொஹராவின் செவிகளில் ஏறவே இல்லை. வேலைக்காரி ராபியாவுக்கும், காசிமுக்கும் ரகசியத் தொடர்பு இருக்கவேண்டும் என்று ஜொஹரா நினைத்ததே காரணமாகும்.

காசிம் நடுத்தர வயதினர். நீண்டகாலமாக ரங்கூனில் வியாபாரம் செய்து வந்தவர். ஜப்பானியர் குண்டு வீசியபொழுது, பர்மாவை விட்டுக் கால் நடையாக அஸ்ஸாம் வழியே, மிகவும் கஷ்டப்பட்டு ஊர் திரும்பி யவர். மிகவும் ஜாக்ரதையுடன் காப்பாற்றிக் கொண்டு வந்த ரொக்கத்தைக் கொண்டு ஊரிலேயே சொந்தக் கடையை ஆரம்பித்தார். ஆண்டவன் அருளால் நல்ல வியாபாரம் நடந்தது. பணமும் சேர்ந்தது.

ராபியா, காசிமைப் பார்த்துக் கண்களில் நீர் நிரம்ப 'நான் எங்கேயாவது போய் விடுகிறேன். அல்லாஹ்வுக் காக இனியும் என்னைத் தடுக்காதீர்கள். எனக்காக நீங்கள் இருவரும் சண்டை போட்டுக்கொள்வது எனக்குப் பிடிக்கவில்லை. இனி ஒரு நாளேனும் நான் இந்த வீட்டில் தங்குவது தகாது. வீண் அபவாதம் ஏற்படு கிறது. இத்தனை நாள் என்னைக் காப்பாற்றியதற்காக அல்லாஹ் உங்களுக்கு அருள் புரியவேண்டும். எனக்கு உத்திரவு கொடுங்கள். நான் போய் வருகிறேன்' என்றாள்—எழுந்து சுவரோடு சாய்ந்து நின்றவண்ணம். அவள் உள்ளத்திலே புயல் வீசிக்கொண்டிருந்தது. கண் களிலிருந்து நீர் ஆறுகப் பெருகிற்று.

காசிம் கொஞ்ச நேரம் உணர்ச்சி வசப்பட்டவராய் நின்றார். பிறகு பேசலானார்.

'ராபியா! நீயோ அனாதை. இருந்த ஒரே சகோ தரனும் இறந்துவிட்டான். உன் கணவரும், நானும் ரங்கூனில் ஒரே தெருவில் வியாபாரம் செய்து வந்தோம். காலாபஸ்தியில் எங்கள் இருவரையும் இரட்டைப்

பிறவிகள் என்றே அனைவரும் கூறுவார்கள். எங்களி டையே இருந்த அன்னியோன்னியத்தைக் கண்டு பிறர் பொருமையும் கொண்டார்கள். சொந்த சகோதரர்கள் கூட அப்படி இருக்கமாட்டார்கள். என்னைக் கேட்காமல் உன் கணவர் ஒன்றும் செய்யமாட்டார். அவரைக் கேட் காமல் நான் ஜொஹறாவுக்குக் கடிதம் கூட எழுத மாட் டேன். அந்தச் சப்பை மூஞ்சி—ஜப்பான்காரன் படை யெடுத்தான். நாங்கள் இருவரும் அகதிகளாகப் புறப் பட்டோம். நடக்கமுடியாமலும், பிரயாணக் கஷ்டங் களைச் சகிக்கமுடியாமலும் உன் கணவர் வழியில் கால மானார். உன்னைக் காப்பாற்றுவதாக நான் அவரிடம் வாக்களித்தேன். அதன் பின்தான் நிம்மதியாக அவர் ஆவி பிரிந்தது. அதற்காகவே உன்னை நான் காப்பாற்றி வருகிறேன். உன்னைப் போக விட்டுவிட்டால் என் வாக்குறுதி என்ன ஆவது? உன் கணவருக்கு நான் ஒருகாலும் துரோகம் செய்யமாட்டேன். தவிர, நீயோ பெண். இளமையும், அழகும் இருக்கின்றன. வாச மலருக்கும், கனிந்த பழத்திற்கும் பாதுகாப்புத் தேவை. இல்லாவிட்டால் பறி போய்விடும். இந்த உலகம் மிகவும் பொல்லாதது. கழுகுகள் கூட்டத்திலே உன்னைத் தூக்கி எறிந்துவிட நான் விரும்பவில்லை. வீண் அபவாதத்துக்கு அஞ்ச வேண்டாம். நம் உள்ளங்கள் பரிசுத்தமாயிருக் கின்றன. அல்லாஹ் சாட்சியாயிருக்கிறான். ஜொஹ றாவின் கூச்சல்களுக்குப் பயப்படாதே! அவள் கிடக் கிறாள் அவசரக்காரி! நீ உன் வேலையைப் பார்!' என்று தேறுதல் கூறினார் காசிம்.

'எனக்காகப் பரிந்து பேசாமலாவது இருங்கள். அது தங்கள் மனைவியின் சந்தேகத்தைப் பெருக்குகிறது' என்றாள் ராபியா.

'உன்னை யார் என்ன கொடுமைப்படுத்தினாலும் நான் பார்த்துக் கொண்டு சும்மா இருக்க வேண்டும் என்று சொல்லுகிறாயா? என்றால் அப்படி இருக்க முடியாது ராபியா! அந்தச் சிறுக்கிக்குப் பயந்து நடந்து கொள்ளும் படி எனக்கு உபதேசிக்கிறாயா? அது ஒருகாலும் முடியாது. அது என் சுபாவத்துக்கு முற்றிலும் மாறானது.' என்று கூறிவிட்டு, காசிம் விருட்டென்று போய் விட்டார்.

காசிமின் மனைவி ஜொஹரா, தாய் வீட்டுக்குப் போயே போய் விட்டாள்.

தாய் வீட்டுக்குள் நுழைந்ததும், துணி மூட்டையை ஒரு பக்கம் பொத்தென்று எறிந்து விட்டு, அங்கிருந்த நாற்காலியில் உட்கார்ந்தாள். துப்பட்டியைக் கழற்றித் தரையில் எறிந்தாள். முகம் வியர்த்துக் கொட்டிற்று. தாய் ஓடோடியும் வந்து 'ஜொஹராக் கண்ணு! அதி காலையிலேயே இப்படிக் கண்கலங்கி வந்திருக்கிறாயே! என்ன காரணம்? அந்தப் பாவி மனிதன் என்ன செய் தான்?' என்று அனுதாபத்தோடு விசாரித்தாள்.

ஜொஹரா 'ஓ' வென்று அழுது, தன் கதையைக் காது மூக்கு வைத்துக் கூறினாள் தாயிடம்.

'அடபாவி! வர வர இப்படியா செய்கிறான்? இருக் கட்டும்! செய்கிறபடி செய்து அவன் வாலை அறுக்கிறேன். அந்தச் சிறுக்கி என்ன பொடி போட்டு மயக்கி விட் டாளோ தெரியவில்லையே! என் ஒரே அருமை மகள், நான் செல்லமாய் வளர்த்த மகள் இப்படிக் கண்கலங்கி நிற்கும்படி ஆகி விட்டதே!' என்ற தாய் படபடப்போடு பேசினாள். சேலைத் தலைப்பால் கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

சிறிதுநேரம் மௌனம் நிலவிற்று. திடீர் என்று தாய், மகளைப்பார்த்து 'அது சரி! நீ பெரிய பைத்தியக்காரியாக இருக்கிறாயே! அவர்கள் இருவருக்கும் சாதகமான நிலைமையை ஏற்படுத்திக் கொடுத்து விட்டு ஓடி வந்து விட்டாயே! இப்படி அவர்களைத் தனியே விட்டு வரலாமா?' என்று கேட்டாள். ஜொஹரா மிரள மிரள விழித்தாள். அவர்கள் இருவரும் நிக்காஹ் செய்து கொண்டு உன்னை விலக்கி விட்டால் என்ன செய்வாய்? போ! உடனே போய் விடு! உன் தம்பி நாளை ஊரிலிருந்து வருகிறான். அவனையும், இன்னும் நாலு பெரிய மனிதர்களையும் கூட்டிக் கொண்டு வருகிறேன். அந்த மனிதன் என்ன சொல்லுகிறான் பார்த்து விடுவோம்!' என்றாள் தாய்.

ஜொஹராவுக்குத் தாய் சொன்னபடி செய்வதே சரி என்று பட்டது. கீழே கிடந்த துப்பட்டியை எடுத்துப் போர்த்திக்கொண்டு, கால் ஆறாமலே புறப்பட்டுவிட்டாள். அவள் வீட்டுக்குள் நுழைவதைப் பார்த்துக் கொண்டே மௌனமாகக் காசிம் கடைக்குப் புறப்பட்டார்.

மறுநாள் ஜொஹராவின் தம்பியும், தாயும் வந்தார்கள். ராபியாவை குடைகுடை என்று குடைந்து விட்டார்கள்; படாதபாடு படுத்தினார்கள். 'நீலி! பாசாங்குக்காரி! மாயக்காரி! ஊரை ஏமாற்ற ஐந்து வேளையும் தொழுகிறாள்!' என்று பேசினார்கள். மாறி மாறி வசைமாரி பொழிந்தார்கள். ராபியா அழுது அழுது கண்ணீரும் வற்றி விட்டது.

இரவில் கடையைப் பூட்டிவிட்டு காசிம் வீட்டுக்கு வந்தார். மாமியாரும், மைத்துனரும் வந்திருப்பதை

அறிந்து கொண்டார். இன்று வீட்டில் நாடகம் நடக்கப் போகிறது என்று நினைத்துக் கொண்டார். வீட்டில் மௌனம் நிலவியது—புயலுக்குமுன் அமைதியைப்போல.

இரவு உணவுக்குப்பின், காசிம் வெற்றிலை போட்டுக் கொண்டிருந்தார். மைத்துனர் சலாம் சொல்லி எதிரே வந்து உட்கார்ந்தார்.

'ஆம்! அந்த வேலைக்காரியை விரட்டி விடுங்கள் என்றால் ஏன் விரட்ட மாட்டேன் என்கிறீர்கள்? அவள் மீது உங்களுக்கு ஏன் இவ்வளவு பரிவு? இரக்கம்?' என்று கோபமாகவே கேட்டார் மைத்துனர்.

'உம்! உன் அக்காளுக்குத் துணையாகச் சண்டை போட வந்திருக்கிறாயா? உனக்குத் துணையாக உன் கிழத்தாயை மட்டுமா அழைத்து வந்தாய்? நீ ஒருவன் போதுமா என்னுடன் சண்டைபோட? இதோபார்! நான் வழ வழ என்று பேச விரும்பவில்லை. ராபியாவின் கணவருக்கு வாக்களித்தபடி அவளை நான் பாதுகாக்கக் கடமைப் பட்டவன். ஆண்துணை அவளுக்கு இருந்தால் முன்பே எங்காவது அனுப்பியிருப்பேன். என் வீட்டிலேயே வைத்திருக்க மாட்டேன். நான் அவளைச் சகோதரியாகப் பாவிக்கிறேன். பரிசுத்த உள்ளங்களோடு நாங்கள் நடந்து கொள்ளுகிறோம். அவள் ஓர் உத்தமி; மிகவும் நல்லவள். அவள் மீது வீண் அபவாதத்தைச் சுமத்துவது மகா பாபம். நான் பகல் எல்லாம் கடையில் இருக்கிறேன். வீட்டுக்கு வந்த பின், மறுநாள் கடைக்குப் புறப்படும் வரையில் உன் அக்காளின் பார்வையிலேயே இருக்கிறேன். ஏதாவது சந்தேகம் ஏற்படும் என்று கருதியே, காலையில் உன்

அக்காள் எழுந்த பின்பே நான் எழுந்திருக்கிறேன். இப்படி இருக்கும்போது வீண் சண்டைக்கு வராதே! நான் ராபியாவை எக்காரணத்தைக் கொண்டும் விரட்ட முடியாது. என்னை எந்தப் பயல் என்ன செய்து விடுவான்? ஒருகை பார்த்து விடுகிறேன்.' என்று உறுதியான குரலில் கூறினார் காசிம்.

மைத்துனர் மேற்கொண்டு ஒன்றும் பேசவில்லை. மௌனமாக எழுந்து சென்று விட்டார்.

ரம்லான் மாதம் வந்தது. ராபியா ஒரு நோன்பு விடாமல் நோற்றாள். துவண்டு சோர்ந்து விழும் நிலை ஏற்பட்டும், வேலைகள் யாவும் அவளே செய்தாள். ஜொஹரா நோன்பும் வைக்காமல், வேலை வெட்டி ஒன்றும் செய்யாமல் கொழுக்கட்டையைப் போல் உட்கார்ந்திருந்தாள்.

காசிம் பெருநாளைக்காகத் துணிமணிகள் எடுத்து வந்தார். மனைவிக்கு வாங்கி வந்த விலை உயர்ந்த பட்டுப் புடவையைப் போலவே, மற்றொன்றை ராபியாவுக்காகக் கொண்டு வந்தார். இதைக்கண்ட ஜொஹராவுக்கு வயிறு பற்றி எரிந்தது. இதைக் கேள்விப்பட்ட தெருக்காரர் களும், காசிமைப்பற்றி காதோடு காதாகப் பேசத் தொடங்கி விட்டனர்.

'பெண்டாட்டிக்கு எடுத்ததைப் போன்ற புடவையை வேலைக்காரிக்கும் எடுத்தால் என்ன அர்த்தம்? ஏதோ இருக்கிறது! நெருப்பு இல்லாமல் புகை கிளம்புமா? பேசாமல் ராபியாவை நிக்காஹ் செய்து கொள்வது தானே!' என்று காசிமிடமே சிலர் கேட்டார்கள்.

காசிமுக்குக் கோபம் பொங்கி எழுந்தது. 'இனி இப்படிக் கேட்க வேண்டாம். மீறிக் கேட்டால் காது அல்லது மூக்கு காணுமல் போய்விடும்; ஜாக்ரதை!' என்று எரிந்து விழுந்தார்.

பெருநாளைக்கு முந்திய நாள். பகல் இரண்டு மணி இருக்கும். கடைக்காரப் பையன் ஓடோடியும் வந்தான். கல்லாவில் உட்கார்ந்திருந்த காசிம் திடீர் என மாரடைப் பால் மவுத் ஆகிவிட்டார் என்று கூறினன். காசிம் வீட் டில் ஒரே அல்லோல கல்லோலம். அன்று மாலையிலேயே காசிம் நல்லடக்கம் செய்யப்பட்டார்.

மறுநாள் அனைவரும் அழகாக உடுத்திக் கொண்டு ஈத்காவிற்குச் சென்றார்கள். காசிம் வீட்டில் அனைவரும் தலையைத் தாங்கிய வண்ணம் உட்கார்ந்திருந்தார்கள்.

எல்லோருக்கும் ஈத் தினம். அவர்களுக்கு முஹர்ரம் பத்தாவது தினம்.

வீட்டில் பந்துக்கள் அனைவரும் கூடியிருந்தார்கள். காசிமின் வக்கீல் வந்தார். காசிம் உயில் எழுதி வைத் திருப்பதாயும், அதன்படி கடை, ரொக்கப்பணம், வீடு இதர சொத்துக்கள் யாவும் ராபியாவுக்குச் சேரவேண்டும் என்றும், ஜொஹரா ராபியாவுக்கு ஊழியம் செய்து கொண் டிருந்தால் மாதா மாதம் நூறு ரூபாய் பெற்றுக்கொள்ள வேண்டும் என்றும், இல்லையானல் மஹர்ப் பணம் மட்டும் வாங்கிக்கொண்டு எங்காவது போய்விடவேண்டியதுதான் என்றும் கூறினர். இதைக் கேட்டு அனைவரும் பிரமித்துப் போயினர். எல்லோருடைய கவனமும் கூட்டத்தில் ஒரு

மூலையில் உட்கார்ந்திருந்த ராபியாவின் பக்கம் திரும் பிற்று. கொஞ்ச நேரத்துக்கு முன் அங்கிருந்த ராபியா இப்போது அங்குக் காணப்படவில்லை.

'ராபியா எங்கே?'

'அந்த மாயக்காரி எங்கே?'

'அந்தத் துரோகி எங்கே?'

'உண்ட வீட்டுக்கு இரண்டகம் நினைத்த மோசக்காரி எங்கே?'

இவ்வாறு ஒவ்வொருவராகக் கூச்சலிட்டனர்.

'அந்த விபசாரி எங்கே? அந்த நீலி எங்கே?' என்று ஆத்திரத்துடன் கேட்டுக்கொண்டு எழுந்தான் காசிமின் மைத்துனன்.

'கடைசியில் சொத்து முழுவதையும் எழுதி வாங்கிக் கொண்டாளா? சொந்த மனைவியை நடுத்தெருவில் நிற்கும்படிச் செய்துவிட்டாளா?' என்று அனைவரும் பேசிக்கொண்டனர்.

வக்கீல் நாளை வருவதாகவும், ராபியாவைத் தாமும் தேடப்போவதாகவும், நாளை வந்து உயிலையும், காசிம் சீல் செய்து வைத்திருக்கும் தபாலையும் கொண்டுவந்து வாசிப் பதாகவும் கூறிவிட்டுப் போய்விட்டார்.

காசிம் இருந்த தெரு முழுதும் ஒரே களேபரமாயி ருந்தது. 'நீலி! எப்படியோ காசிமை மயக்கிச் சொத்து முழுவதையும் எழுதி வாங்கிக்கொண்டாள். சும்மாவா காசிமும் எழுதி வைத்திருப்பான்? அவளைக் கொல்ல

வேண்டும். கண்ட துண்டமாக வெட்டிக் கழுகுக்கு இரை யாக்க வேண்டும். பாசாங்குக்காரி!' என்று பேசிக் கொண்டனர்.

'ஆமாம்! எல்லாம் எழுதி வாங்கிக்கொண்டு எங்கு போய் மறைந்துவிட்டாள்?' என்று கேட்டனர் சிலர்.

'எல்லோருடைய கோபதாபமும் அடங்கட்டும். பிறகு போய் சொத்தைக் கைப்பற்றிக் கொள்வோம் என்று தலைமறைவாக இருப்பாள்' என்றார் ஒருவர்.

அவளுக்கு ஒரு செப்புக்காசும் கொடுக்கக் கூடாது. இந்த ஊரிலேயே இருக்க விடாமல் அடித்துத் துரத்தி விடவேண்டும்' என்றார் மற்றொருவர்.

மறுநாள் வக்கீல் காசிமின் வீட்டுக்கு வந்தார். உயிலை வாசித்துக் காட்டிவிட்டு, சீல் வைத்திருந்த கடிதத்தை எடுத்தார்.

கூட்டத்தில் கசமுச என்று ஒருவருக் கொருவர் பேசிக் கொண்டனர்.

'கடிதத்தில் என்ன இருக்கப்போகிறது? ரகசியமாக நான் ராபியாவை நிக்காஹ் செய்து கொண்டேன் என்று எழுதிவைத்திருப்பான் காசிம்' என்று பேசிக்கொண்டனர்.

வக்கீல் கடிதத்தைப் பிரித்துப் படிக்கத் தொடங்கி னார். கூட்டத்தில் நிசப்தம் நிலவிற்று. அது நீண்ட கடிதம். அதன் சாரம் வருமாறு:—

'நானும், ராபியாவின் கணவரும் ஆப்த நண்பர்கள். ஜப்பான்காரர்கள் குண்டு வீசத்தொடங்கியதும் ரங்கூனில்

பீதி பரவிற்று. அனைவரும் உயிரைக் காப்பாற்றிக் கொள்ளச் சிதறி ஓடத் தலைப்பட்டனர். நான் வெறுங் கையாயிருந்தேன். ராபியாவின் கணவர் கையில் கனமான தோல்பை இருந்தது. அதில் அவர் முன் ஜாக்ரதையாகச் சேமித்து வைத்த பணம், நோட்டுகளாக இருந்தது.

ஜப்பான் விமானங்கள் எங்களைத் தொடர்ந்து வந்து குண்டு வீசின. நாங்கள் அஸ்ஸாமை நோக்கி ஓடினோம். எங்களுக்கு முன்னாலும், பின்னாலும், இடமாகவும், வல மாகவும் குண்டுகள் விழுந்து வெடித்தன. நாங்கள் ஓடி னோம்; ஓடிக்கொண்டே இருந்தோம். ஒரு குண்டு பின்னால் வெடித்தது. ராபியாவின் கணவர் குரல் கேட் டதும் திரும்பிப் பார்த்தேன். கையில் தோல்பையுடன் அவர் மல்லாந்து கிடந்தார். ஓடிப் போய் அருகில் நின்றேன். அவர் பையை நீட்டி, அதை ராபியா விடம் சேர்ப்பித்து விடும்படிக் கேட்டுக் கொண்டார். அவர் உயிருக்காக மன்றாடிக் கொண்டிருந்தார். அப் பையை வாங்கிப் பிரித்துப் பார்த்தபோது அதில் நிறைய பணம் இருந்தது. அவர் கேட்டுக்கொண்டபடியே செய்வ தாகக் கூறி பையுடன் நான் ஓடிவந்து விட்டேன்.

அல்லாஹ்வின் கிருபையால் எப்படியோ பணத்துடன் ஊர் திரும்பினேன். நான் சைத்தான் வசப்பட்டேன். பணத்தை ராபியாவுக்குக் கொடுத்து விட்டால் நல்லவன் என்ற பெயர் எடுக்கலாம். அப்புறம்? வெறுங்கையுடன் வந்த என் கதி என்ன ஆவது?

பணத்தை ராபியாவிடம் கொடுத்து விட்டால், துணை யற்ற அவளுக்கு அது ஆபத்தை விளைவித்தாலும் விளை விக்கலாம். அவள் நன்கு வாழவேண்டும் என்பதுதானே

அவள் கணவரின் நோக்கம். பணத்தை நான் வைத்துக் கொண்டு, ராபியாவைக் கடைசிவரைக் காப்பாற்றி விட்டால் போகிறது. இவ்வாறு யோசித்தேன். பணத்தை நானே வைத்துக்கொண்டு ராபியாவைப் பரிவுடன் நடத்தினேன். சொத்து அவளுடையது. ஆகையால் நான் இறந்தபின் சொத்தை சிடுமூஞ்சி ஜொஹராவிடம் சேர்க்காமல் உரியவளிடம் சேர்ப்பிக்கிறேன். ராபியா பரிசுத்தமானவள். அவளையும் என்னையும் சந்தேகித்தவர்கள் யோக்யதையை நான் நன்கறிவேன். அவர்கள் இனியாவது திருந்திஞல் அதுவே எனக்குப் போதுமானது. என் பாபத்தை அல்லாஹ் மன்னிப்பாஞக!'

இவ்வாறு எழுதப்பட்டிருந்த கடிதத்தை வக்கீல் படித்து முடிக்கவும், ஒருவரை ஒருவர் ஆச்சரியத்துடன் பார்த்துக்கொண்டனர். ஒருவர் முகத்திலும் ஈயாடவில்லை.

வக்கீல் பேசத்தொடங்கிஞர் :—

, நான் நேற்று இவிடம் வந்து உயிலைப்பற்றிக் கூறியதைக் கேட்ட ராபியா, யாருக்கும் தெரியாமல் நழுவி என் வீட்டுக்கே போய்விட்டாள். நான் வீடு திரும்பிய போது அவள் அங்கிருப்பதைக் கண்டு ஆச்சரியப் பட்டேன். அவள் பேசியதைக் கேட்டு மேலும் பேராச்சரியம் அடைந்தேன். சொத்து முழுவதையும் ஜொஹரா பெயருக்கே எழுதிவிடும்படியும், கையெழுத்துப் போடுவதாகவும் கூறிஞள். தனக்கு ஹஜ்ஜுக்குப் போகமட்டும் பணம் கொடுத்தால் போதும் என்று சொன்ஞள். 'அவள் விருப்பப்படியே செய்துவிட்டேன். இனி சொத்து முழுவதும் ஜொஹராவுக்கே சொந்தம்.' என்ருர் வக்கீல்.

'ராபியா எங்கே?' என்று ஒரே வேளையில் பலர் குரல் கேட்டது. இச்சமயம் நீண்ட தாடியுடைய ஒருவர் ஜிப்பா அணிந்துகொண்டு உள்ளே நுழைந்தார்.

அனைவரும் அவரைப் பார்த்தனர்.

'ஆம்! ராபியா எங்கே? அவளைத் தேடிக்கொண்டே நானும் அலைகிறேன். நான் அவள் கணவன். ஜப்பான் குண்டு வீச்சால் காயம்பட்டு காசிமிடம் பணப்பையைக் கொடுத்தேன். அவர் நான் இறந்துபோவேன் என்று கருதி ஓடி வந்துவிட்டார். நான் குணம் அடைந்த பின் ஊர் ஊராய் அலைந்து இப்போதுதான் இந்தியா வந்து சேர்ந்தேன்' என்றார்.

'ஆ! அப்படியா? இன்னும் நீங்கள் உயிரோடு இருக்கிறீர்களா?

வாருங்கள்! ராபியா என் வீட்டில்தான் இருக்கிறாள். தங்கள் மனைவி தெய்வப் பிறவி!' என்றார் வக்கீல்.

ஜோஹரா கண்களில் நீர் மல்க வக்கீலிடம் வந்து 'நான் ராபியாவுக்கு ஊழியம் செய்து வாழ்வேன்' என்றாள்.

'வேண்டாம்! என் தங்கையாக வாழலாம்' என்றார் ராபியாவின் கணவர்.

# முரடன்

'ஊம்—ஊம்—ஊம்.'

பள்ளிக்கூடத்திலிருந்து வீடு திரும்பிய கிருஷ்ணன், கையில் புத்தகங்களுடன் அழுதுகொண்டே உள்ளே நுழைந்தான்.

தாய் விசாலாட்சியின் மனம் இளகிவிட்டது. எழுந்து வந்து மார்போடு அணைத்துக் கொண்டு 'ஏண்டா அழுகிருய்?' என்று கேட்டாள்.

'ஊம்—ஊம்—ஊம்'

'அட யார் அடித்தார்கள்? சொல்லி அழு!'

'முஸ்தபா முதுகில் மொத்து-மொத்து என்று மொத்தி விட்டான் அம்மா!'

'அந்த முரட்டுத் துலுக்கப்பயலோடு சேராதே என்று சொன்னேனே கேட்டாயா? நீ என்ன செய்தாய்?'

'நான் ஒன்றும் செய்யவில்லை அம்மா! எழுது வதற்காக என் பென்சிலைக் கேட்டான். நான் கொடுக்க வில்லை. அதற்காக அடித்துவிட்டான். ஊம்—ஊம்.'

'அழாதே! அந்தப் பயல் வரட்டும்! அவனுடைய கையை முறித்துப் போட்டு விடுகிறேன். இனிமேல் அவனுடன் சேராதே!'

'சரி அம்மா!'

⁂ ⁂ ⁂

மறுநாள் காலையில் கிருஷ்ணன் பள்ளிக்கூடத்திற்குப் புறப்பட்டான்.

அவனுக்கு வேண்டிய புதிய புத்தகங்களில் சில வாங்கப்பட்டிருந்தன. மற்றுஞ் சில இன்னும் வாங்கப் படவில்லை. தாய் தந்தையின் வறுமையே காரணம்.

'அம்மா!' என்ருன் கிருஷ்ணன்.

'ஏண்டா!' என்று கேட்டாள் தாய்.

'இன்று கணக்குப் புத்தகம் கொண்டு வரவில்லை யாஞல் அடிப்பேன் என்று வாத்தியார் சொன்ஞர்அம்மா!'

'என்ன செய்வது மகனே! இன்னும் இரண்டு தினங்களில் வாங்கிக் கொடுத்து விடுகிறேன். வாத்தியார் இடம் சொல்.'

'வாத்தியார் அடிப்பார் அம்மா!'

கிருஷ்ணனின் முகம் வாட்டம் அடைந்திருந்தது. தாய் அவனைப் பார்த்து மௌனம் ஆஞள். என்ன செய்வது என்று தோன்றவில்லை. அன்ருடம் சோற்றுக்கே திண்டாடவேண்டிய நிலையில் இருக்கும் அவள், திடீர் என்று புத்தகம் வாங்கக் காசுக்கு எங்கே போவாள்? அவள் கண்களில் நீர் துளித்தது.

'எப்படியாவது சீக்கிரம் வாங்கிக் கொடுத்து விடு கிறேன். போய் வா!' என்று பிரியா விடை கொடுத்து அனுப்பிஞள் மகனை.

கிருஷ்ணன் போக மனம் இல்லாமல் நடந்துபோய்க் கொண்டிருந்தான்.

∴ ∴ ∴

கணக்கு வாத்தியார் வந்தார்.

'டேய்! கணக்குப் புத்தகம் வாங்காமல் வந்தவர்கள் யார்? எழுந்திருங்கள்!' கையில் பிரம்பை ஆட்டிக் கொண்டே கேட்டார்.

ஒரே நிசப்தம் நிலவிற்று. கணக்கு வாத்தியாரின் பிரம்படி அந்தப் பள்ளிக்கூடத்தில் மிகவும் பிரசித்தி பெற்றது.

புத்தகம் கொண்டுவராதவர்கள் ஒவ்வொருவராக எழுந்தனர். அவர்களின் முகங்கள் அனல்பட்ட கத்தரிக் காயைப் போல் ஆகிவிட்டன. பலமான பிரம்படிகள் வாங்க கைகளைத் தொடையில் தேய்த்துக்கொண்டனர்.

'பளார்! பளார்!'

முதல் பையனை வாத்தியார் விளாசினார். அவன் 'ஓ' வென்று அழலானான்.

'உம்! வாயை மூடு! புத்தகம் ஏன் கொண்டுவர வில்லை? எத்தனை நாளாகச் சொல்லுகிறேன். புத்தகம் இல்லாமல் ஏன் இங்கே வருகிறாய்? கழுதை மேய்க்கப் போவதுதானே!' வாத்தியார் இரைந்தார்.

அடுத்த பையனிடம் வந்தார்.

அவன் தயங்கித் தயங்கி கையை நீட்டினான். அடி விழுமுன்பே அழத் தொடங்கிவிட்டான்.

'ஏண்டா! அடி வாங்குவதற்கு முன்பே அழுகிறாயா? புத்தகம் ஏன் கொண்டு வரவில்லை?—பளார்! பளார்!'

கிருஷ்ணனிடம் வந்தார். அவன் உட்கார்ந்திருந்தான். அருகில் இருந்த முஸ்தபா நின்று கொண்டிருந்தான்.

'ஏண்டா! நீ புத்தகம் வாங்கி விட்டாயா?' என்று கேட்டார் கிருஷ்ணனை.

'ஆமாம் சார்! இதோ இருக்கிறது சார்!' என்று காண்பித்தான் கிருஷ்ணன்.

அவன் கையில் புதிய புத்தகம் இருந்தது.

வாத்தியார் முஸ்தபாவிடம் வந்தார். 'நீ ஏன் புத்தகம் கொண்டு வரவில்லை?' என்று கேட்டார்.

'மறந்து வந்துவிட்டேன் சார்!' என்றான்.

'ஏன் மறந்து வந்தாய்? கையை நீட்டு! என்றார். முஸ்தபா கையை நீட்டினான்.

'பளார்! பளார்!' அவன் கையில் பிரம்படிகள் விழுந்தன. ஆனால் முஸ்தபாவின் கண்கள் கலங்கவே இல்லை. கையைத் துடைத்துக் கொண்டு, சிரித்துக் கொண்டே உட்கார்ந்தான்.

கிருஷ்ணன், முஸ்தபாவின் கைகளைப் பார்த்தான். உள்ளங்கையில் தழும்புகள் விழுந்திருந்தன. செக்கச் செவேல் என்று சிவந்திருந்தது.

'பாவம்! எனக்காக உன் புத்தகத்தைக் கொடுத்து விட்டு, நீ ஏன் முஸ்தபா இப்படி அடி வாங்கினாய்?' என்று அன்பொழுகக் கேட்டான் கிருஷ்ணன்.

'ஹூம்! சிநேகிதனுக்கு இதைக்கூடச் செய்யா விட்டால் என்ன பிரயோஜனம்?' என்ருன் சிரித்துக் கொண்டே முஸ்தபா.

அன்று மாலை.

கிருஷ்ணனும், முஸ்தபாவும் கைகோத்துக் கொண்டு கிருஷ்ணனின் வீட்டிற்குள் நுழைந்தார்கள்.

விசாலாட்சி, முஸ்தபாவைக் கண்டதும் சினங் கொண்டு 'ஏண்டா! கிருஷ்ணனை ஏன் நேற்று அடித்தாய்?' என்று கேட்டாள். அவனை அடிக்க எழுந்தாள்.

'அவனை அடிக்காதே அம்மா! எனக்காக இன்று அவன் அடி வாங்கினன்' என்று கிருஷ்ணன் விவரத்தைக் கூறினன்.

விசாலாட்சி முஸ்தபாவை மார்போடு அணைத்துக் கொண்டாள்.

கொஞ்ச நேரத்துக்குப் பின் முறித்துப்போட வேண்டிய முஸ்தபாவின் உள்ளங் கைக்கு அவள் ஒத்தடம் கொடுத்துக் கொண்டிருந்தாள்.



# வீரத்தின் விலை

காலைத் தென்றல் குளு குளு வென்று வீசிற்று. மரங்களின் காதுகளில் அது என்ன ரகஸியத்தைக் கூறிற்றோ! அவைகள் ஆனந்தமாகத் தலையை ஆட்டின.

ஆற்காட்டு நவாபின் அரண்மனைச் சாளரங்களில் தொங்கிக் கொண்டிருந்த பட்டுத் திரைகள் அசைந் தாடின. உள்ளே சோபாவில் சாய்ந்திருந்த சந்தா சாஹிபின் சிகையை முத்தமிட்டுச்சென்றது இளங்காற்று. ஒரு கற்றைத் தலைமயிர் அவர் நெற்றியில் புரண்டு விழுந்தது—வெண்ணிலவை மறைக்க வந்த கருமுகிலைப் போல்.

சந்தாசாஹிப் கண்களை மூடிச் சிந்தித்துக் கொண்டி ருந்தார். இச்சமயம் உள்ளே நுழைந்தார் ஆற்காட்டு இளவரசர் சப்தர் அலி.

என்ன நடக்கப் போகிறதோ என்று வேடிக்கை பார்க்க சாளரத்தின் வழியே எட்டிப் பார்த்தான் காலைச் சூரியன்.

ஙொய் என்று ஓர் ஈ பறந்து வந்து, சந்தா சாஹிபின் மூக்கு நுனியில் உட்கார்ந்தது. கண்களை மூடியவண்ணமே சந்தா அதை ஓங்கி அடித்தார். ஈ பறந்துவிட்டது. சந்தா சாஹிபின் மூக்குத்தான் வலித்தது.

'பலே! மச்சான்! பாங்கியரை அழைக்கட்டுமா?' என்று கேட்டுக் கொண்டே வந்தார் சப்தர் அலி.

கண்களைத் திறந்து பார்த்த சந்தா, 'ஓ! மைத்துனரா! வாருங்கள்! பாங்கியர் எதற்காக?' என்று கேட்டார்.

'தூங்க வேண்டியதாயிருந்தால் தாலாட்டுப் பாடச் சொல்லலாம். எழுந்திருக்க வேண்டியதாயிருந்தால் பள்ளி எழுச்சி பாடச் சொல்லலாம்.'

'ஹூம்! நான் தூங்குவதாகவா நினைத்தீர்கள்?'

'இல்லை! தூக்கத்தில் விழித்துக் கொண்டிருந்தீர்கள்! விழிப்பில் தூங்குவதைக் காட்டிலும், தூக்கத்தில் விழித்திருப்பது மேல் அல்லவா?'

'தாங்கள் நினைப்பது தவறு. அந்தத் தஞ்சை மன்னனை ரத்தஞ் சிந்தாமலே எப்படி வெல்வது என்றே சிந்தித்துக் கொண்டிருந்தேன்.'

'கோபத்தில் எதிரியைக் கண்ணை மூடிக் கொண்டு ஓங்கி அடிப்பீர்கள். எதிரி பறந்து விடுவான். பாவம்! தங்கள் உடம்புதான் நோகும்.

'நான் ஈயை அடித்ததைக் கவனித்துவிட்டீர்கள் போலும்! ஹூம்! தஞ்சை மராட்டியனையும் ஈ என்று நினைத்துத் தப்புக் கணக்குப் போட்டுவிட மாட்டேன். தக்க முன்னேற்பாடுகள் செய்தே போர் தொடங்குவேன்.'

'ஏற்பாடுகள் யாவும் முடிந்துவிட்டன. நாளையே போருக்குப் புறப்படும்படி தந்தை ஆணை பிறப்பித்து விட்டார்.'

'அப்படியானால் புறப்படுவோம். அல்ஹம்து லில்லாஹ்.'

∴ ∴ ∴

ஆற்காட்டு நவாப், அலிதோஸ்த்கான் முன் இளவரசர் சப்தர் அலியும், சந்தா சாஹிபும் நின்று கொண்டிருந்தனர்.

நவாப், போருக்குப் புறப்படும் தம்முடைய குமாரருக்கும், மருமகனுக்கும் விடை தந்து கொண்டிருந்தார்.

'படைக்கு சப்தர் அலியே தலைமை தாங்கிச் செல்லட்டும். சந்தா சாஹிப்! நீங்கள் சப்தர் அலிக்குத் துணையாகச் செல்லுங்கள். தஞ்சை மராட்டிய மன்னன் நமக்குச் செலுத்தி வந்த கப்பத்தைக் கட்ட மறுப்பது புரட்சிக்கு அறிகுறி. முளையிலேயே புரட்சியைக் கிள்ளி எறிய வேண்டும். இவனைச் சும்மா விட்டுவிட்டால் இதர சுண்டெலிகளும் குதிபோடத் தொடங்கிவிடும். இது நம் கௌரவத்தைப் பொறுத்த விஷயமாகும். ஆற்காட்டுக் கொடி பட்டொளி வீசிப் பறக்க வேண்டும். தாழ்ந்து போக விடக்கூடாது. ஆற்காட்டு மக்கள் நெஞ்சுயர்த்தி நடக்க வேண்டும். உங்கள் சீரிய செயலால் ஆற்காட்டு அரசின் கௌரவத்தை உயர்த்த வேண்டும். என் துவா. போய் வாருங்கள்!' என்றார் ஆற்காட்டு நவாப்.

'தந்தையே! தஞ்சையைப் பணிய வைப்பேன். வழக்கம் போல் கப்பம் கட்டும்படிச் செய்வேன். தவறினால் தஞ்சையைத் தரைமட்டம் ஆக்கிவிட்டுத் திரும்புவேன்' சப்தர்அலி வீரத்துடன் பேசினார்.

'குமாரா! தஞ்சையைத் தரைமட்டம் ஆக்குவதால் மக்கள் தாம் அவதிப்படுவார்கள். மன்னன் இழைக்கும் தவறுக்கு, மக்களைத் தண்டிக்க வேண்டாம். பெண்கள், குழந்தைகள், வயது முதிர்ந்தோர் இவர்களுக்கு யாதொரு

திங்கும் நேராவண்ணம் பார்த்துக் கொள்ளுங்கள். எதிர்த்து வருபவரையே கொல்லுங்கள். பணிந்து விட்டவர் மீது கருணை காட்டுங்கள். கோபத்தில் மனிதப்பண்புகளை இழந்துவிட வேண்டாம். ஆண்டவன் உங்களுக்குத் துணைபுரியட்டும்!' என்றார் நவாப்.

சப்தர் அலியும், சந்தா சாஹிபும் விடை பெற்றுப் புறப்பட்டனர்.

1734 ஆம் ஆண்டு.

ஆற்காட்டுப் படை, தஞ்சையை நோக்கிப் புறப் பட்டது.

∴ ∴ ∴

முன் இரவு.

காவிரி ஆற்று நீர் பெருக்கெடுத்து ஓடிக்கொண்டிருந்தது. வெண்ணிலவு எல்லாப் பொருட்களையும் வெண்ணிற மாக்கிக் கொண்டிருந்தது.

உலகம் ஆழ்ந்த நித்திரையில் இருந்த அவ்வேளையில், இரண்டு முஸ்லிம் பக்கீர்கள் படித்துறையில் இறங்கினர். ஆற்றில் குதித்து அசாதாரணத் துணிச்சலுடன் எதிர்க்கரைக்கு நீந்திச் சென்றனர்.

புதிய நீர் அவர்களை அமிழ்த்திவிட முயன்றது. கை, கால்களை ஓய்ந்து போகும்படிச் செய்தது. அவர்களை விழுங்கி ஏப்பம் விடத் தயாராயிருப்பதைப் போல் சுழித்துச் சுழித்துச் சென்றது. புரண்டு விழுந்தும், பொங்கி எழுந்தும் வெள்ளம் பயங்கரமாக ஓடிக்கொண்டிருந்தது.

சிதறும் நீர்த்திவலைகள் துள்ளும் கெண்டை மீன்களை நினைவு படுத்தின.

பக்கீர்கள் அஞ்சவில்லை; தளரவில்லை. மேலும் மேலும் நீந்திக் கொண்டே சென்றனர். ஆயிற்று! இன்னும் கொஞ்சம் நீந்தினல் கரையை எட்டிப்பிடித்து விடலாம். இச்சமயம் எதிர்க் கரையில் இரண்டு குதிரை வீரர்கள் வந்தனர். ஆற்றங்கரைகளைக் காவல் காக்கும் தஞ்சை வீரர்கள் அவர்கள்.

அவ்வீரர்கள் நீந்திவரும் பக்கீர்களைக் கவனித்து விட்டனர். உடனே செடிமறைவில் ஒழிந்து கொண்டனர். பக்கீர்கள் அவர்களைக் கவனிக்கவில்லை. நீந்திச் சென்று கரை ஏறினர். உடனே குதிரை வீரர்கள் உருவிய வாட்களுடன் அவர்களை மடக்கிக் கொண்டனர்.

'யார் நீங்கள்?' ஒரு குதிரை வீரன் அதட்டினன்.

'பார்த்தால் தெரியவில்லையா? நாங்கள் பக்கீர்கள்.'

'பார்த்தால் தெரிகிறது, யோசித்தால் புரியவில்லை. பக்கீர்கள் இந்த நள்ளிரவில் பயங்கரமாக ஓடும் புதிய ஆற்று வெள்ளத்தைக் கடந்து வரவேண்டிய அவசியம் என்ன?'

'அக்கரையில் ஆற்காட்டுப் படை வந்து கூடாரம் அடித்துத் தங்கியிருக்கிறது. அவர்களைக் கண்டால் பயமாயிருக்கிறது. ஆகையால் தஞ்சைக்குப் போய்விடக் கருதி ஆற்றைக் கடந்தோம்.'

'முஸ்லிம் போர் வீரர்களைககண்டு, முஸ்லிம் பக்கீர்கள் அஞ்சுவானேன்?'

'அவர்கள் கொலைகாரர்கள். துஷ்டனைக் கண்டால் தூரநட என்பதே எங்கள் கொள்கை. வீட்டு விளக்கு என்பதற்காக அதை யாரும் முத்தம் கொடுக்க மாட்டார் கள். எங்கள் வீடு, எங்கள் வீட்டு விளக்காலேயே எரிந்து விட்டது. புகலிடம் தேடியே நாங்கள் தஞ்சையை நோக்கி வந்தோம். ஆற்காட்டுப் படைபலத்தை நாங்கள் நன்கு தெரிந்து கொண்டோம். அதைத் தங்கள் மன்னர் சரபோஜியிடம் தெரிவிக்க விரும்புகிறோம். எங்களை மன்னரிடம் அழைத்துச் செல்லுங்கள்!' என்றனர் அப் பக்கீர்கள்.

அவ்வாறே அவர்கள் குதிரை வீரர்களால் மன்னர் சரபோஜியிடம் அழைத்துச் செல்லப்பட்டனர்.

தஞ்சை மன்னர் சரபோஜி அவ்வேளையில் தளபதி யுடன் போரைக் குறித்தே ஆலோசனை செய்து கொண் டிருந்தார். 'தங்கள் தரிசனம் என் பாக்யம்! தங்களுக்கு நான் என்ன பணிவிடை செய்யட்டும்?' என்றார் சரபோஜி, முஸ்லிம் பக்கீர்களைப் பார்த்து.

'எங்களுக்குப் பணிவிடை செய்ய வேண்டாம். மக்களுக்குத் தொண்டு செய்தால் போதும். நாங்கள் தங்கள் பிரஜைகள். ஆற்றைக் கடந்து அக்கரைக்குச் சென்றிருந்தோம். எதிரிப் படைகள் திமுதிமு வென்று இறங்கியிருப்பதைக் கண்டோம். நாங்கள் கண்டவற்றை மகாராஜாவிடம் கூறவே வந்தோம்.'

'நீங்கள் என்ன கண்டீர்கள்?'

'ஒரு லட்சம் போர் வீரர் ஆற்காட்டு இளவரசர் சப்தர் அலியின் தலைமையில் வந்திருக்கிறார்கள். தங்க

ளிடம் அவ்வளவு போர்வீரர் இல்லையே! வீணே போரில் அழிவதை விட சமாதானம் செய்து கொள்வது சிறந்த தல்லவா? மக்கள் அனுவசியமாக மாண்டு மடிவார்கள். உதிரம் ஆருக ஓடும். மக்களைப் போரிலிருந்து காப்பதே அவர்களுக்குச் செய்யும் சிறந்த பணிவிடையாகும்.'

'நாங்கள் போர்செய்ய விரும்ப வில்லையே! ஆற்காட்டு நவாப் அல்லவா போருக்கு வந்திருக்கிருர். நாங்கள் பாதுகாப்புப் போர்தான் செய்யப்போகிருேம். ராஜ்யத்தை போர் செய்யாமலே ஆற்காட்டுப் படையிடம் ஒப்பித்து விட நாங்கள் தயாராயில்லை. எங்கள் உடம்பிலும் வீரர் களின் உதிரம் ஓடுகிறது.'

'கப்பம் கட்டிவிட்டால் ஆற்காட்டுப் படை போய் விடுமல்லவா? கப்பம் தொடர்ந்து கட்டுவதாக வாக்குறுதி அளிக்கப்பட்டிருக்கிறதல்லவா? வாக்குறுதியை மீறுவது நல்லதாகுமா?

'நான் வாக்குறுதி அளிக்கவில்லை. என் மூதாதையர் அளித்தனர். என் மூதாதையர் அடிமையாயிருந்தால் நானும் அடிமையாயிருக்க வேண்டுமா? அடிமைப் பட்டிருப்பவர்கள் விடுதலைபெற விரும்புவது இயற்கையே. தன்மானம் உள்ள எந்த மன்னனும், மற்ருெரு மன்ன னுக்குக் கப்பம் கட்டுவதை விரும்பமாட்டான். அப்படிக் கட்டிக் கொண்டிருந்தால் ஒவ்வொரு விநாடியும் தான் அடிமை எனும் எண்ணமே உண்டாகிக் கொண்டிருக்கும். நான் போரிடுவேன். ஆற்காட்டுப் படையை வெல்வேன். அல்லது வீரமரணம் எய்துவேன். ஆற்காட்டுப் போர் வீரரின் தொகையைக்கண்டு நான் அஞ்சவில்லை. என்

தோள் வலிமையைப் போர்க்களத்தில் காட்டுவேன். பக்கீர் வேடத்தில் தூதராக வந்தது குறித்து மகிழ்கிறேன் ஆற்காட்டு இளவரசரே! நாளை போர்க்களத்தில் சந்திக்கலாம்.' என்றார் சரபோஜி.

இவ்வுரையைக் கேட்டதும் பக்கீர் வேடத்தில் இருந்த சப்தர் அலியும், சந்தா சாஹிபும் மறைத்து வைத்திருந்த வாட்களை ஆடைகளிலிருந்து எடுத்து உருவினர். எட்டி நின்றனர். தஞ்சைத் தளபதியும் வாளை உருவிக் கொண்டார்.

'பொறுங்கள்! ஆற்காட்டு இள்வரசரே! பயப்பட வேண்டாம். தங்கள் தோழரை அழைத்துக்கொண்டு என்னிடமே நேரில் பேச வந்ததற்காக மெச்சுகிறேன்; மதிக்கிறேன். சிங்கத்தின் குகையில் தன்னந் தனியே துணிச்சலுடன் நுழைந்ததற்காகப் பாராட்டுகிறேன். வீரனை வீரனே அறிவான். தங்களுக்கு இங்கே ஒரு தீங்கும் செய்ய மாட்டேன். நான் அவ்வளவு நீசனல்ல. தனியே வந்தவர்களைக் கொல்வது வீரமாகாது. தூதராகவே உங்களைப் பாவிக்கிறேன். உங்களுக்குத் தீங்கு விளைவித்து என்மீது களங்கத்தை உண்டாக்கிக் கொள்ள விரும்பவில்லை. பாதுகாப்புடன் உங்கள் இருவரையும் எல்லையில் கொண்டுபோய் விட்டு வரும்படிச் செய்கிறேன். நாளை போர்க்களத்தில் சந்திப் போம். அப்போது வீரத்தைப் பரீட்சித்துக்கொள்வோம்!'

இவ்வாறு மன்னர் சரபோஜி கூறி கைகளைத்தட்டினார்.

வீரர் இருவர் வந்து வணங்கி நின்றனர்.

'சப்தர் அலியையும், சந்தா சாஹிபையும் சுட்டிக் காட்டி 'இவர்களைத் தக்க மரியாதையுடன் பல்லக்கில் ஏற்றி, பாதுகாப்புடன் ஆற்காட்டு எல்லையில் விட்டு வாருங்கள். ஜாக்ரதை! இவர்களுக்கு யாதொரு தீங்கும் நேரிடக் கூடாது.'

சரபோஜியின் இவ்வுரையைக் கேட்டு ஆற்காட்டு இளவரசர் வியந்தார்.

'சரபோஜி! தங்களுக்குப் பார்க்கும் கண் இருக்கிறது. எங்களை அடையாளம் கண்டு கொண்டீர்களே!'

'கண் இருப்பது மட்டுமல்ல, தாங்களும் வீரரே என்று புரிந்துகொள்ளும் அறிவும் இருக்கிறது. தங்களுக்கு விருந்து உபசாரம் செய்து அனுப்ப ஆசைப் படுகிறேன். உணவில் விஷம் இருக்கலாம் என்று தாங்கள் உண்ண மறுப்பீர்கள். சென்று வரலாம்.'

சப்தர் அலியும், சந்தா சாஹிபும் விடை பெற்றுப் புறப்பட்டனர்.

∴ ∴ ∴

போர் மூண்டது...இருதரப்புப் போர்வீரரும் வீராவேசத்துடன் மோதினர். வாட்களைச் சுழற்றிச் சுழற்றி வீசினர். இருபுறமும் வீரர்கள் மடிந்து விழுந்தனர். உதிரம் பெருக்கெடுத்தோடிற்று. ஆற்காட்டுப் பீரங்கிகள் முழங்கின. தஞ்சை வீரர்களின் உயிரைக் குடித்தன. இறுதியில் தஞ்சை மன்னர் சரபோஜி தோல்வியுற்றார். ஆற்காட்டுப் படை வெற்றி பெற்றது.

சரபோஜி கைது செய்யப்பட்டு, சப்தர் அலி முன் கொண்டு வரப்பட்டார்.

'சரபோஜி! உங்கள் வீரத்தை மெச்சுகிறேன்; பாராட்டுகிறேன். என்னை உயிருடன் எல்லையில் கொண்டு வந்து விட்டதற்காக நன்றி செலுத்துகிறேன். ஆனால் நான் என் தந்தைக்குக் கட்டுப்பட்டவன். அவர் ஆணைப்படி வந்திருக்கிறேன். அவர் நோக்கத்தை நான் நிறைவேற்றியே ஆகவேண்டும். இல்லையானால் அவர் என்னை என்ன செய்வாரோ அறியேன். ஆகையால் கப்பம் செலுத்தி விடுங்கள். விட்டுவிடுகிறேன்.'

சரபோஜி நிமிர்ந்து பார்த்தார். 'கப்பம் கட்ட முடியாது. தாங்கள் என்ன செய்ய விரும்புகிறீர்களோ செய்யுங்கள். நான் என் முடிவை மாற்றிக் கொள்ள மாட்டேன்' என்றார்.

இவ்வுரையைக் கேட்ட ஆற்காட்டு இளவரசர், இருக்கையிலிருந்து எழுந்து, சரபோஜியை இறுகத் தழுவிக் கொண்டார். 'அன்பரே! இன்று முதல் நீங்கள் சுதந்தரமாகத் தஞ்சையை ஆளலாம். கப்பம் செலுத்த வேண்டியதில்லை. உங்களை விடுதலை செய்கிறேன்' என்றார்.

'தங்கள் தந்தை கோபித்துக் கொண்டாரலோ!' என்று கேட்டார் சரபோஜி.

'என்னுடைய சீரிய செயலால் ஆற்காட்டின் கௌரவத்தை உயர்த்தியிருக்கிறேன். இது தவறு என்றால் என்னை என்னவேண்டுமானாலும் செய்து கொள்ளுங்கள் என்று கூறிவிடுவேன்' என்றார் சப்தர் அலி.

தஞ்சை மன்னர் விடுதலை செய்யப்பட்டார். சப்தர் அலிக்கு அருகே சரபோஜிக்கும் சமமான ஆஸனம் அளிக்கப்பட்டது. விருந்து நடைபெற்றது. இரு படைகளும் கேளிக்கைகளில் ஈடுபட்டன. ஆற்காட்டுக் கொடியும், தஞ்சைக் கொடியும் அருகருகே பட்டொளி வீசிப் பறந்தன. இரு தரப்பினரும் வெற்றி விழா கொண்டாடினர்.

ஊர் திரும்பிய குமாரர் சப்தர் அலியை, ஆற்காட்டு நவாப், அலி தோஸ்த்கான் அன்போடு அணைத்துக் கொண்டார். தம்முடைய குமாரரின் செயலைப் பாராட்டினர்.

---

# நல்ல முடிவு

'அஸ்ஸலாமு அலைகும் மவ்லவி சாஹிப்!'

'வ அலைகு முஸ்ஸலாம்'

'இரவு பத்து மணிக்கு, ஜரிகைத் தலைப்பாகையும், ஜிப்பாவும் அணிந்துகொண்டு எங்கே அவசர அவசர மாகப் போகிறீர்கள் மவ்லவி சாஹிப்?'

'சௌகார் நூருத்தீனுக்கு நிக்காஹ்.'

'யா அல்லாஹ்! அவருக்குக் கலியாணமா? அவர் பெரும் பணக்காரர்–பிரபலஸ்தர். ஊராருக்குச் சொல் லாமல், கொள்ளாமல் நிக்காஹ் செய்துகொள்ளுகிறாரா?'

'ஆம்! பாபம்! அவருடைய முதல்தாரம் மௌத் ஆகி நெடுங்காலம் ஆகிவிட்டது. தற்போது செய்து கொள்வது இரண்டாவது கலியாணம். ஆகையால் மிகவும் எளிய முறையில் செய்துகொள்ள விரும்புகிறார்.'

'என்ன இருந்தாலும் ஊராருக்கு ஒருவேளை விருந்து கூட வைக்காமலா?'

'விருந்துகள் வைப்பதைக் காட்டிலும், வைக்காமல் இருப்பதே மேல் என்பது என் அபிப்பிராயம்.'

'ஏன் மவ்லவி சாஹிப்?'

'ஏனா? விருந்து உண்டு விட்டு, இது சொத்தை, அது சொள்ளை-பிரியாணியில் நெய்யா விட்டிருக்கிறான்? விளக்கெண்ணெயை விட்டுத் தயார் செய்திருக்கிறான்!' என்று குறை கூறிக்கொண்டே போகிறார்களே!'

'செய்வதைத் திருந்தச் செய்ய வேண்டும் மவ்லவி சாஹிப். வீட்டில் சமையல் கெட்டுப் போனால் பெண்கள் மீது சீறி விழுபவர்கள், ஊராருக்கு விருந்து வைக்கும் போது ஜாக்ரதையாகவே நடந்துகொள்ள வேண்டும். நாலுபேர் வருவார்கள், நாலு குறைகள் கூறுவார்கள் என்பதை முன்கூட்டி உணர்ந்தே செயலாற்ற வேண்டும். ....அது இருக்கட்டும். பெண் யார்?'

'கங்காதேவி'

'கங்காதேவியா? அது யார்?'

'அவள் ஓர் இந்துப் புரோகிதரின் மனைவி. இளம் வயதினள். நல்ல அழகி—சாந்தமானவள். பாபம்! அவளை இரண்டாம் தாரமாக ஐம்பதுவயதுக்கு மேற்பட்ட புரோகிதர் மணந்துகொண்டார். அத்துடன் தினசரி 'அடி அடி' என்று அடித்துத் துன்புறுத்தி வந்தார். பாபம்! அவள் கொடுமை தாளாமல் வீட்டைவிட்டு ஓடிவந்து சௌகார் நூருத்தீன் வீட்டில் அடைக்கலம் புகுந்து முஸ்லிம் ஆகிவிட்டாள். இன்று காலையில்தான் அவளை நான் இஸ்லாத்தில் சேர்த்தேன்; 'முனீரா' என்றும் பெயர் இட்டேன். நூருத்தீனையே நிக்காஹ் செய்துகொள்ள அவள் இசைந்து விட்டாள். அந்த நிக்காஹ்வை நிறைவேற்றவே போய்க் கொண்டிருக்கிறேன். அப் பெண், கூட்டத்தைக் கூட்டிக் கலியாணம் செய்து கொள்வதை விரும்பவில்லை. ஆகவே இந்த ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. முக்கியமான நண்பர்கள் மட்டுமே அழைக்கப்பட்டிருக்கிறார்கள். நான் வரட்டுமா?'

'போய் வாருங்கள் ஹஜ்ரத்!'

மேற்கண்ட உரையாடல், மவ்லவி நஸ்ருல்லா விற்கும், அவருடைய நண்பருக்கும் டில்லியில் உள்ள ஒரு மஹல்லாவில், 1398 ஆம் ஆண்டில் நடைபெற்றது.

நிக்காஹ் நடைபெற்ற மறுநாளே ஊர்க்காஜியாரிடம் வழக்கு ஒன்று வந்தது. வாதி, சௌகார் நூருத்தீன். புரோகிதர் பிரதிவாதி. மனமுவந்து, முஸ்லிம் ஆகி தம்மைப் பலர் முன்னிலையில் கலியாணம் செய்துகொண்ட முனீரா எனும் கங்காதேவியைத் தாம் வீட்டில் இல்லாத போது அவள் இஷ்டத்துக்கு விரோதமாகப் புரோகிதர் அடித்து இழுத்துக்கொண்டு போய்விட்டதாகவும், அவளைத் தம்மிடம் கொண்டுவந்து விடும்படிப் புரோகித ருக்குக் கட்டளை பிறப்பிக்க வேண்டும் என்றும், அவள் இனி தம்முடைய மனைவியே என்றும், அவள் முஸ்லிம் ஆகி விட்டதால், புரோகிதருக்கு இனி உரியவள் ஆகமாட்டாள் என்றும் பிராதில் கண்டிருந்தது.

ஊர்க்காஜியார், மவ்லவி நஸ்ருல்லாவையும், அத் திருமணத்தின் போது ஆஜராயிருந்தவர்களையும் அழைத்து விசாரித்தார்.

கங்காதேவி, நூருத்தீன் வீட்டுக்கு வந்து, முஸ்லிம் ஆகி, அவரை மணந்துகொண்டது உண்மை என்று தெரியவந்தது.

கங்காதேவி, இந்து பிராமணப் பெண் ஆயினும், சுயமாக மதம் மாறி, பலர் முன்னிலையில் சட்டப்படி நூருத்தீனை நிக்காஹ் செய்துகொண்டதால், இனி அவளுக்கும், அவளுடைய பழைய உறவினர்களுக்கும் யாதொரு தொடர்பும் இல்லை என்றும், இனி அவள், நூருத்தீனுக்கே உரியவள் என்றும் ஊர்க்காஜியார் தீர்ப்புக் கூறினர்.

அதற்கு அடுத்த நாளே புரோகிதர், மன்னர் மஹ்மூதிடம் அப்பீல் செய்தார். மன்னர் மஹ்மூது வழக்கை விசாரித்தார். புரோகிதர் மிகவும் அடக்க, ஒடுக்கமாக மன்னர் முன் வந்து நின்ருர்.

'ஆலம்பனுஹ்! என் இளம் மனைவி ஓர் அப்பாவி. அவள் நூருத்தீன் வீட்டுக்குப் போகவும் இல்லை; முஸ்லிம் ஆகி அவரை மணந்து கொள்ளவும் இல்லை. எல்லாம் கட்டுக் கதை; வெறும் பொய். அவள் என் வீட்டிலேயே அன்று முழுதும் இருந்தாள். நூருத்தீனுக்கு நெடுநாளாக அவள்மீது கண் உண்டு. அதற்காக இப்படிப் பொய்க்கதை கட்டி, என் மனைவியைத் தமதாக்கிக்கொள்ள முயற்சி செய்கிருர். மவ்லவி சாஹிப் கூறியதும், கலியாணத்தில் ஆஜராயிருந்ததாக நடித்தவர்கள் கூறியதும் முழுப் பொய். நூருத்தீன் அவர்கள் அனைவருக்கும் பணம் கொடுத்து, பொய்சாட்சி சொல்லும்படித் தூண்டி யிருக் கிருர். என் மனைவியையே நேரில் கேளுங்கள்! எனக்கு நியாயம் வழங்குங்கள்!' என்று கூறி முடித்தார்.

மன்னர், கங்காதேவியை அழைத்து விசாரித்தார்.

அவள் நாணிக் கோணி, ஒடுங்கிக் குன்றி, கண்களில் கங்கைப் பிரவாகம் எடுக்க, இரு கைகளாலும் முகத்தை மூடிக்கொண்டு, தன் வாக்குமூலத்தைக் கொடுத்தாள்.

'ஆலம்பனுஹ்! என் மணுளர் கூறியது முற்றிலும் உண்மை. நான் யாதொன்றும் அறியேன். ஐயோ! எனக்கு இது என்ன சோதனை? நான் யார் வீட்டிற்கும் போகவில்லை. நான் முஸ்லிம் ஆகி, நூருத்தீனை மணந்து கொள்ளவில்லை. நான் அவர் முகத்தையே பார்த்ததில்லை. நிக்காஹ் நடைபெற்றதாகக் கூறப்படும் அன்று, நான் என் வீட்டிலேயே இருந்தேன்.' என்று கூறி 'ஓ' வென்று அழலாளுள்.

நூருத்தீன் குறுக்கிட்டார்.

'பொய் சொல்லாதே கங்கா! கிழட்டுப் புரோகித ருக்குப் பயந்து, புரண்டு பேசாதே கங்கா! சபலபுத்தி படைத்தவள் என்று முன்பே தெரிந்திருந்தால் இப்படிச் செய்திருக்க மாட்டேனே கங்கா! உன் சொல்லை நம்பி மோசம் போனேனே! என் மானம், மரியாதை எல்லாவற் றையும் இழந்து தவிக்கிறேனே! நீ இப்படிச் செய்ய லாமா? இப்படித் திடீர் என்று மாறலாமா?' என்று உருக்கமாகக் கேட்டார் நூருத்தீன்.

மவ்லவி நஸ்ருல்லா பேசினார்:—

'யா அல்லாஹ்! இதே ஆடை, அணிகள் அணிந்து கொண்டு இஸ்லாத்தில் சேர்ந்தாயே! கலிமாவைச் சரி யாக உச்சரிக்கும்படி பலமுறை உன்னிடம் கூறினேனே! பன்னிப் பன்னிக் கேட்டும் மனமுவந்தே நூருத்தீனை நிக்காஹ் செய்து கொள்வதாகச் சொன்னாயே! 'முனீரா' என்று அழகான பெயர் உனக்கு வைத்தேனே! அப் பெயரைக் கேட்டு நீ எவ்வளவு சந்தோஷப்பட்டாய்! என் கால்களைத் தொட்டு, உன் கண்களில் ஒற்றிக் கொள்ளப் போனபோது, அவ்வாறு செய்ய வேண்டாம் என்று தடுத்தேனே! இப்படித் திடீர் என்று ஓர் இரவில் மாறிவிட்டாயே! எங்கள் நற்பெயருக்கே களங்கம் உண்டுபண்ணி விட்டாயே! இது நியாயமா? இது தர்மமா? இது பெண் குலத்துக்கு அடுக்குமா? வானமே இடிந்து விழுந்துவிடக் கூடாதா?......மகளே! முனீரா! கிழட்டுப் புரோகிதருக்கு அஞ்சி இப்படி உளருதே! தைரியமாக நடந்ததை மன்னரிடம் சொல்! கொடுமை களுக்குப் பயந்து கோழை ஆகிவிடாதே! இங்கு வந்த பின் மன்னரின் அடைக்கலம் பெற்று விட்டாய். அல்லாஹ்வும், அரசரும் மெய்யின் சார்பிலேயே

இருப்பர். உனக்குப் போதிய பாதுகாப்பு அளிப்பர். வருங்காலத்தைப்பற்றி நன்கு சிந்தனை செய்து பார்! சொர்க்கத்துக்கு வந்து மீண்டும் நரகத்துக்குப் போகிருயே! இதென்ன சபல புத்தி? உண்மையைக் கூறிவிடு முனீரா' என்று கேட்டுக்கொண்டார் மவ்லவி சாஹிப்.

'இப்படிப் பயந்து பொய் கூறுபவள், அன்று ஏன் அவ்வாறு நடந்துகொள்ள வேண்டும்?' என்று நிக்காஹ்வில் ஆஜராயிருந்த சாட்சிகள் கங்காவைக் கடிந்தனர்.

மன்னர் மஹ்மூதின் மூளை குழம்பிற்று. வழக்கு சிக்கலானதாக இருந்தது. அவர் சிந்தனையில் ஆழ்ந்தார். யார் கூறுவது உண்மை? வாதியும், சாட்சிகளும் மிகவும் கண்ணியமானவர்கள் — பிரபலஸ்தர்கள். இதற்கு முன் அவர்கள் மீது யாதொரு களங்கமும் ஏற்படவில்லை. அவர்கள் பொய் சொல்லவேண்டிய அவசியமே இல்லை. நூருத்தீன் விரும்பினுல் இத்தகைய எத்தனையோ அழகிகளை மணந்துகொள்ளலாம். அவரும் இதுவரை யாதொரு குற்றமும் செய்ததில்லை.

நன்கு விசாரித்ததில், கங்காதேவியை நூருத்தீன் வீட்டில் எல்லோரும் கண்டது உண்மை என்றே வெளியாயிற்று. புரோகிதரோ, கங்கா அன்று முழுதும் வீட்டிலேயே இருந்ததாகக் கூறுகிருர். அவர் கூற்றுக்குத்தான் சாட்சிகள் இல்லை. ஆனுல் அவர் கூறுவதிலிருந்தும், கங்கா படும் துயரத்திலிருந்தும் அவர்கள் கூறுவதும் மெய் என்றே மன்னர் மஹமூதுக்குப் பட்டது. என்ன செய்வதென்று மன்னருக்குப் புரியவில்லை. வழக்கு விசாரணையை ஒத்தி வைத்தார்.

∴ ∴ ∴

சில தினங்களுக்குப் பின். ஓர் இரவு மணி பத்து இருக்கும்.

நூருத்தீன் வீட்டிலிருந்து ஒரு பெண், புர்கா அணிந்த வண்ணம் வெளியே வந்தாள். அக்கம், பக்கம் பார்த்து வெளியேறினாள்.

தெருவில் ஜன நடமாட்டம் அதிகம் இல்லை. நூருத்தீன் வீட்டுக்கு எதிரே மரத்தடியில் ஒரு பக்கீர் நின்று கொண்டிருந்தார். அப்பெண்ணை அப்பக்கீர் பின் தொடர்ந்தார்.

அப்பெண், வண்ணாரத் தெருவில் நுழைந்து, ஒரு வீட்டிற்குள் புகுந்தாள். பக்கீர் அவ்வீட்டுக்கு முன் போய் நின்றார். 'அம்மா! பிச்சை போடு தாயே!' என்று குரல் கொடுத்தார்.

உள்ளே நுழைந்த பெண் வெளியே வந்து பக்கீருக்குக்காசு கொடுத்தாள். இப்போது அவள் புர்காவை தலையிலிருந்து நீக்கி விட்டாள். பக்கீர் அவள் முகத்தைக் கண்டதும் வியப்படைந்தார். உடனே பக்கீர் காசை வாங்கிப் பார்த்தார். அது ஒரு தங்க நாணயம். என்ன ஆச்சரியம்! ஒரு வண்ணாத்தியிடம் பிச்சை போடத் தங்க நாணயமா? அது எப்படி வந்தது?

'அம்மா! தங்களை சௌகார் நூருத்தீன் அவசரமாக அழைத்து வரும்படிச் சொன்னார். மிக அவசரம். ஏதோ ஒரு சேதி சொல்ல மறந்து விட்டாராம். உடனே இப்போதே வந்து போய்விடுவீர்களாம். உங்கள் பின்னாலேயே போகும்படி என்னை மாறு வேடத்தில் அனுப்பினார்' என்றார் பக்கீர்.

அப்பெண் விழித்தாள். 'இப்போது தானே அங்கிருந்து வந்தேன்!' என்றாள்.

'ஆம்! முக்கியமான ஒரு விஷயத்தைச் சொல்ல மறந்து விட்டார். அதற்குள் நீங்கள் புறப்பட்டு விட்டீர் கள். உடனே அனுப்பினுர்.'

பக்கீர், முன் சென்ருர். அப்பெண் – வண்ணுத்தி பின் தொடர்ந்தாள். இப்போது முகத்தை புர்காவால் மீண்டும் மூடிக் கொண்டாள்.

இருவரும் இரண்டு தெருக்கள் கடந்து சென்றிருப் பார்கள். ஓர் இருட்டான இடம் வந்ததும் பக்கீர் கைகளைத் தட்டினுர். பத்துப்பேர் இரு மருங்கிலிருந்தும் பாய்ந்து வந்தனர். வண்ணுத்தியின் வாயில் துணியைத் திணித்தனர். வண்ணுத்தி மருண்டாள்.

பக்கீர் தம் வேடத்தைக் கலைத்தார். இப்போது மன்னர் மஹமூது நின்றிருந்தார். வண்ணுத்தியின் கண் கள் ஆச்சரியத்திஞல் அகல விரிந்தன.

'இவளை அரண்மனைக்குக் கொண்டுபோய்க் கைது செய்து வையுங்கள்' என்ற உத்தரவு பிறந்தது. அந்தப் பத்துப்பேரும் அப்பெண்ணை அழைத்துச் சென்றனர்.

ஃ ஃ ஃ

மன்னர் மஹமூது மீண்டும் விசாரணையைத் தொடங் கினுர்.

இப்போது கங்கா தேவிக்கு அருகில் வண்ணுத்தியும் நின்று கொண்டிருந்தாள். அவளையும், காங்கா தேவியை யும் சபையோர் மாறி மாறிப் பார்த்தனர். என்ன விந்தை! கங்கா தேவியும், வண்ணுத்தியும் ஒரே தோற்றம் உடைய வர்களாயிருந்தனர். இரட்டைப் பிறவி என்று ஐயுறும் வண்ணம் தோன்றினர். சின்னஞ்சிறு வேறுபாடுகளே காணப்பட்டன. கங்கா நல்ல சிவப்பு நிறம். வண்ணுத்தி கறுப்பு.

நூருத்தீனை மன்னர் அழைத்தார். அவர் கை, கால் கள் நடுங்கிக் கொண்டிருந்தன. வண்ணாத்தியைக் கண்டதும் அவர் கலங்கிப் போனார்.

'இந்தப் பெண்ணை அறிவீர்களா?' என்று கேட்டார் வண்ணாத்தியைச் சுட்டிக் காட்டி, மன்னர் மஹ்மூது.

'ஆ....ஆலம்பனாஹ்! நா .... நான் .... இவளை அறிய மாட்டேன்.'

'ஆம்! நீர் அறிய மாட்டீர்! நான் அறிவேன்! கங்கா தேவியின் தோற்றமுடைய இவளை, கங்கா தேவியின் ஆடை அணிகளை அணிவித்து, வீட்டில் அழைத்து வந்து, கங்கா தேவியைப்போல் நடிக்கச் செய்து, பலர் முன்னிலையில் முஸ்லிம் ஆக்கி, மணந்து கொண்டீர்கள். ஊர்க்காஜியார், மவ்லவி நஸ்ருல்லாஹ், உமது நண்பர்கள் அனைவரையும் ஏமாற்றி விட்டீர்கள். பாபம்! அவர்கள் இந்த வண்ணாத்தியை, கங்கா என்றே உண்மையில் நம்பி மோசம் போயினர். காஜி சாஹிபும், உங்களுக்குச் சாதகமாகத் தீர்ப்புக் கூறிவிட்டார். நீங்கள் நம்பிக்கை மோசடி நாடகம் ஆடிவிட்டீர். இல்லையா?'

'இல்லை! ஆலம்பனாஹ்!'

'என்ன இல்லை? என் எதிரே பொய் சொல்ல உங்களுக்கு என்ன துணிச்சல்? வண்ணாத்தியே எல்லா விஷயங்களையும் கூறி விட்டாள். பணத்தை வாரி அவளுக்குக் கொடுத்து அவளை சொன்னபடி ஆடும் பொம்மை ஆக்கிக் கொண்டீர்கள். கங்கா தேவியின் சாயலைக் கொண்ட இந்த வண்ணாத்தியின் மூலம் உங்கள் நோக்கத்தை நிறை வேற்றிக் கொண்டீர்கள். கங்காவின் மீது உங்கள் பார்வை பட்டு விட்டது. அவள் மீது மோகம் கொண்டு விட்டீர்கள். அவள் பத்தினி. உங்கள் கோரிக்

கைக்கு இணங்க மாட்டாள் என்று அறிந்து பலவந்தமாக அவளைத் தமதாக்கிக் கொள்ள இந்த நாடகம் ஆடியிருக்கிறீர். மெய்யா? பொய்யா?'

அரசரின் குரல் கோபத்தால் ஓங்கிற்று. கண்கள் சிவந்தன.

நூருத்தீன் பிரமித்துப் போனார். அவர் கண்களில் நீர் துளித்தது.

'ஆலம்பனாஹ்! ஆத்திரக்காரனுக்கு புத்திமட்டு. என்னை மன்னிக்கவேண்டும்.' என்று குரல் தழுதழுக்கக் கூறினார்.

'நூருத்தீன்! நீர் ஒரு முஸ்லிம் என்பதையே மறந்து பெரிய சூழ்ச்சி செய்திருக்கிறீர்! ஒவ்வொரு முஸ்லிமும், இஸ்லாமிய மாபெரும் சமூகத்தின் பிரதிநிதியாவான். அவனுடைய ஒவ்வொரு சொல்லும், செயலும் சமூகத்தையே பாதிக்கும். ஒரு தனிப்பட்ட முஸ்லிம் இப்படிச் செய்தான் என்று பிற மதத்தினர் கூற மாட்டார்கள். முஸ்லிம்கள் அநியாயம் செய்கிறார்கள் என்றே பொதுப் படையாகக் கூறுவார்கள். ஆகையால் ஒவ்வொரு முஸ்லிமின் சொல்லும், செயலும், இஸ்லாத்தின் புகழுக்கோ, இகழுக்கோ காரணமாக அமைகிறது. இதை நன்கு உணர்ந்து செயலாற்றுபவர்களே நல்ல முஸ்லிம்கள். நீரோ பெரும் பணக்காரர். முஸ்லிம்களில் எத்தனையோ பேரழகிகள் உங்களை மணந்து கொள்ள 'நான், நீ' என்று முந்திக்கொண்டு வருவார்கள். அப்படி இருக்க இத்தகைய இழிசெயல் புரிந்து முஸ்லிம் சமுகத்துக்கு ஏன் இகழ் தேடித்தருகிறீர்? உங்களைப் போன்றவர், இஸ்லாத்துக்குப் புகழ்தேடித் தராவிடினும், இகழாவது தேடித்தராதிருந்தால் அதுவே மேல்; இஸ்லாத்துக்குச் செய்யும் பெரும் தொண்டு.'

இவ்வாறு மன்னர் மஹமூது உணர்ச்சியோடு உபதேசம் செய்து விட்டுத் தம்முடைய தீர்ப்பைக் கூறினர்.

'நீர் செய்த தவற்றுக்காக ஆறு மாதம் சிறை செல்ல வேண்டும். இஸ்லாம் தண்டனை விதிப்பதிலே பாரபட்சம் காட்டுவதில்லை. இந்த வண்ணாத்தியைப் பலர் முன்னிலையில் முஸ்லிம் ஆக்கி மணந்து கொண்டதால், இவளையே உங்கள் மனைவியாக ஏற்றுக்கொள்ள வேண்டும்.'

மன்னரின் இத்தீர்ப்பைக் கேட்டு சபையோர் பிரமித்தனர். நூருத்தீன் சிலையாய்ச் சமைந்து விட்டார். அவரை ஊர்க்காவலர் சிறையில் அடைத்தனர்.

ஆறுமாதம் கழிந்தது. டில்லி அல்லோல கல்லோலப் பட்டது. டில்லி மீது தைமூர் படை எடுத்து வந்தார். நகர் முழுதும் சூறையாடப்பட்டது. நூருத்தீனின் பெரிய கிடங்குகள் அனைத்தும் கொள்ளை போயின. டில்லி மக்களில் பலர், தைமூரின் படையினரால் கைதிகள் ஆக்கப் பட்டனர். அவர்களுள் புரோகிதரும், கங்கா தேவியும் இருந்தனர். அவர்கள் பட்டாணியர் நாட்டுக்கு அடிமைகளாக அழைத்துச் செல்லப்பட இருந்தனர்.

புரோகிதரும், கங்கா தேவியும் சோகத்தோடு எதிரும் புதிருமாக உட்கார்ந்திருந்தனர். அவர்களின் கைகள், சங்கிலிகளால் இறுகப் பிணைக்கப் பட்டிருந்தன.

ஒரு பட்டாணியப் போர் வீரன் அவர்கள் முன் தோன்றினன். சங்கிலிகளைக் களைந்தான். 'எழுந்திருங்கள்! உங்களுக்கு விடுதலை! நீங்கள் போகலாம்!' என்று கூறினன்.

'எங்களுக்கு விடுதலையா? எங்களை மட்டும் விடுதலை செய்யக் காரணம் என்ன?' என்று வியப்போடு கேட்டார் புரோகிதர்..

'உங்களுக்காக ஒரு முஸ்லிம், எங்கள் தலைவரிடம் பெரும் தொகையைக் கொடுத்து உங்களை விடுதலை செய்யும்படிக் கோரியிருக்கிறார். எங்கள் மன்னர் தைமூர் சம்மதித்து விட்டார்.' என்றான் அப்போர் வீரன்.

'ஆ! அப்படியா? அந்த முஸ்லிம் யார்?' ஆவலுடன் கேட்டார் புரோகிதர்.

'என்னுடன் வாருங்கள்! காண்பிக்கிறேன்!' என்று கூறி அப்போர் வீரன் புரோகிதரையும், கங்கா தேவியையும் அழைத்துச் சென்றான்.

எதிரே சௌகார் நூருத்தீனும், வண்ணாத்தியும் நின்று கொண்டிருந்தனர்.

'இதோ! இவர்தான்!' என்று சுட்டிக் காட்டினான் போர் வீரன். புரோகிதரும், கங்காவும் பிரமித்தனர்.

'கங்கா! என் சகோதரி! என்னை மன்னித்து விடு! மன்னித்து விட்டேன்' என்று உன் வாயால் ஒரு வார்த்தை சொல். என் சொத்து முழுவதையும் உங்கள் விடுதலைக்காகக் கொடுத்து விட்டேன். அதுவே நான் செய்த பாபத்துக்குப் பிராயச்சித்தம். நீங்கள் நீடூழி வாழவேண்டும். அதுவே எனக்குப் போதுமானது. என் போன்றோர் செயல்களால்தான் டில்லிக்கே இக்கதி நேர்ந்திருக்கிறதோ! என்னவோ! அல்லாஹ் காரணமின்றி யாரையும் தண்டிப்பதில்லை. மன்னர் மஹ்மூது என் கண்களைத் திறந்து விட்டார். நான் உங்களுக்கு அல்ல—இஸ்லாத்துக்கே பெரும் துரோகம் செய்து விட்டேன். அல்லாஹ் என்னை மன்னிக்க வேண்டும்.' என்று கண்களில் நீர்மல்கக் கூறினார் நூருத்தீன்.

'அண்ணா! உங்களை மனதார மன்னித்து விட்டேன்!' என்றாள் கங்கா தேவி.



